உ

ஸ்ரீசிவோரக்ஷது.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞானசம்பந்ததேசிகாயநம:

---

தத்துவார்த்ததீபநிரசனம்

ஆகிய

# பிரஹ்மதத்வநிரூபணம்.



ஸ்ரீலஸ்ரீ

சோமசுந் ... கரவர்களால்

இய...

வேதாகம...

...சவசித்தாந்தசபையா...ல்

...ப் இந்தியா பிரஸ்ஸில்

...ட்டது.

கரஹ ஆ

MADRAS.

இதன் விலை ரூபா -

1891

உ

சிவமயம்.

# புத்தகவிளம்பரம்.

| | R. | A. | P. |
|---|---|---|---|
| சிவதத்வசிந்தாமணி ... ...<br>சிவாதிக்யரத்நாவளி முதற்பாகம்<br>do 2-வதுபாகம். | 2 | 8 | 0 |
| சைவசூளாமணி ... ... ... | 1 | 8 | 0 |
| கூரேசவிஜயபங்கம் ... ... ... | 1 | 8 | 0 |
| இராமதத்வதீபிகையினது ஆபாசவிளக்கம் | 1 | 8 | 0 |
| ஆசாரியபிரபாவம ... ... ... | 2 | 8 | 0 |
| சித்தாந்தபூஷணம் ...<br>உத்தமவாததூலவாதூல | 1 | 0 | 0 |
| அர்ச்சாதீபம் | 1 | 0 | 0 |
| பிரஹ்மதத்வநிரூ ... | | 0 | 0 |
| பிரஹ்மதரிசிநி ... | | | 0 |
| சிவகிரிபதிற்றுப் ... ... | | | |

இந்தப்பு இப்போது கிடை மா
வை. "சிவபாரம்யப்பிரதரிசிநி" முதலிய ப்
டன. மொத்தமாய் வாங்குபவர்க்கு கொ
திருந்தோம். அது இப்பே

உ

சிவமயம்.

## விஷய அட்டவணை

பக்கம்

யொருவன் றெரியாமற்செய்யின், அதனது அசுபமறிந்தமற் றொருவ னதனைத்தகைந்திடுத லாவசியகமன்றோ? தீபம் என்னுஞ் சப்தசிரவணமாத்திரத்தானே அது தகையப்பெறாதது என்றுவாதிடல் அஸம்பாவிதமே. அந்தணனொருவன் றனது பிறப்பொழுக்கங்குன்றுவானாயின், அவனை யேனையந்தணர் தம்மினின்றும்வேறுபடுத்தி அவனுக்கு நீருநெருப்புங் கொடுக்கமாட்டார்கள். நீர்கொடார்களென்பது தாங்கணீரெடுக்குந்துறையில் நீர் எடுக்கவொட்டார்களென்பதாம். அந்தணரிடத்தன்றி யேனைக்கீழிட்டகுலத்தவரிடமாதணர்நெருப்புநீருங்கொள்ளுதல் கூடாதென்னுமாசாரத்தை யுற்றுநோக்குவார்க்குத் தீபமானது ஸ்தானபேதத்தால யோக்கியதையுயர்ந்துந்தாழ்ந்துமிருக்குமுண்மை யினிதுவிளங்கலால், யாமீண்டுநிஷேதிக்கப்படுகுந்ததீபம் ஸ்தானபேதத்தால மங்களமிழந்ததேயாமிலையின்றென்றறிதல் ஸாமஞ்சஸ்யமாயிறறு. ஈண்டு யாமதிரஸ்கரிக்கப்படுகுத(அதத்வார்த்தமும், அமங்கலபிரகாசமுமாகிய) தீபமியாது எனின், "கைவல்யநவநீதம்" என்னும் மாயாவாதநூலொன்றற்கு "பொன்னம்பலசுவாமிகள்" என்னுமொருவர் "தத்துவார்த்ததீபம்" எனப்பேரிட்டு வெளிப்படுத்திய உரையேயாம. இத்தவுரை அமங்கலவடிவமான பூர்வபட்சமெனத்தெரிவித்துப் பிரஹ்மதத்வத்தை யாம நிரூபிப்பது அத்தியாவசியகமென் யாவருமுணருமாறு சிலவிரைவுவரைகிற்பாம்.

கைவல்யநவநீதம் என்பது "தாண்டவராயசுவாமிகள்" என்பவரால் சிலகாலத்திற்குமுன் செய்யப்பட்டநூல். இது ஏகான்மவாதத்தைப் பிரதிபாதிப்பது. இதற்குப் பிறையாறு "அருணாசலசுவாமிகள்" என்பவர்பதவுரையும், பதசாரமும் எழுதிவெளியிட்டனர். இந்தவுரையையே மாயாவாதிகள்பலரும் வாசித்துநேசித்துவந்தார்கள். இவ்வுரையாசிரியர்காலமாய்விட்டபின்னர் இவரது மாணாக்கர் சச்சிதானந்தப்பிள்ளை என்பவர் இவரினுந் தாமறிவின்மிக்காரென்பதுதோன்ற இதற்கு விருத்தி என வேறுரையெழுதி வெளியிட்டனர். இவ்வுரைக்கு

இதற்கே கோயிலூர் "பொன்னம்பலசுவாமிகள்' என்பவர் ஓ ருரையெழுதி அதற்குத்"தத்துவார்த்ததீபம்" என்னும் பெயர்பு னைந்து தமதுபெருமைதோன்ற வெளியிட்டிருக்கின்றனர்.

இவ்வுரைகளுள், ஈண்டியாம்விசாரிக்கப்புகுந்தது மூன் றாமுரையாக வெளிப்பட்ட கடையுரையையேயாம். இதி லெமக்கிவ்வளவாவசியக முண்டாயினதென்னையெனின், இ வ்வுரைகாரர் தமதுரையிலநுக்ரமணிகையில், இருபத்தாறுவ து பிரஸங்கத்தொகையில, "வியாசரபிப்பிராயமறியாமல் சைவ ராதியோர்துக்கிக்குமாறு" எனவொருவிசேடப்பிரஸங்கஞ் செய் தனராகையால், அசைவராகிய அவருக்கே துக்கப்பிராப்திசெ ந்தமெனப்போதருவித்துத் தெளிவித்தற்கேயாம்.

இம்மாயாவாதபண்டிதரது பிரஸங்கம்வருமாறு.

## பூர்வபட்சம்.

மந்தப்பிரஞ்ஞையுடையோர், சாஸ்திராபிப்பிராயமறியாமல் அவைவாதங்களில் ஆக்கிரகஞ்செய்கின்றதுமன்றி சியாலாசாரமே யகியாயத்தால் பரஸ்பரம் கலகமும் விளைக்கின்றனர். காரணப்பிரமம் உபாசிக்கத்தக்கது. காரியப்பிரமங்கள் விடத்தக்கனவென்பதே சகலபுராணங்களின் அபிப்பிராயம். மாயாவிசிட்டசேதனம் காரணப்பிரமமென்றும், மாயையினுற்பண்ணப்பட்ட காரியவிசிட்டசேதனம் காரியப்பிரமமென்றும் சொல்லப்படும். ,,

## சித்தாந்தம்.

"சைவ[illegible]யோர்துக்கிக்குமாறு" என்று எடுத்துக்கொண்டவர் ஈண்டு "[illegible]ந்தப்பிரஞ்ஞையுடையோர்" என அவர்களை யினிதுவினர்[illegible]ர். இதனால் சைவர்முதலினோரே மந்தர்களென்பது அவரது தீர்மானமாயிற்று. சைவரோடுசேர்த்து அவைவர்முதலினோரையும் நமதன்பர் தூஷித்தபகுதியில், யாம் [illegible]வர்பக்கலேறிய தூஷணத்திற்கே வருத்தினுமென்க. சைவ[illegible]ரென்றுகூறியவிவரை [illegible]சைவரென்பது சொல்வர்

யேயமையும். புத்தர், சமணர் முதலிய அசைவரினத்திற்சேர்ந்த
புறச்சமயியாகிய இவரது சமயவேடம் சைவரைவஞ்சிக்கு
முரியதென்க. "புத்தாபுலேயேனேக்கா" எனவும், "அருகாவடியேனே
கா" எனவுங்கூறிய மாயாவாததிமிரத்திற்பட்டுமருண்டமு
னோராகலின், இவர் சைவலிங்கதையிற்றலேப்பட்டது வெறுந்தா
இவரது சமயவேடம் வஞ்சகத்துக்கிடமாயது என்றறிதல்
லேயெனின், இவர் "சைவாதுக்ஷகுமாரு" எனக் கூசாதுரை
ந்துவிட்டுக் கலவாடைபுனைதலும, திருநீற்றொழிருங்குதலும
சிவநாமங்கூறுதலும், சிவாலயதரிசனம் விழைதலுமாகிய
சைவதர்மங்களிற்றலேப்பட்டோருக்கும் பொய்வேடத்தைக்
ண்டேயாம். இவரது பிரசங்கத்தில, "காரணப்பிரமம உபாசிக்
த்தக்கது. காரியப்பிரமங்கள் கைவிடத்தக்கன" என்று கூறினர். சி
வன்விஷ்ணு முதலினோர் காரியப்பிரமங்களென்பது இவரது க
ருத்து. காரணப்பிரமத்திற்கு உமாஸஹாயத்வாதி லிங்கங்கள்
கிடையாவென்பது இவரதுமுடிவு. இவ்வுண்மைதோன்ற இ
வரது பிரசங்கத்தில், "காரியப்பிரமங்களின் சின்னங்களான சதுர்
ப்புஜ - திரிநேத்திர - சதுண்ட - அஷ்டபுஜாதிகளுள்ளே யாதொன்
றையும் எடுத்துவிசேடியாது" என்று காரியபிரமலட்சணங் கூ
றினாராகையால, காரியப்பிரமோபாசனை, அல்லது உமாநாத
னது உபாஸனை இவருக்கு வெம்பாகவேமுடிந்தது. இவரது
உபதேசங்கேட்பவர் கைவிடத்தக்க உமாநாதனை (ஸ்ரீநடராஜப
தியை) அடைந்து இவர் கைகூப்பிவாழ்வதென்னை? இவர்கை
விடத்தக்க பஸ்மருத்ராக்ஷ பஞ்சாக்ஷராதி சைவதர்மங்களை வி
ட்டுவிடாமற்றாங்கிச் சைவப்பழமெனத்திரிந்து பெரியவரென்
று பேரெடுத்துவாழ்வதென்னை? இவற்றைநோக்குழி இவரது
வேடத்தை வஞ்சவேடமென்றது வேறுயா[illegible]ம்? இவ
ரதுசொல்லுஞ்செயலும் வேறுபடுதலால் எமதுபி[illegible]ங்கம் சா
லபுடைத்தேயாம். இவரதுமதம் காரணப்பிரமமே உபாசிக்கத்
தக்கதென்பது. இவருடையகாரணப்பிரமத்துக்கோ உமாஸ
ஹாயத்வாதி லிங்கங்கள்கிடையா. இவருக்கநுபாஸ்யமாகிய
காரியப்பிரமோபாஸனையி லிவர்தலைப்பட்டது அவைக்கதமே

கஞ்செய்து இல்லொழுக்கிறந்த பெண்டிர்செயலோடொ டொம்பாதிசயம்பெற்றது. கற்பிறந்தபெண்டிர் மஞ்சள்-குங்கு புஷ்பம்-தாம்பூலம்-முகவாசம் - ஆடையாபரணம் என்பவை ளைப்பரித்து, கழுத்திற்றாலியுந்தரித்துவாழப் பின்னிடா போல், நமதன்பரும விபூதிருத்ராக்ஷஸ்ரீபஞ்சாக்ஷரமு சைவமங்கலங்களைத் தாங்கியிருந்தல்காண்க. சைவநார் [illegible] ம், அவற்றைமேற்கொண்டொழுகுங் காரியப்பிரயோ[illegible] யும நமதன்பருக்கு அநுபாஸ்யமாகும்பட்சத்தில் அவற்றை[illegible] த்திலவர்விழிப்பது அவருக்குப் பெருந்தாழ்வெனக. இனி தன்பர் சித்தஸமாதானந்தோடு பின்வரும வெண்பாக்களை கவனித்து மகிழ்வாராக.

உத்தமவாததூலவாதூலம்.

"ஒன்றுமிலாஞ்ஞான முறைப்பாயுனதுமுகத்
தொன்றமெவ்வுகவதென் றெண்பொடியே - துன்றுமதை
இன்றுமுதற்பூசா திருப்பையேனன்றுங்காண்
வென்றியிலாப்சொன்னேன் விடு."

"உன்பால்வேதாந்த முணர்வாருமீயொரு
தன்மையாகீப்றெழிலைத தாங்காமல் - அன்பேபெ
சேர்ந்தேகாலட்சேபஞ் செய்தாலன்றி நிலைக்குங்
கூர்ந்தேநீகூறிவருங் கோள்."

இவற்றினுண்மைதெளிந்தவர்கள் மாயாவாதியாகிய தன்பரைச் சிவனடியாரென்று மயங்கார்கள். சைவசித்த வுண்மையறியாத சாமானியர்களே மாயாவா[illegible]து ய்வேடத்தைக்கண்டு மயங்கி, அவர்களைவழிப[illegible] ய்ச்சமயத்திற்புக்கு ஆழ்ந்து அவலமாகின்றன[illegible] காறும் யாந்தெளிந்துக்காட்டிய வுண்மை[illegible]யு தவர்கள் "வியாசராபிப்பிராயமறியாம[illegible]இக்கூறு" வும், அவர் "மந்தப்பிரஞ்ஞையு[illegible]எனவும், - "சாஸ்திராபிப்பிராயமறி[illegible]மல்[illegible]பினைக்கின்றனர்" என நமதன்பர்படித்தப்பாட[illegible]ளென்க. இதுநிற்க.

ம்மாயாவாதியார் "ஸியாலசாரமேயநியாயம்" எனவொ ரு ஸ்தாபித்தாரன்றோ? அந்நியாயம் சைவசமயிகளி னமட்டிற்பொருந்துமென்பதைக் கொஞ்சமெடுத்திசை

(நியதன்பரது ஸியாலசாரமேயநியாயம்.)

ஸியாலமென்பது ஒருஸ்திரீயின்தமையன்பெயர். சாரமேயன் என்பது நாயின்பெயர். நியாயமென்பது திருஷ்டாந்தம். ஒருஸ்திரீயினுடைய தமையனுக்கும், அவள்கணவனை யடுக்கு அடுத்தவீட்டு நாய்க்கும் உற்பாலகனென்று பெயரிருந்தன. அந்தஸ்திரீயின் தமையனுடைய சத்துருவுக்கும், அவள்கணவனை வீட்டு நாய்க்கும் தாவகன் என்று பெயரிருந்தன. இப்படியிருக்க, அந்தஸ்திரீயானவள் ஒருதமயத்தில் கணவன்வீட்டிற்குவந்தாள்; அப்பொழுது [illegible] இரண்டுநாய்களும் ஒன்றோடொன்று சண்டைசெய்து கொண்டிருந்தன; அதைக்கண்ட அவளுடைய கணவன், அடுத்தவீட்டு நாயாகிய உற்பாலகனை, [illegible] முதலிய வார்த்தைகளாலே வைது, தன்னுடைய தாவகனைப்போற்றி டையாயென்று பெருமைப்படுத்திக் கொண்டாடினான். அதைக்கேட்டிருந்த அந்தஸ்திரீக்குத் தன்தமையனை வைகிறதாகவும், தமையனுடையசத்துருவைக் கொண்டாடுகிறதாகவும், பிராந்தியுண்டாகி அதனால் அவள் துக்கமுடையவளாய்த் தன்பர்த்தாவோடு கிலேசித்திருந்தாள். நாயகன் அபிப்பிராயமறியாமல் சமானநாமத்தாலே பிராந்திகொண்டு அவள் எப்படி கிலேசித்திருந்தாளோ அப்படியே வைணவகிரந்தங்களில் சிவன்முதலிய நாமங்களால் காரியப்பிரமங்களை நிந்தைசெய்திருப்பதைக்கண்ட சைவர்முதலியோர்களும், சைவகிரந்தங்களில் விஷ்ணுநாமத்தால் காரியப்பிரமத்தை நிந்தைசெய்திருப்பதைக் கண்ட வைணவர்களும் துக்கத்தையடைகின்றனர்."

பெயரும், இவளுடையதமையன்பெயரு மொன்றென் றுத்தார். இனி இதனைவிசாரிப்பாம்.

ஒருஸ்திரீயினது கணவன் தாவகன் என்னுந் தன்னுடைய பூஷித்தபோது இவள் தன்னுடைய தமையனது சருவாகிய தாவகன் என்பவனை அவன்பூஷித்ததாக வருந்தினளெனவும், இப்படியே வியாசர் விஷ்ணுவென்னும் பெயருடைய தமதுகாரணப்பிரமத்தைப்புகழ்ந்தபோது சைவர்கள் தமதுதெய்வமாகிய சிவனுக்குவிரோதமாக விஷ்ணுவைப்புகழ்வதாகவருந்தினார்களெனவும், மீண்டும் இந்தஸ்திரீ தனது கணவன் தன்னுடைய அங்கையைவிட்டு உற்பாலகன் என்னுமாத்தூஷித்தபோது இவள் உற்பாலகன்என்னுந் தன்னுடைய தமையனைத்தூஷித்ததாக வருந்தினளெனவும், இப்படியே வியாசர் தமக்கநுபாஸ்யமாகிய சிவன்என்னுங்காரியப்பிரமத்தை யிகழ்ந்தபோது சைவர்கள் தமதுதெய்வமாகிய சிவனையே அவரிகழ்வதாகவருந்தினார்களெனவும் இவரதுபிரசங்கம் இனிதுபோதிக்கின்றது கணவனதபிப்பிராயமறியாமல் அந்த ஸ்திரீகலங்கியதுபோல வியாசரதுஅபிப்பிராயமறியாமல் சைவர்கள்கலங்கித் துன்பெய்தினார்களெனவறிவித்ததே நமதுமாயாவாதியாரது முடிவாயிற்று.

இந்தப்பிரசங்கத்தால் சைவர்கள் துன்பமெய்தியதுமாத்திரமேயன்றி வைணவர்களின்பமெய்தியசுலமும் வியக்தமாகியது. எங்ஙனமெனின்,விஷ்ணுவென்னும் பெயருடைய தமது காரணப்பிரமத்தை வியாசர்புகழ்ந்தபோது வைணவர்கள் தமது தெய்வமாகிய விஷ்ணுவையே அவர்புகழ்வதாக ஸந்தோஷித்தார்களன்றோ? சைவர்கள் துன்புறவும், வைஷ்ணவர்களின்புறவும் ஹேதுவாய்கின்ற வுபமானத்தைக் காட்டிச் சைவராதியோர்துக்கிக்குமாறு" என்று நம்மவர் பிரஸ்தாபித்த அவரது புத்தியின்குறைவேயாம். சைவராதியோர் என்பது சைவர், வைஷ்ணவர் என்பனவாதி பலசமயிகளைக்குறித்தலாமென்க.

இனியவ்வுபமானத்தை வைஷ்ணவர்தலைமேலேற்ற கரிக்கத் தொடங்கின், வியாசர் சிவனென்னும் பெயருடை தமதுகாரணப்பிரமத்தைப் புகழ்ந்தபோது வைஷ்ணவ தமதுதெய்வமாகியவிஷ்ணுவுக்கு விரோதமாகச் சிவனை புகழ்வதாகவருந்தினார்களெனவும், அவர் தமக்கநுபாஸ்யமா விஷ்ணுவென்னுங்காரியப்பிரமத்தை யிகழ்ந்தபோது அவ் ஷ்ணவர்கள் தமதுதெய்வமாகிய விஷ்ணுவையே அவரிக தாக வருந்தினார்களெனவும் பெறப்படுகின்றதன்றோ! அ போது சைவர்கள் தமதுதெய்வமாகிய சிவனையே வியா புகழ்ந்தும், வைஷ்ணவர்களது தெய்வமாகிய விஷ்ணுவை அவரிகழ்ந்தும் பரத்துவநிரூபணஞ்செய்தார் என்று கொ வதற்குமிடமுண்டாகிறதன்றோ! இதனால், சைவர்களுக் ன்பமேயுண்டாவதன்றித் துன்பமுண்டாகஇடமேயில்லை. இ தனாலுஞ் "சைவராதியோர்துக்கிக்குமாறு" என்று நமதன்பரா சையாய்வரைந்தது அவதியாய்த்தொலைந்தது.

நமதன்பர்காட்டிய ஸ்திரீயினதுதுக்கோபமானம் உ மேயஸ்தானத்தினின்ற சமயிகளுக்குத் துக்கத்தையேவிளைத தல் வேண்டும், அந்தஸ்திரீக்குத் துக்கமொன்றேயன்றிச் சுகம் பிராப்தமாகாததுபோல். இவ்வுபமானத்தைச் சைவருக்காவது அல்லது வைஷ்ணவருக்காவது நமதன்பர்தேடிஒப்படைத்திடின், அவ்விருசமயிகளிலொருசமயி துக்கிக்கக்கூடும். அங்ஙனமின்றிச் சைவராதியோர் என்று பன்மைவாசகமாகக் கூறியதன்றிச் சிவபுராணவிஷ்ணுபுராணங்களுக்கும இவர்முடிவுகூறி விட்டமையால், இவர் சைவர்பாலேற்றிய துக்கந்துடைபட்டு, தூரமாய் விலகிவிட்டது.

அவர் "சைவராதியோர் துக்கிக்குமாறு" என்று கூறிய, துக்கித்தவொருஸ்திரீயையே யுவமித்தமையால், ஈண்டு சமயிகளுடைய துக்காநுபவத்தையேயன்றிச் சுகாநுபவத்தை வருவித்தல் கூடாதெனின், அந்தஸ்திரீக்குத் துன்பம்

பெருகுதற்குக்காட்டிய இரண்டு ஹேதுக்களில், அவனுடை மையனது சத்துருவைப்பூஷித்த ஹேதுவானது அந்தச் சத்துருவைத் தமையனாகக்கொண்டவேறுஸ்திரீக்கு இன்ப ந்துய்க்கப்படாதமையால, அவ்வின்பமெய்தியஸ்திரீயை யாண் டுந்துரையாதகுற்றமுந் தந்தலைமேலவந்தேறிய வாறறிக. துன்பமெய்தியஸ்திரீயைப் பிரஸ்தாபித்ததுபோல், இன்பமெ ய்தியஸ்திரீயைப் பிரஸ்தாபிப்பதும் அவசியமாம். அங்ஙன ஞ்செய்யாதகுறைவை யோசியாமல பூர்வபட்சியார தொ க்குவாதம புணைபட்டதெனக. உபமானவுபமேயங்களைப் பொருத்தியாய் விளக்கவகையின்றிக் கலகமவிளைக்கக்கற்ற நம தன்பருள்ளத்தை யாமகலக்கியது கணனுதற்பிரான திருவு ளப்பாங்கேயாமெனவறிக.

இம்மட்டோ, இவர்பெருத்துக்கொண்ட வுபமேயங்களு க்கு இவர்காட்டியவுபமானங்கள் முற்றும்படிப்ப தடுமாறுகின் றன. ஏனெனின், இவர்பிரஸ்தாபித்த ஸ்திரீயினது கண வன்வீட்டுச்சொந்தக்காரனைக் காரணப்பிரமமும், அவன் வீட்டுக்கு அடுத்தவீட்டினராய் காரியப்பிரமமுமாகக்கொண்ட னரன்றோ? இவர் சைவர்க்குக்காரியப்பிரமம வேண்டுமா யின், நாயாகலாம். இவரது காரணப்பிரமமும் நாயாகவே ண்டுமா? இவர் காரியப்பிரமத்தை நாயென்று தூஷிக்கவந்த கொடுமை அத்தோடேதொலையாமல இவரது காரணப்பிரம த்தையும பற்றியிழுத்துக்கொண்டதன்றோ? நாய்க்கு யாண்டு ம் பூஷணமபிராப்தமாகாது. இதற்கு "நாயைக்குளிப்பாட்டிநடுவீ ட்டில்வைத்தால், வாலைக்கிளப்பிக்கொண்டுமலந்தின்னப்போச்சுது." என்னும பழமொழியேசான்று. இதனால், நாயென்றுவமிக்கப்ப டுமிவரது காரணப்பிரமத்துக்கே தூஷணம் பிராப்தமானவாற றிக. இவர்சைவர்களுக்குக் காரியப்பிரமமேயுரியது எனக்கூறி யது சைவருடன்பாடாகாமையால், அக்காரியப்பிரமத்தின்றலை மேலேற்றியநாயுவமை அச்சைவர்க்குத் துன்பஞ்செய்ய வலி யற்றதாயிற்று. காரியப்பிரமம்-காரணப்பிரமம் - சுத்தப்பிரம

ம் என்பனவாதி அவாந்தரபிரயோகங்கள் இவர்தூச[illegible]
த்துப் பூர்வாபாலகர் செய்துகொண்ட கற்பனை யென்று
"பிரமமொன்றே, இரண்டில்லை" என்று சுருதி கோஷிப்பது
குமாறுக வண்டிவண்டியாகப் பிரமங்களை நமதன்பர்வாரி
கொண்டுவந்து குப்பையிற்கொட்டப்பார்ப்பது பரிதாபமென்
இவர் பாசபசுக்களையெல்லாம் பிரமங்களென்றெமக்குக் கொ
ண்டுவந்து காட்டினமையால், யாமவற்றைக் குப்பையென்
றொதுக்கினுமென்க. இவர்துமதத்தில நாயுவமையே மிக[illegible]
லானது. இதனைமறுத்த சிலபாடல்களை யீண்டியாம்வரை[illegible]
ன்றாம்.

## தணிகாசலஸ்தவம்.

—:o:—

"பளிக்குமடைபத்திணிழல்பலநாய்நது
பலவுற்றுக்காணுநாய்ப்பாலவ்
குளிக்குமப்[illegible]பலவாக்
காணுமா[illegible]றீற
சுளிக்கமோதுவரையா[illegible]வேதாந்த
ரூத்திரக்[illegible]ன்றான்
அளிக்குலமென்னவையார்சூழ்தணிகை
யமர்ந்தபன்னிருகரத்தரசே."

'நாயறிபாமையாறபலவாக
நாடுறுநீழலேபட்டனிங்கில்
நாயின் வேறெனபளிக்கையுங்கண்டா
றடுமோபிரமஙன்னிலையே
நாயதோபிரமகுவர்காண்மேலோர்
ஞாயமன்றீதெனகவின்றன்
றுயகமாகுந்தணிகைவாழ்ஞானத்
தலைவனஞ்சத்திவேலோனே."

அறிவெவனினின்விற்கூடுமெங்கினாவே
'தறிவெனும்பிரமமொன்றேயென்
றறியவேதங்களுணர்த்துமேலத்தோ
வதுபாமுயிர்சகமாகி

நிறையுமா றுணர்டோ வங்கினவதனை
நீங்குமாறெவனறிவென்றான்
"அறிவினுக்கறிவாய்த் தழைத்தொளிர் தணிகை
யங்கிரிவாழுமறபுதனே."

இவைகளை நமதனபரினியேனு முற்றுநோக்கித் தமது சிறுமையைநாடி யஞ்சுவாராக இருக்க.

இவர்பொதுக்கொண்ட வுபயபிரமங்களுக்குங் காரண காரியசம்பந்தங் கூறினாரன்றோ? இவற்றைவிளக்குமாறெழுந்த உதபாலகனே-காவான என்னு நாய்களுக்கு இவரென்ன சம்பந்தங்காட்டினார்? இவர் உபமானத்தை நன்குவிளக்கும் வகையறியாமையால், உபமேயத்தையுஞ் சிதைத்தவராயினர். இனி யாமொன்றுகூறுகின்றோம் பொன்காரணம் - பூஷணம் காரியம் இப்படியே உருவமற்றவிவரதுபிரமம் காரணமும், உருவமுள்ள சைவரதுபிரமம் காரியமுமாயின. காரணமாகிய பொன்னுக்கும், காரியமாகியபூஷணத்திற்கு முயர்வுதாழ்வுகளுண்டாகாதவாறு காரணகாரியபிரமங்களுக்கு முயர்வுதாழ்வுகள் பிராப்தமாகாவெனக. இங்ஙனமாக, காரியபிரமங்கள் கைவிடத்தக்கனவென்று இவர் பிரசங்கித்தது கைம்மையேயாம். பொன்னுயிருந்தபோது அநுபவிக்கமுடியாமல் அது பூஷணமானபோதே அதனையாவருமநுபவித்தல அநுபவஸித்தம் இப்படியே காரணபிரமம் அநுபவிக்க முடியாததும், காரியபிரமம் அநுபவிக்கத்தக்கதுமாகவறிவதே விவேகிகளுக்கொப்பெனக. இவரதுசித்தாந்தம் ஈண்டுத்தலைகீழாயினவாறுணர்க. இவர் பிரஹ்மவிசாரணையிலுங் காரணகாரியப்பிரஸ்தாபஞ் செய்தாரன்றோ? பிரஹ்மம் ஜடமாயிருந்தால், ஜடமாயுள்ளவதனை யொருவர் காரியப்படுத்தலாம். அங்ஙனமின்மையின், நம்மவரதனிடத்திற்செய்த காரணகாரியபிரஸங்கம விருதாகோஷமெனக. அவரது ஆபாசப்பிரசங்கத்தாலவரது பிரஹ்மம் ஜடபிரஹ்மம் என்று துணியப்படுவதே முடிவாம். இவ்விரண்டற்றும் மேலிட்டதொரு சத்

தப்பிரமமுண்டேயெனின், அச்சுத்தப்பிரமத்தையே இவர் மாயாவிசிட்டமானபோது காரணப்பிரமமெனவும், மாயா காரியசரீரவிசிட்டமானபோது காரியபபிரமமெனவுந் தமது நூலிற் பிரகாசப்படுத்தினாராகையால், அதனதுசுத்தந் தடைபட்டு அது அசுத்தப்பிரமமாயினவாறறிக. இவர் சைவரதுபிரமம் காரியபபிரமமென் றொதுக்கத் தலைப்பட்டமையால், அதற்கு மூலமாகிய காரணபபிரமத்தையும், அக்காரணப்பிரமத்திற் கதிஷ்டானமாகிய சுத்தபபிரமத்தையுங் கேவலம் அசுத்தமும, ஜடமுமாயுள்ளனவென்று யாமொதுக்கினோமென்க. இனிச் சுத்தப்பிரமம-அசுத்தபபிரமம-அசுத்தகாரியபபிரமமென் றிவர்பிரமங்களுக்குப பேரிடுதலுந்தகுமென்க. "செய்வோரின்றிச் செய்வினையின்மையின்" என்னும பிரமாணத்தை நோக்குழி இவரதுசுத்தபபிரமத்தை அசுத்தபபிரமமாகவும், அவ்வசுத்தப்பிரமத்தை அசுத்தகாரியப்பிரமமாகவுந் தொழிற்படுத்துதற்கு அதிதபபிரமமொன்று வேணடுவது அதறியாவசியகமாம. இவரதுபிரமவிசார மிபபடி யலக்கண்படுவது இவர் பதிநூல்களிற்பயிலும பருவமெய்தாத குறைவேயாமென்க. இவரன்னபசுசாத்திரபண்டிதரது கொடுமையறிந்தே 'பசுநூல்கற்கும்,பிச்சனைக்காணு மவ்வாய் பேசாதப்பேய்களோடே' என்று திருவிசைப்பாவி லிவரதுகூட்டமவிழைத லவையபாவிதமெனப் பிரதிஷேதித்திருக்கின்றது.

இவர் தமதுகாரணப்பிரமம மாயாவிசிட்டமுடையது எனவும், சைவர்களதுகாரியப்பிரமம் மாயாகாரியவிசிட்டமுடையது எனவும் பிரசங்கித்தாரன்றோ? இப்பிரமங்களிரண்டும் மாயையிற்றோய்ந்தனவேயாக, இவற்றுளொன்று கொள்ளத்தக்கது, மற்றொன்று தள்ளத்தக்கது என விவர் கூறியது என்னை? கொள்ளுவதுந் தள்ளுவதும் பிரமத்தைநோக்கியா? மாயையைநோக்கியா? கொள்ளுவது பிரமத்தைநோக்கியும், தள்ளுவது மாயையைநோக்கியுமெனின், கொள்ளத்தக்கபிரமத்தைக் காரணமாயையிற்சேர்த்தலும், தள்ளத்தக்கமாயையைக் காரணப்பிரமத்தோடுசேர்த்தலும் அசங்கதம். அன்

கொள்ளத்தக்கபிரமத்தை அது மாயாகாரியசம்பந்த மெ யதுகண்டு காரியப்பிரமங்கைவிடத்தக்கது என்று பிரசங் தமெதன்னே? தள்ளத்தக்க காரணமாயையை அதுபிரமசம் ந்மெய்தியதுகண்டு காரணப்பிரமம் உபாஸிக்கத்தக்கது எ று பிரவசனித்ததென்னே? மாயையோடுசேரினும் பிரமம் த்தமெய்தாமையால்,காரணப்பிரமோபாசனை கூடுமெனி காரியப்பிரமமும் அம்மாயையோடுதானேசேர்ந்ததாகை ல்,அதனைக்கைவிடவேண்டியதெனல் யாங்ஙனம்? காரண யப்பிரமங்கள் விஜாதிகளாயிருந்தாலொழிய நமதன்பரது சங்கத்திற்கு மணமுண்டாகாது. அன்றி,காரணப்பிரமம், யப்பிரமம் என்று அவர்பிரஸ்தாபித்ததும் அஸம்பாவித தி,அவரது ஏகான்மவாதத்தின்றலையிலிடிவிழாநிற்கும். பிர தைநோக்கிக் கொள்ளுவதாயின், இரண்டையுங்கொள்ள ண்டும். மாயையைநோக்கித் தள்ளுவதாயின்,இரண்டையு ள்ளவேண்டும். மாயை காரணமாயுள்ளபோது சுத்தமும், ந காரியப்பட்டபோது அசுத்தமுமாவதால்,காரியத்தைத் ளிக் காரணத்தைக்கொண்டாமெனின்,காரணத்திலில்லா புசுத்தத்தைக் காரியத்திற்கற்பித்தது கூடாது. காரியத்தி ள்ளவசுத்தத்தைக் காரணத்திலொப்பாததும் ஏலாது. ரணமாகியபொன்னும்,காரியமாகிய பூஷணமும் உயர்வுதா கனெய்தி முறையே கிராஹ்யமு மக்கிராஹ்யமுமாகாவா காரணகாரியமாயைகளிடத்துங் காணவேண்டியது. இவர் ரணமாயைக்குச் சுத்தமொப்பும்பட்சத்தில மேலெடுத்துக் ாண்ட (கொள்ளுவது தள்ளுவது என்னும்) இரண்டில் கொ ளுவதற்குக்காரணம் இக்காரணமாயையும், இதனோடுசம்பக் ந்த காரணப்பிரமமுமாகிய இரண்டுமேயாகும். இங்ஙனமா ந்தால், தள்ளுவதற்குக்காரணம் இவ்வசுத்தமென்றுக் காரியமாயையும், அதனோடுசேர்ந்த காரியப்பிரமமுமாகி இரண்டுமேயென்று துணியவரும். சுத்தமாகியமாயை கா யப்பட்டபோது அசுத்தமெய்தியதாயமே சுத்தமாகியபிர காரியப்பட்டபோது அசுத்தமெய்துதற்குமிபொருந்தும்.

இனியிவர் சுத்தமாயையும் அசுத்தமாயையுந் தனித்தனி யிர ண்டுமுதல்களென்று கூறவேண்டும். அங்ஙனமாயின், அ ற்றோடு சேர்ந்த பிரமங்களுந் தனித்தனி யிரண்டுமுதலகளெ ன்று கொள்ளவரும். இதனையொப்பின், முன்போலவே ஏகா ன்மவாத மெடுபட்டுப்போம். இவைகளுக்கு நமதுமாயாவாதி யார் என்னகதிகற்பிப்பார் ? பிரமம் சுத்தமுடையது. மாயை அசுத்தமுடையது. சுத்தமுடைய பிரமம யாண்டும் அசுத்த ப்படாது. அசுத்தமுடையமாயை யாண்டும் சுததயாகாது. சுத்தம்சுத்தமே! அசுத்தம்அசுத்தமே! சுத்தமானபிரமம் அசு த்தமானமாயையிற்றேயாது. அத்தமானமாயை சுத்தமான பிரமத்தோடுசேராது. இந்தப்பிரசங்கவிவேகத்தால் நமதன்ப ர்செய்த காரணகாரியப்பிரமவிசாரம் ஸாதுக்கள் தமக்குக் கொடுமையையே விளைத்ததாகக்கொண் டொதுங்குவரென்க. இதனால், காரணப்பிரமம் உபாசிக்கத்தக்கது, காரியப்பிரமம் கைவிடத்தக்கதுஎன்றிவாசெய்தபிரசங்கம் நிஷ்பலமாயிற்று. காரியமாயை நிஷித்தாயினவாறு காரணமாயையு நிஷித்தமா கத்தட்டில்லையாகையால், இக்காரியகாரணமாயைகளிற் றம் பட்ட பிரம்ங்களிரண்டுமே சிவஞானிகளுக்குத் தியாஜ்யமெ னக. பிரமம் யாண்டுந தளைபடாதென்க. இவரதுசுத்தப்பிர மத்தின்கதியை மேல்யாம பரிஷ்கரித்திருக்கின்றேம, ஆ ண்டுக்கண்டுகொள்க. இவற்றைத் தெளிநதுவாழும் புண்ணி யின்றிச் "சைவர் துக்கிக்கின்றனர்-கலகமும்விளைக்கின்றனர்" என்றுதொடங்கி, அவர்களது தெய்வத்தைக் காரியப்பிரம மென்றும், அக்காரியப்பிரமம் கைவிடத்தக்கதென்றும், அவ ரைவழிபடுவோர் மந்தப்பிரஜ்ஞையுடையோரென்றுங் தாம் த் துக்கவுலகத்துக்குக் குருபீடமாயெழுந்து துக்கானுபவத்திற் றுரியாராகித் சிவாபராதத்தை விலைகொடுத்துவாங்கியது இவ ரது பாவத்தின்பயனேயாமென்க. இனியேனுந் தமதுசிவவே டத்துக்கியைந்த வொழுக்கினின்று திருவருளைப்பெற்று வா ழ்வாராக.

## பூர்வபட்சம்.

"மந்தபுத்தியுடையோர்க்கு உபாசனையின்பொருட்டு நாம ரஹிதமான பரமான்மாவுக்கு மாயையினாற்பண்ணப்பட்ட கற்பித ரூபங்கள்கூறினர். ஆகையால் பரமான்மாவின்கண்ணே மாயை யாற்பண்ணப்பட்ட நாநாகற்பித நாமரூபங்கள்கூடும். விஷ்ணு, சிவன், கணேசன், தேவி, சூரியன் முதலானநாமங்கள் காரணப்பிர மத்தினுடைய நாமங்களேயாம். காரியப்பிரமங்கட்கும் அவை நாம ங்களாகப் பொருந்தும். மாயாவிசிட்டமான காரணத்தைப் பிரம மென்றவர் இரணியகர்ப்பரானகாரியத்தையும் பிரமமென்றனர். ஆக வே, விஷ்ணு - சிவன் - கணேசன் - தேவி-சூரியன் என்னும் பதங் கள் காரணப்பிரமத்தையும், கார்யப்பிரமங்களையும் உணர்த்துகின் றன. அப்படியே அப்பதங்களின பரியாயநாமங்களாயுள்ள நாரா யணன, நீலகண்டன், விக்கினேசன், சத்தி, பாநு இவைமுதலிய அநந்தபதங்களும் அவவிருவகைப்பிரமங்களையு முணர்த்துகின்றன."

## சித்தாந்தம்.

இவர் ஈபரூபரகிதமான வோர்பொருளுக்குப் "பரமா ன்மா" என்று நாமஞ்சூட்டியவாறென்னை? இப்பரமான்மா என்னு நாமமும மாயாகற்பிதமென்று நமதன்பர் வாதிக்க லாம். இத்தகைய நாமங்களும், உபாஸனாயத்வாதியுடையா ர்களையுடைய ரூபங்களும் நமதன்பர்தேடிய மாயாகற்பித மாகட்டும். மாயை தானேகாரியப்பட்டுப் பரமான்மாவினி டஞ் சேர்ந்ததா? மாயையை வேறொருவர் காரியப்படுத்திப ரமான்மாவினிடஞ்சேர்த்தார்களா? அல்லது பரமான்மாவே அம்மாயையைக்காரியப்படுத்தித் தன்னிடஞ் சேர்த்துக்கொ ண்டதா? என்றெழுங்கடாக்களுக்கு இவர் என்னவிடைதரு வார்? மாயைஜடமாகையால் தானேகாரியப்படவும், பரமான் மாவினிடம்வந்துசேரவும்முடியாது.வேறொருவனொன்பது பர மான்மாவுக்கு மேவிட்டவரா யிருந்தாலொழிய அப்பரமான் மாவினிடம் மாயையைக் காரியப்படுத்திச்சேர்த்தல்கூடாது. பரமான்மா சமானதிகரகிதமானதாகையால்,வேறொருவர்சே ர்ப்பரென்பது அறவேவெட்டுண்டுபோயிற்று.தன்னா லுக்குத் தானே விலங்குதேடிப்பூட்டிக்கொள்ளுஞ்செய்கை பித்தாய்

லாதாரக்கு முடியாதாற்போலச் சர்வஸ்வதந்திரமுடை
மான்யா வலிகதுதேடி மாயையிற்புணாக்து வருகதமுடிட
எவ்வாற்றானும பரமானமாவுக்கு மாயாத்வநதமுணடா
து காணப்படாமையால,நமதன்பா பரமானமாயினிடங்க,
த்த மாயாகாரியகாமரூபங்க ளஸாமஞ்சஸமேயாயின. இதல
நமதன்பர தூசித்தாநதம அபஸித்தாந்தமாகவேமுடிநதது. இ
ரதிககஷ்டமெடுத்துப பரமான்மாவுக்கு நாமரூபங்களைச்
இத்தும், அவற்றை மநதமதியினாக்கேயன்றோ வொபபமை
தனா? மநதமதியினாக்கு உபாஸாயோக்யமாயுள்ளனவே
வீண்டுக்காரியப்பிரமங்களைபபடித்தவா வேறிடததில காா
பபிரமமேயுபாஸிக்கத்தக்கது, காரியபபிரமங்கள் கைவிட
தக்கனவென்று கூறினாராகையால், அது இதனுடுமுரணா
ஸிதைவுற்றதென்க. இவா ஓரிடத்திற்செய்யுமபிரசங்க வே
டத்திற்செய்திலா. இவாதுதீபம, 16 - வதுபக்கத்தில "
வஷ்ணவபுராணங்களில சிவனமுதலியோா நிந்தையும, விஷ்ணுவி
துதியும் விஷ்ணுவினஉபாசனையில பிரவர்த்தித்தற்கு ஏதுவாயிரு
ன்றது. அப்படியே சிவபுராணஙகளில் விஷ்ணுவாதிகளின் நிந்
யும் அவர்களினுபாசனுத்தியாகததினபொருட்டாகாமல சிவனுை
யவுபாசனையில் பிரவர்த்திற்கே ஏதுவாம்" என்று பிரசங்கித்தன
19 - வது பக்கத்தில் "ஸ்காந்தபுராணமுதலிய சைவகிரந்தங்க
சிவன்-மகேசன்முதலியபதஙகள் காரணப்பிரமததையும், விஷ்
கணேசன்-தேவி-சூரியாதிபதஙகள் காரியப்பிரமஙகளையும் உண
துவனவாம். ஆதலால் அவைகளிலும் காரணப்பிரமததின் ஸ்துதி
காரியப்பிரமங்களின் நிந்தையும் உள" எனவும், "சகலபுராண
ளிலும் காரணப்பிரமத்தின்உபாசனை கொள்ளற்பாலதும், காரிய
ளின் உபாசனை தள்ளற்பாலதுமாம்" எனவும் பிரசங்கித்தன
இம்மட்டோடமையாமல், "ஐந்துதேவதைகளின் உபாசகர்.
பயன் சமமாகவேயுண்டாகாநிற்கும்" எனவும் முடிவுகூறின
இந்தப்பிரசங்கத்தால வைஷ்ணவர்கள் சிவநிந்தைபுரிவத
சைவர்கள் விஷ்ணுவைநிந்திப்பதும் அவரவர்களுடைய உ
ஷ்டையையுறுதிப்படுத்துதற்கு ஹேதுவாயினவெனவே வி
தமாகின்றது. ஆகையால், இவர்களுக்குபகாரமாகப் புராண

பிரவர்த்தித்தவழியையே இவர்கள் பின்பற்றிவாழக்கட
ப்பட்டிருக்கிறார்கள். இங்ஙனமாக, சியாலாசாரமேயங்கி
ம்பற்றிச் சைவராதியோர் தூஷிக்கின்றனர் என்று அவர்
த்தூஷித்தது என்னமதியோ? சிவனைத் தூஷிப்பது விஷ்
ணுத்திக்குக்காரணமும், விஷ்ணுவைத் தூஷிப்பது சிவபத்
திக்காரணமுமாகவேண்டியே வியாசாபிரவர்த்தித்த அந்த
ங்கண்டெழுதியநமதன்பர் இதற்குடமானமாகவெடுத்துக்
ண்ட சியாலாசாரமேயங்கியாயத்தில் அந்தக்ஷத்ரியினுடை
மையன் தன்னுடையபக்கத்துவீட்டுநாயைத் தூஷிப்பது
நகருதியென்பதைத் தெரியியாராயினர். அந்த நாயைத்
ன் றூஷிப்பதனால அந்நாய்க்குரியவன் அதனை யிமிரு
ரிப்பனென்று அன்புபாராட்டியே அதுசெய்தானென்பா
ரலும். இவருக்கு யாமொன்றுகூறுகிறோம். இவரது குரு
வப் பிறர்தூடித்துத் தங்குருவைவியப்பி னிவர்க்குத்தங்
நவினிடத்து ஆராமையதிகரித்துக் குருபத்திவெள்ளந் ததும்
மபோலும். அங்ஙனமாயின், இவரைப் பிறர்தூடித்துத்
துகுருவைவியந்திடி னிவரதுமாணாக்கர்களாகிய ஸாதுக்க
க்குமிவரிடத்தன்பதிகரித்துக் குருபத்திவெள்ளந்ததும்பும்
ாலும். அப்படியே யிவருமிவரதுமாணாக்கரும் பிறருடைய
நமூர்த்தங்களை யிகழ்ந்துவரி னவ்வாசிரியக்கோலங்கட்கா
பட்டவர்க்குக் குருபத்திவெள்ளந் ததும்பி அவருங்குணப
டுய்ய ஹேது உண்டாயாகையால இனியிவ்வரியமுடிவை
கிலுபகாரமுண்டாக விவர்பிரவசனித்துத் தமதுதவத்தை
த்துவாராக. இப்படியே அன்னியருடைய தாய் தந்தை
னவி மக்கண்முதலினோரை நிந்தைபுரிந்துவருந் தீமையை
உலகினர்பாராட்டிவரத்தக்க நீதிநூலொன்று நமதன்பர்
ளார்ந்துவிடுவது முபகாரமாம். இப்படியுமொருநியாயஞ்சொ
வாருண்டா? இவரிவ்வளவி லமையாது "வேதத்தில் அ
ஹோத்திரத்துக்கு இரண்டுகாலங் கூறியிருக்கின்றது" என
தொடங்கி "உதயகாலத்தைத் துதித்தற்பொருட்டு அநுதயகால
யும், அநுதயகாலத்தைத் துதித்தற்பொருட்டு உதயகாலத்தை

யும் நிந்தித்திருக்கின்றது" எனவிரித்து "ஓர்தேவதையின் சனையின் பிரசங்கத்தில் அந்யநிந்தை ஒன்றன் ஸ்து தாற்பரியமாம்" என்று முடிவுகூறினர். மீண்டும், "அந்நி யின்றாற்பரியம் இயாகத்திலாயின், இரண்டுகாலத்திலும ஓமத் தியாகமாம். நித்தியகர்மத்தின் தியாகங்கூடுமோ? என்றுவமை புணர்வழிந்தார். என்னெனின், இவரதுநியாயமனத்தை க்ராணித்தவ ரிங்குக்காட்டிய வுபமானத்தை யினிதுபா லோசிப்பார்களன்றோ? இதனுபமேயம சிவவிஷ்ணுக்களு யநிந்தையேயாமன்றோ? இதனைபபரியாலோசிப்பவாகள் நிந்தையின் றாற்பரியம் தியாகத்திலாமாயின, இரண்டு தேவ தைகளினுபாசனையுந தியாகமாம். இவாகளைத் தியஜிக் கூடுமோ என்றுகடாயி னிவர்தருமிறையாது? நித்தியகர் மை யிரண்டுகாலங்களிலுந் தியஜிக்க முடியாதாற்போல யன்றோ சிவவிஷ்ணுக்களுடைய தியாகமும ஸாதுக்களு வெங்கதமாகமாட்டாது? இந்தமுடிவுக்கு விரோதமுண்டா சிவவிஷ்ணுக்களாகிய "காரியங்களின் உபாசனை தள்ளற்பால என்றிவர் பிரஸங்கித்தது இவரது பசுசாத்திர பாணடித்யப் டாத்தின் வல்லபமேயாம். இவரெடுத்துக்கொண்ட அ ஹோத்ரகாலநித்யோபமான மொன்றினைக்கொள்ளுதற்கு த்திரமேயன்றி, அதனைத்தள்ளுதற்குபகாரப்படாமையால் தன்பா முன்னெடுபின்முரணிச் சிவவிஷ்ணுக்களைக்கொ லாம்,தள்ளலாமென்று தடுமாறிவாதிப்பது தெளிவின்மை தவேமுடியும். இவாதேடிய வுபமானத்தால், ஒன்றினைக்கொ ளுதற்கேயன்றித் தள்ளுதற்குநியாயம் பெறப்படாமைபோ சிவவிஷ்ணுக்களுடைய நிந்தையிலுங் கொள்ளுநியாயமே ணமாகித் தள்ளுநியாயந் தறிக்கப்பட்டுப்போயதென்க. இ முடிவென்னெனின், விஷ்ணுவை நிந்திப்பது இவரின்மேவி டவுருத்திரரது ஆதிக்யநோக்கியும், அவ்வுருத்திரனை நிந் பது அவ்வுருத்திரினுமேலிட்ட பரசிவாதிக்யநோக்கியுமே ம். இப்பாவஸ்துவே யாண்டும் நிந்தைபெறுததொன்றும். தைபெற்றுள சிவவிஷ்ணுக்களேயன்றிப் பிரம னிந்திர

[illegible]ரும முற்கூறியநியாயப்படியே நிந்தைபெற்றுளரோ சிவமகிமையையபேட்சித்து விஷ்ணுநிந்தைபெறப்பட்ட [illegible]று விஷ்ணுமகிமையையபேட்சித்துப்பிரமனதுநிந்தையும், பிரமனது மகிமையை யபேட்சித்து இந்திராதிகளுடைய நிந்தையுங் கேட்கப்பட்டவாறறிக. நிந்தைபெற்றுள வின்திராதியரைநோக்கப் பிரமனுபாஸ்யனும், பிரமனைநோக்க விஷ்ணு உபாஸ்யனும், விஷ்ணுவைநோக்க உருத்திரனுபாஸ்யனும், உருத்திரன்முதலியஸர்வதேவர்களையுநோக்க ஸ்ரீபரமேசுவரா னொ வேபாஸ்யருமாதல் சுருதிநிஷ்டமென்க. இந்த நுட்பமுணர்ந்தவர்கள் காரியப்பிரமங்கள் கைவிடத்தக்கனவென்று சிவவிஷ்ணுக்களைத் தியஜிக்கத்தேடிய நமதன்பரது முகத்தில விழிக்க அஞ்சுவரெனக. இன்னு மிவரது காரியப்பிரமங்களின் தியாகநியாயத்தைக் கொஞ்சம்விசாரிப்பாம்.

இவர் "வைஷ்ணவபுராணங்களில் சிவன்முதலியோர் நிந்தையும் விஷ்ணுவினதுதுதியும் விஷ்ணுவினுபாசனையில் பிரவர்த்திப்பதற்கு ஏதுவாயிருக்கின்றது. அப்படியே சிவபுராணங்களில் விஷ்ணுவாதிகளின்நிந்தையும் அவர்களினுபாசனத்தியாகத்தின்பொருட்டாகாமல் சிவனுடைய உபாசனையில பிரவர்த்திப்பதற்கே ஏதுவாம்" என்றுகூறியதில ஒருகாரியப்பிரமத்தை நிந்தித்தது மற்றொருகாரியப்பிரமத்தை யுபாசித்தற்கேதுவேயாமென்று அக்னிஹோத்ரகாலநிந்த்யோபயானமுங்காட்டிய பிரசங்கித்ததைமறந்து "ஸ்காந்தபுராணமுதலிய சைவக்ரந்தங்களில் சிவன்-மகேசன்முதலிய பதங்கள் காரணப்பிரமத்தையுணர்த்துவனவாம்" என்று தமதறிவினகலத்தை விரித்ததென்னையோ? இப்படியேயன்றோ "விஷ்ணுபுராணமுதலிய வைஷ்ணவக்ரந்தங்களில் விஷ்ணு நாராயணன்முதலிய பதங்கள் காரணப்பிரமத்தை யுணர்த்துவனவாம்" என்று பிறர்கொண்டுகூற இடஞ்செய்தனர்? இவரதறிவின் மலைவிவ்வளவினதோ? சிவபுராணங்களும் விஷ்ணுபுராணங்களுங் காரணப்பிரமோபாசனையையேகருதி வெளிவந்தனவாயின், கைவிடத்தக்க சிவன்-விஷ்ணுமுதலியகாரியப்பிரமங்களை அப்புராணங்களிலடைத்துவைத்தது வீணும் காரியசிவ

ன்முதலினோர் நிருதையும், காரியவிஷ்ணுமுதலினோர் நிக்[illegible] யுமே நமதன்பர்தேடிய முடிவாயிற்று. ஒன்றனிங்கை மற்[illegible] ன்றனுபாசனைக் கேதுவாய என்றுகூறியதூம வெற்றொச்ச லாயிற்று. இவர் "விஷ்ணு-சிவன்-கணேசன்-தேவி - சூரியன் முத லானநாமங்கள் காரணப்பிரமத்தினுடைய நாமங்களேயாம். காரியப் பிரமங்கட்கும் அவை நாமங்களாகப் பொருந்தும்" என்று கற்று வெளிவந்தபுலமையே காரியப்பிரமோபாசனையைப் புராண ங்களுணர்த்தாவென்று புகலுமபடிதுமைக்காதரவாயிற்று. பர மான்மாவாகிய ஸ்ரீபரமேசுவரனுக்கு நாராயணாதி நாமங்கள் ரூடிநாமங்களாகாவாம். பிரஹ்ம சிவ சம்பு ருத்ர ஈசான ஈச மஹேச ஈசுவராதிநாமங்களே பரமாத்மாவாகிய ஸ்ரீபரமேசுவ ரனுக்குரிய நாமங்களாம். நமதன்பரது பக்ஷத்தை மறுத்து எமதுபக்ஷத்தை யிடமவந்துழி யினிதுவிரிப்பாம. சைவவை ஷ்ணவாதி புராணங்கள் காரணப்[illegible]தையே புத்தேசமா கக்கொண்டனவேயன்றி, அவை சிவன் - விஷ்ணு-பிரஹ்மா- அக்னி-சூரியன் என்னுங் காரியப்பிரமங்களாகிய நாமரூபமு டைய தேவதைகளின்பேரால் தனித்தனிப்பிரிந்து வெளியா கவேண்டிய அவசியமில்லை. சிவபுராணங்கள்பத்தும,விஷ்ணு புராணங்கள் நான்கும்,பிரமனதுபுராணம இரண்டும, அக்னி புராணம் ஒன்றும, சூரியபுராணம ஒன்றுமாகிய பிரிவும் வேண்டுவதில்லை. சாத்விகம - ராஜசம் - தாமசம்-சங்கீரணம் என்னும பாகுபாடுகளையும அவைவேண்டா. அன்றி "மந்த புத்தியுடையோர்க்கு உபாசனையின்பொருட்டு நாமரூபரகிதமான பரமான்மாவுக்கு மாயையினாற்பண்ணப்பட்ட கற்பித நாமரூபங்கள் கூறினர்" என நமது அன்பர் கூறிக்கொண்டதும் அவலமாம். என்னெனின், பரமான்மா நாமரூபரகிதமானது. நாமரூபங் கள் மாயையினாற்பண்ணப்பட்ட கற்பிதங்கள். இங்ஙனமாக, பரமான்மாவாகிய காரணப்பிரமம் சிவன-மகேசன், நாராய ணன் - கேசவன், பிரமன் - விதாதா, அக்னி - எழுநா, ஆதி த்தன் - சூரியன் என்பனவாதிநாமங்களை உரியனவாகப்பெ றுதல் யாங்ஙனம்? இதனால், நமதன்பரிந்தநாமங்கள் காரியப்

த்திருக்கும் வேதபாகியமாகிய பஞ்சாயதநபூசை பெ
பஞ்சபூசையை யிவர்மதித்தே யிவ்வாறலையின்றன
"மாத்வாருத்ரபிக்ருதாமோ நமோபிர்மோ துஷ்டநிவருஷப
ஹூதி" என்னும் ருக்வேதமந்திரம் சிவபெருமானோடு
னமாகவரித்து இதரதேவதைகளைப் பூசித்தல் துஷ்டபூ
யென்று ஒதுக்கியதன்றியும், அவ்வாறுசெய்தல் சிவ
கோபத்திற்கேதுவாமெனறும பரிஷ்கரித்தது. இவ்வுண்
யறிந்தே ஏகலிங்கார்ச்சனமேற்றிடுவ தெல்லாமுணர்ந்த
ரியோர். இத்தேவக்குழாத்துட் சிவனார் சூரியனது பல்
தகர்த்தார். அக்னியைக் கைபைமுறித்தார். பிரமனைத்
யையரித்தார். விஷ்ணுவைக் கண்ணைப்பறித்தார். பி
ஷ்ணுக்கள் அடிமுடிதேடிக்காணு தயரமிமிர்ந்தார். இ
ணமை பைப்பயா தத்திற்போந்தன. ஸ்ரீவாசகத்திருமு
மிவற்றைக்கூறியது. சிக்ஷித்தும், ரக்ஷித்தும் அநுக்கிர
சிவனைவழிபடுதலும், அந்தச்சிக்ஷாரக்ஷைகளைச் சிவ
மேற்ற விஷ்ணுவாதியரைவழிபடுதலுஞ் சமபயனேயெப
மென்றெப்பிய விவ்வேதாந்தியார்க்கு வைவஸ்வதனே
ந்தளிக்கத்தக்கவனென்க. இச்சிவனாரதுவைபவத்தைப் பு
ணங்களுமுணர்த்துகின்றன. சிக்ஷித்தசிவனும், சிக்ஷைய
கதவிஷ்ணுவாதியருங் காரியப்பிரமங்களென்று துணிந்தம
கமேயன்றோ யாவருடையவுபாசனையின்பலமும் சமமென்
கூறுதற்கு இடஞ்செய்தது? இனியிவர் சிவன்பாதத்தை
பிரமவிஷ்ணுக்கள் தேடிக்காணுததுமுதலிய சிவோத்கர்ஷ
களை யொப்பார்போலும். ஒப்புவாராயின்,சிவன்திருவடி
க்காணுத பிரமவிஷ்ணுக்களைத்தள்ளி அவர்கண்முன்ன
ற்பிழம்பாய்நீண்ட அற்புதமூர்த்தியைக்கொள்ளவிதிக்கும்
ராணங்களுக்கு இவர்தேடியகதி இவரைப்பரிபவத்துக்கே
ளாக்கும். இவர் ஒன்றன்கிந்தை மற்றொன்றனுபாசனைக்
துவாம் என்றுகூறியகருத்து இதனோடுமாறுபடுதலினென்
ஙனமெனின், விஷ்ணு அநுபாஸ்யன், சிவன் உபாஸ்ய

தாமேயவற்றினுக்கியோர்போல வெளிவந்தபெருமையேயன்றோ இவ்வளவவதியிலழுத்தி இவரை அலக்கணபடுத்தி விட்டது ?

இனியொன்றுகூறுகின்றோம. அரசனைவழிபடுபவனும், மந்திரியை வணங்குபவனும், சேவகனைத் தொழுபவனும, அடைவது சமயமென்னறு நமதன்பர் கூறுவாரா? அரசனையடுத்தா லடுத்தவனை அவ்வரசன் மந்திரியாக்காய. மந்திரியையடுத்தா லடுத்தவனை அம்மந்திரி மந்திரியாக்குதல்கூடுமோ ? தன்கீழடங்கிய வேறதிகாரியாக்குதலே அவனாற்கூடும். சேவகனையடுத்தாலடுத்தவனுக்கவன் யாதுசெய்வன்? பிரபுவினதுசமயம்பார்த்துத் தெரிவிக்கலாம. பிரபுவைக்காணவந்தவரைத் தடுக்காதிருக்கலாம. இத்தகைய வற்பலாபங்களேயன்றி அதிகலாபஞ்செய்விக்க வவனொன்றுமறியாது. அவரவரது யோக்யதைக்குத் தக்கவாறு அரசன் முதலாயினா பயனளித்திடு மநுபவநத்திற்கு விரோதமுண்டாக. அரசனமுதலிய யாவரைவணங்குவதும சமயமென்பெதருமென வொருவன்புலம்பின், அதனை யாரோ அவங்கீகரிப்பவர்? அவனை மூடனென்றே இகழ்வரென்க. அரசன் மந்திரியை சேடிக்கலா ம. மந்திரி அரசனைச்சேட்டிப்பனோ? மந்திரி மற்றவரைச் சிக்கலாம. மற்றவா மந்திரியைச்சேடிப்பாரன்றோ ? அர காலில் மந்திரிவிழுவான. மந்திரிகாலிலரசன்விழுவனோ ? திரிகாலில் மற்றவாவிழுவார்கள். மற்றவாகள்காலில மந் விழுவனோ ? இவற்றைத்தெளிந்திடாது சிவன்முதலாயி காரியப்பிரமங்களென்றும, சிவன்விஷ்ணுமுதலாயினா சனை சமயமனையே தருமென்றும் நமது பகுஞானச்செல் பரிந்துரையாடியது பாழுரையாய்ப பறந்ததென்க. இம் டோ, அந்தணனை வழிபடுதலும், அரையனைவழிபடுதலும், வைசியனைவழிபடுதலும்,சூத்திரனைவழிபடுதலுஞ் சமமா யாங்ஙனம்? பிரமசாரியைவழிபடுதலும், கிரகத்தனைவழி தலும், வானப்பிரத்தனைவழிபடுதலும், சந்யாசியைவழி

சமமாதல் யாங்ஙனம்? சரியாவானைவழிபடுதலும்,
வானைவழிபடுதலும், யோகியைவழிபடுதலும், ஞானி
வழிபடுதலுஞ் சமமாதலியாங்ஙனம்? இத்தகைய பல
பாடுகளையாராயுங்கால் சிவனைவழிபடுதலும், ஏனையோ
வழிபடுதலுஞ் சமமபனமயாபத்தமென்னுஞ் சமக்குறை
ரவ்தமாமென்க. சூதசங்கிதையில் சிவனையும், விஷ்ணு
வையும் பிரஸ்தாபித்து இருவரும் சமமாகவொன்று பிரசங்கி
த்ததன்றித் தலையுங்காலு மொன்றாகுமா வெனவும், வாயுங்
குதமுமொன்றாகுமாவெனவுங் கடாவி, உபமானவாயிலாகவு
மவ்விருவாது மையாவதாழ்வுகளை யினிதுபரிஷ்கரித்திருக்கின்
றது. தலையாலடையும்பயனுங் காலாலடையும்பயனுஞ் சம
மாகுமா? வாயாலடையும்பயனுங் குதத்தாலடையும் பய
னுஞ் சமமாகுமா? இவற்றை நமதன்பர் யோசிக்கக்கடவர்.
இச்சூதசங்கிதையே "பூஜ்யபாதர்" என்றிவர்கொண்டாடு
ஞ் சங்கராசாரியருக்குப் போதரவாய்நின்றநூல். இதில்
சிவவிஷ்ணுக்களைச் சமமென்றெண்ணினவனைப் பதிதனென்
று நிஷேதித்திருக்கின்றது. அன்றியுஞ் சங்கராசாரியர் சிவபு
ஜங்கம், விஷ்ணுபுஜங்கமுதலிய சிலநூல்கள்செய்திருக்கின்ற
னர். அவற்றுள், சிவனைத்துதிக்கும்போது விஷ்ணுவை சேவ
வகர் என்றும், சிவனை சேவ்யர் என்றும நன்குவிளக்கியிருக்
கின்றனர். விஷ்ணுவைத்துதிக்கும்போது பிரமனை சேவகர்
என்றும், விஷ்ணுவைசேவ்யர்என்றுந் தெரிவித்திருக்கிறார்.
சிவனை சேவகர் என்று அவர்மறந்துங்கூறுகிலர். சிவாநந்த
லகரியில், "எனக்குப் பிரமவிஷ்ணுக்களாகப் பிறந்துழலும்
ஜன்மங்கள்வேண்டாம். அப்படி யான்பிறப்பின் ஹம்ஸமாக
வும், வராஹமாகவும வடிவெடுத்து அஹங்காரத்தாலுன்னை
மறந்து அவதியிலழுந்தவரும். ஆகையா லுன்றிருவடிப்பே
றுன்றேவேண்டும்" என்றுசிவபிரானையிரந்து அவர் துதித்த
லம் வியக்தம். இப்படியே யிவரதுசமயமுன்னோரி லொருவ
ராகிய தத்துவராயர்செய்தநூலினுங் காணலாம். "ஊப
ன்குறு மயன்முதலிமையவர் தொடர்வுமஞ்சுவர் சிவசிவ சிவசிவ"

என்று பாடுதுறையிற் சிவனைத் துதித்திருக்கின்றனர். [illegible] யே "சைவநெறியே யுய்யுநெறியது" என்று அப்பாடுதுறை [illegible] வீட்டுநெறியகவலில் விதந்திருக்கின்றனர். இவ்வாறு வி[illegible] வாதிக்யங்களை அவர்களது நூலிலிருந்தெடுத்து எமக்[illegible] காட்டுவாராக. பூர்வமாயாவாதிகளெல்லாஞ் சிவசர்வோ[illegible] மங்கூறி இதரதேவதோபாஸனையால் வரும்பலன் க்ஷு[illegible] பலனென்று பிரதிஷ்டித்திருப்பதற்கு மாறாகப் பூர்வபக்ஷி யார்கூறிய சித்தாந்தம் பொய்ப்பட்டழிந்தவாறறிக. இன்னு ம், சூதசங்கிதையில் "கேசிதத்வைதமாச்ரித்ய - பிடாலப்ரதி மாநராஃ,ருத்ரேணஸாம்யமஸ்யேஷாம்-வதந்திப்ரவிமோஹிதா:"என் றொருவசனங் கேட்கப்படுகின்றது. இதில,அன்னியர்களோடு சமானமாக ஸ்ரீருத்ரமூர்த்தியை மோகத்தினாற்சிலர்புலம்புத ற்கு அத்வைதமேகாரணமாயிருக்கின்றதெனவும், அவர்கள் பூனையொத்தவராகின்றார்களெனவும் இனிது கூறப்பட்டிரு க்கின்றது. இவைகளையெல்லாம் நமது பக்ஷஞானியார் பார்த் திருப்பி னிவ்வாறு சிவநிந்தையிலிறங்கமாட்டார். ஆயின், விஷ்ணுபுராணங்களிற் சிவாபகர்ஷந்தோன்ற விஷ்ணுபா தகங்கையைச்சிவன்றரித்ததுமுதலிய விஷ்ணுமகிமைகூறிய தென்னையெனின்,இது வைஷ்ணவன் நமதுமாயாவாதியாரை க்கேட்டு அவர்கூறுங்காரணப்பிரமோபாசனையைத் தடுப்பத ற்கு ஆதரவாயுள்ளதொன்றாகையால், அதற்கு ஈண்டியாம்ச மாதானஞ்சொல்லக்கடமைப்படவில்லை. அவன் எம்மைக்கே ட்டவிடத்தில் யாம் சமாதானஞ்சொல்லாமற்போகவுமில்லை; இன்னுஞ் சூதசங்கிதையில் நாராயணன் - கோவிந்தன் - வி ஷ்ணு - கேசவன்முதலிய நாமங்கள் சிவௌபாதநாமங்களேயா யினும், அவை யோகநாமங்களேயாயினமையால், அவை மு முட்சுக்களுக்கு அநுபாஸ்யமெனவும், சிவ சம்பு ருத்ர சங்கர மஹாதேவ பசுபதித்யாதி திவ்யநாமங்களாகிய யோகரூடி நாமங்களே அவர்க்குபாஸ்யமெனவும் விதித்திருப்பதையும் புபுட்சுவாகியநமதன்பர் பார்த்திரார். பார்த்திருப்பின், ஐந்து தேவதைகளி னுபாசனைபின்பலனும் சமமென்றுவாதிடத்

[illegible]கொள்ளமாட்டார். இவ்வைந்துதேவதைக [illegible]ரதுபட்சத்தின்படிக் காரியப்பிரமங்களாம். கா[illegible]ளோ கைவிடத்தக்கன. கைவிடத்தக்கவையோ ரு[illegible]பய[illegible]ந் தரமாட்டா. பயன்றருவனவாயின், கைவிடத் தகனவாகா. ஒருபயனுந்தரயோக்யமற்ற விவற்றினுபாஸனை [illegible]பயனைத்தருமென்பது என்னவிந்தை? நமதன்பரதுபோ[illegible]ம் அவிவேகபூரணகுருவின்மாணுக்கரோ மெச்சத்தக்கது.

இவரிம்மட்டேபோகாமல் "மாயாவிசிட்டமான காரணத்தைப்பிரமமென்றவர் இரணியகர்ப்பரானகாரியத்தையும் பிரமமென்றனர்" என்றதுமுதலிய சிலவாபாசங்களைத் தொடுத்து வீண்வழக்கிட்டாராகையா லதனையுமவிசாரித்து ஒழிப்பாம். இவரிரணியகருப்பரென்றது சிருட்டிகர்த்தாவை. இவருக்குப பிரமன்என்னும்பேர்வந்தது காரணப்பிரமத்தின்பேராதனு லேயென்பதிவர்கருத்து. இந்தப் பிரமப்பெயர் எல்லாக்காரியப்பிரமங்கட்கும் வாராமல்அவருளொருவருக்குமாத்திரம்வந்ததென்னை? காரியப்பிரமங்களு ளிவரென்னசிறந்தவரா? பிரமமென்னுஞ்சிறந்தபெயர் காரணப்பிரமத்துக்கும் இவருக்குமே ஏன் சொந்தமாயின? சிருட்டிகர்த்தாவினிடங் காரணப்பிரமத்தின்பேரைச் சாதித்ததுபோல் திதிகர்த்தாவினிடமும், சங்காரகர்த்தாவினிடமும் ஏன்சாதிக்கவில்லை? அங்ஙனஞ்சாதிப்பதாயின், "மாயாவிசிட்டமானகாரணத்தை விஷ்ணுவென்றவர் விராட்டானகாரியத்தையும்விஷ்ணுவென்றனர்" என்று கூறவேண்டும். அப்படியே "மாயாவிசிட்டமானகாரணத்தைச் சிவன் என்றவர் அவ்யாக்ருதரானகாரியத்தையுஞ்சிவன் என்றனர்" என்றுகூறவேண்டும். இப்படியே "மாயாவிசிட்டமானகாரணத்தைக் கணேசன் - தேவி - சூரியனென்றவர் விராட்டிரணியகர்ப்ப அவ்யாக்ருதர்களின் காரியங்களையுங் கணேசன் - தேவி - சூரிய[illegible]ன்றனர்" என்றுகூறவேண்டும். இவரதுகாரணப்பிரம[illegible]க்கு எந்தப்பேரிருப்பினுந் தேவி என்னும்பேரிருப்ப[illegible]ங்கதமாமன்றோ? இதனை யாவர்தானொப்புவர்? இ[illegible]திரிவாசகமாயிருந்தபடியா லெடுத்துக்காட்டினோம். பிரஹ்மம் நடும்

யவாயின. இவற்றோடினப்படாமல் விஷ்ணு - விதாதி
வினைப் பிரதிபாதிக்குஞ்சுருதிகளொதுங்கின்மைய
காரணப்பிரமத்துக்குரியன நாராயணுதிநாமங்களெனப்
வபட்சியார் தொடுத்தவாதம் அவலமாகியதுகாண்க. வே
போர்தகசுருதிகளால் சிவ-சம்பு-ருத்ர சப்தங்களே பிரஹ்ம
அல்லது பரவஸ்துவுக்குரியனவாகி விஷ்ணுவாதிசப்தங்க
நகாரணம் என்றொதுக்கத்தக்கவாயின. திரிமூர்த்திகளு
சீவர்களென்பதே வேதத்தின் சம்மதமாகையாலும், அத
"ப்ரஹ்மவிஷ்ணவீசாநேந்த்ராதீநாம்" என்னுஞ் சுருதியில் "அ
யாஸவசாம்ஜீவ:"என்று பிரதிஷேதித்திருக்கும்வாக்கியம் தெ
விக்கின்றமையாலும் இவர்களைக் காரியப்பிரமமென்றுவ
வது,பிரமத்தினது அவதாரங்களென்றுவதுகூறுவது வேதபா
கியர்கூற்றேயாமென்க. ஜீவர்களாகிய திரிமூர்த்திகளில் சங்
காரகர்த்தாவுக்கு உருத்திரனென்னும் பேர்வந்தது அவர் துரீய
மூர்த்தியாகிய சிவபெருமானது சாரூப்பியமெய்திய ஜோ
துவாலென்க. சிவசாரூப்பியத்தா லச்சிவனாது நாமரூபங்
களைப்பெறுதல் வேதபடிதமாகையால், குணருத்ரருடைய
யோக்யதை இனிது வெளிப்பட்டது. "மூவருக் கறிவரும
பொருளாகியமூலத்-தேவர்தந்திருவாவடுதுறை" எனச் சேக்கிழா
ர்பெருமான்கூறினர். இதுவே சைவசமயாசாரியரது அபிமத
மெனல் "தேவர்கோவறியாத தேவதேவன்-செழும்பொழில்கள்
பயந்துகாத்தழிக்குமற்றை - மூவர்கோனய்நின்றமுதல்வன் மூர்த்தி
மூதாதை மாதாளும்பாகத்தெந்தை"என்னுந் திரவிடசூக்தியா
ல் வியக்தம். இம்மூவரையுங் காரியப்பிரமங்களெனவும், கா
ரணப்பிரமம் நாமரூபாகிதமாயுள்ளதெனவும், அக்காரணப்
பிரமம் மாயாவிசிட்டமானதெனவும் நமதன்பர்கூறியதை
யே யாம் மறுத்தோம். இதற்குமேலொரு சுத்தப்பிரமமிருக்
கின்றது என்னும்அலங்கதத்தையுமடித்தோம். பிரமவிஷ்ணு
ருத்ரர்களைக் கடந்தது நாலாவதாயுள்ள சிவம் என்றுகூறு
சுருதியைவிரோதித்து நாலாவதுபொருள் காரணப்பிர
அதற்குமேலிட்டது சுத்தப்பிரமம் என்றுவாதாடுவ

...வது வஸ்துவொன்றிருப்பதாக மந்தமதிகள் ஆலோசிக்க இடஞ்செய்கின்றது.

பிரமம் ஒன்றே! அதுவே சிவசம்புருத்ராதி நாமங்களாற் பிரதிபாதிக்கப்படுவது. அதற்குக் காரியகாரணவிவகாரங்கள் கிடையா. பிரமன்முதலியமூவரும் அதன்காரியங்களோகா. அதற்கு மாயாவிசிட்டத்தன்மையாவது, மாயாகாரியவிசிட்டதன்மையாவது கிடையா. நமதன்பர் கூறிய காரணமாயை வியாப்பியமும, காரியமாயையிற்பட்ட பிரமன்முதலினோர் வியாத்தியும், நாமாவதாகச் சுருதிபோதிக்குஞ் சிவம் வியாபகமுமாமென்றே வேதவித்துக்கள் விதந்திடுவரென்க. இச்சிவம் உருவம், அருவம், உருவருவமென்னும் திருமேனிகளைப் பரப்பிரயோசனத்தின்பொருட்டே கொள்ளும அருளியற்கையினதென்க. அதற்கு அருளே திருமேனியுங் குணமுமாமென்க. "காயமோ மாயையன்று காண்பது சத்திதன்னால்" எனவும், "சத்திதன் வடிவேதென்னிற் றடையிலா ஞானமாகும்" எனவும்போந்த சைவசித்திருவாளரது திருவாக்குகளுஞ் சான்றென்க. இச்சிவத்தினது அருவத்தையொருபிரமமெனவும், உருவத்தையொருபிரமமெனவும், அருவுருவத்தைமற்றொருபிரமமெனவும பிரித்துச்செய்யும பிரசங்கம பேதைப்பிரசங்கமேயாம். இதனது அவதாரங்களையு மிதிலவேறுபிரித்துப் பிரசங்கித்தல் அஸங்கதம். இவ்வுண்மைதெளிந்தபேரிவ்வெல்லாப் பேதங்களு மவ்வேகவஸ்துவினது தாதாத்மியமாகவேயறிந்து யாவுமே சிவமாகியதுரீயமென்று சாதியாநிற்பர். இதனால், உருவம், அருவம் - உருவருவமுதலியனவும், - தேவி - கணேசர் - ஸ்கந்தர் முதலினோரும நாலாவதாகியசிவத்தில் வேறாகாத துரீயமெனப் பிரஸ்தாபிக்கும பாதத்வநிலையெய்தியவுண்மை வேதஸம்மதமாம். இச்சிவவடிவங்களையும், இவர்களின்வினோதியாகிய பிரமவிஷ்ணுருத்ரர்முதலியபசுக்களையு மிணைப்பித்துக் காரியப்பிரமங்களென்று பேசுங்கூச்சலுக்கு வேதத்திலாதரவுகிடையாதென்க. இவர்களைப் பிரமங்களென்றொவ்வோரிடங்களில வேதங்கூறியது இன்னோர், சிவம் - அல்லது

பிரமத்தினது பரிக்கிரகசத்திகளாதலைப் போதருவித்தற் பாம். தாதான்மியம் அபின்னமும், பரிக்கிரகம் பின்னமுமாகிய சத்திபேதங்களாகப் பரனிடங்கேட்கப்படு முனை யுணர்ந்தவர்கள் தாதாத்மியம் ஒருவனதுகையும், பரிக்ரஹம் அக்கையிற்பிடித்த கோலுமாக வுவமித்துத் தெளிந்திடுவரென்க. இதனால், விஷ்ணுமூர்த்தியோ பரமனது கையிற்பிடித்த கோலினது நிலையினின்று சுதந்திரமில்லாதபரிசு வெளிப்படலால் இனஞ்சேராபிரமத்தில் பேதமாகிய தாதான்மியசத்திகளாகாமல் பரபிரமத்துக்கு வேறாகிய பரிக்கிரகஸம்பந்தமெய்தியவனென்லே யமைவுடைந்து. நாராயணனை "நாராயணபோதயாதா" எனவும், ஸ்ரீசிவபெருமானை "சிவ ஏகோத்யேயஃ" எனவும் வேதமவிர்ந்தமையானும், விஷ்ணுவைப் பசுவும், சிவனைப் பதியுமாக யாத்துணிந்தலம வியக்தமாகியது. திரிமூர்த்திகளிற்போந்த உருத்திரர் பரவஸ்துவாகாரென்க. இவர் "த்யாதாருத்ரஃ" என்று படிக்கப்பட்டுச் சேர்ந்தருள விடப்பட்டாதல் பெறப்பட்டவாறறிக. தியாதா என்பது தியானிக்கின்றவனையும், தியேய என்பது தியானிக்கப்படுகின்றவனையும் வெளிப்படுத்தின. தியேயனை வழிபடுங்கால் அவர் சிற்சடங்களினிறைந்த வமைதியறிந்து எல்லாச்சித்தையும், எல்லாச்சடத்தையும் அந்தத்தியேயவஸ்துவாகப்பாவித்து உபாசித்தலநுபவஸித்தம். "ப்ருதிவீயோபவ:, ஆபச்சர்வ:, அக்னேருத்ர:, வாயுர்ப்பீமஃ, ஆகாசஸ்யமஹாதேவ:, ஸூர்யஸ்யோக்ர:, சந்த்ரஸ்யஸோம, ஆத்மாநஃபசுபதிஃ" எனனுஞ்சுருதியே இதற்கு நிதரிசனமாம். பவ - சர்வ - ருத்ர - பீம - மஹாதேவ உக்ர - ஸோம - பசுபதி நாமங்களாற் பிரகாசிக்கும் பரமாத்மாவினது திருமேனிகளாதலைகண்டே சிற்சடங்கள்யாவுமே பிரஹ்மமென்று வேதம் விதந்தவாறறிக இவற்றுள், பிரமவிஷ்ணுக்கள் கொஞ்சமவிசிட்டராதல்கண்டே இவர்களைவேறுபிரித்துத் தனித்தனிப்பிரமங்களென்று வேதாதிகள்விதந்தனவென்க. இவருளதிகவிசிட்டராதலகண்டே உருத்திரமூர்த்தியைப் பரமாத்மாவிலபேதஞ்சொன்றப் பிரஹ்மசிவசம்புசங்கராதிநாமங்களால் வேதம்

வ னாலுணர்ச்சியெய்தாத குறைவேயாமென்க. இப்பிரமனுதியோர் பிரமத்தினது அவதாரங்களாயிருக்கும்பட்சத்தில்இவர்களைப்பிரஸ்தாபித்து, "நான்பிரமனாகப்பிறத்தலும்,விட்டுணுவாகப்பிறத்தலுமாகியவாழ்வைவிழைந்திலேன்" என்று சங்கராசாரியர்வருந்த அவசியமில்லை. "கொள்ளேன்புரந்தரன் மாலயன்வாழ்வு குடிகெடினும்" என்று ஸ்ரீவாசகப்பெருமானும பிரதிஷேதிக்கக்காரணமில்லை. இவற்றைநோக்காது ஐந்துதேவதைகளினுபாசனையுஞ் சமயயனேயேதருமென்ற நமதன்பரதுவாதம் அலங்காத்மவாதமாகவே முடிந்தது. "வீடுபேறுப்நின்ற விண்ணோர்பகுதி - கீடம்புரையுநகிழவோன்" என்னுமிந்த ஸ்ரீவாசகம் சமயிகளதுவழிபாட்டையேற்று அவரெய்துமவீட்டின்பேறுகதிற்கு மச்சமயாதிஷ்டானதேவர்களைச் சிவசந்நிதியிற் கீடமபோலவாரொனக் கிளத்தலாலு மெமதுபட்சம் வேரூன்றிப் பொலிவெய்தியது. இவற்றைவிசாரிக்கும ஸாதுக்கள் நமதுஅன்பரது விபரீதத்தைக்கண் டஞ்சுவரொன்க.

இனி வியாசராபிப்பிராயமறியாம லிவருமிவரதுபூர்வீகருமே துக்கிக்கின்றவரொன்பதை யினிதுவிளக்குதும். பராசரபுராணத்தில், "யோபகர்ஷோஹரோர்த்ருஷ்டச் சாம்பவேஷ்வ லிலேஷுச, புராணேஷு ஹரோஸ்ஸாட்சாந் - மூலபூதஸ்யஸத்தம, வைஷ்ணவேஷு புராணேஷு யோபகர்ஷஸ்துத்ருச்யதே, ருத்ராம்சஸ்யஹரஸ்யாஸ்ய-விபூதேரேவகேவலம், உத்கர்ஷோயஃ புராணேஷு த்ருச்யதேஸாம்பவேஷுச, ருத்ரஸ்யாஸௌ ஸ்வரூபேண - மூநேதத்வாத்மநாபிச, உத்கர்ஷோயஃ புராணேஷு-த்ருச்யதேவைஷ்ணவேஷுச, அஸௌதத்வாத்மகாவிஷ்ணோர்-நஸ்வரூபேணஸத்தம" என்னும்வசநம் சகலசைவபுராசணங்களிலுங் கூறப்பட்ட விஷ்ணுநிகாஷத்வம் மூலபூதனை விஷ்ணுவுக்கேயென்றும்,வைஷ்ணவபுராணங்களிற்கூறப்பட்டசிவநிகர்ஷத்வம் சிவவிபூதியாகிய உருத்திரமூர்த்திக்கேயென்றும், சிவபுராணங்களிற் கூறப்பட்ட சிவோத்கர்ஷம் ஸ்ரீ சிவபெருமானுக்கேயென்றும், விஷ்ணு புராணங்களிற் கூறிய விஷ்விணதுஉத்கர்ஷம் அவரிலங்கசியாமியாகிய சிவபெருமானுக்கே யென்றும் இ

ளிதுபிரகாசப்படுத்தியது. இதனால், சகல புராணங்களாலும் ஸ்ரீசிவபெருமானே உபாஸ்யனென்னும் சித்தாந்தம் வியக்த மாயிற்று. சிவனை அந்தரியாமியாகப் பெற்றிருத்தலினாலே யே விஷ்ணுவுக்கும், அவரது புராணங்களுக்கும் பூஜ்யத்வ முண்டாயினமையும் பிரஸித்தமாயிற்று. பிரமன் - அக்னி - சூரியன்முதலியோரது மகிமைகளையும், அவர்களது புராண ங்களின் மகிமைகளையும் இவ்வாறேகொண்டுதெளிக. இவ்வு ண்மையை "அஹம்ஹிஸர்வஹவிஷாம் - போக்தாசைவபலப்ரத:, ஸர்வதேவதநுர்ப்பூத்வா - ஸர்வாத்மா ஸர்வஸம்ஸ்தித:" என்னும் வசனத்தால சாவகதனாகியும், சர்வஸ்வரூபியாகியும், அக்னி ஸோமேந்த்ரவிஷ்ணுவாதி சர்வதேவதநுர்ப்பூதனாகியும்,சர்வ முக்யஹவிர்த்திரவியங்களுக்கும் போக்தாவாகியும் நானே ப லபிரதாதாவாகின்றேனை என்று ஸ்ரீசிவபெருமான் சொல்லி யருளினரென்று தெரிவிக்குங் கூர்மபுராணத்தானுமறிக. வி ஷ்ணு - பிரமன் - அக்னிமுதலினோரது புராணங்களுக்கும் சிவனே பரமகர்த்தாவாதலை விசாரிப்பவர்கள் நமதன்பரது தெளிவற்றஞானத்தை எங்ஙனுமதிப்பார்கள்? பதுமபுரா ணத்தில் "ஸாங்க்யம்யோக: பாஞ்சராத்ரம் - வேதா: பாசுபதம் ததா, ஜ்ஞாநாந்யேதாநி பஞ்சைவ-ஜ்ஞேயச்சைகோ மஹேச்வர:" என்னும வசனத்தால் சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம், வேதம், பாசுபதம் ஆகியவிவ்வைந்தும் ஞானங்களென்றும், இவற்றாலறியப்படுஞேயப்பொருள் சிவபெருமானேயென்று ம் பெறபபட்டிருக்கின்றது. இதனால், எல்லா நூல்களாலும் பரதத்வமாயும், ஞேயமாயும் பிரதிபாதிக்கப்படுஞ் சிவனரது பரமகாரணத்வமே இனிதுவெளியாகியது. "ஈசாநஸ் ஸர்வவி த்யானாம்" எனவும், "வேதைரநேகைரஹமேவவேத்யோ" என வுஞ் சுருதிகள் கோஷிக்கும் சத்தியத்தை விசாரித்துத் தெ ளிந்தவர்க்கே விஷ்ணுபுராணமுதலியவற்றாற் றெளியத்தக்க பரதத்துவநிச்சய மீதெனவெளிப்படும். "வேதைச்சஸர்வை ரஹமேவவேத்யோ" என்று (கைவல்யத்திற் சிவனார்சொல்லிய ருளினதையே) ஸோஹம்பாவனையாற் கண்ணன் கீதையிற்

சொன்னனெனவறிக. இந்த விசாரத்தால் ஜீவஸாமான்யத்வமே கண்ணனிடத்திற்கேட்கப்படுமுண்மையைப் பிரஹ்மவாதிகள் அறியாமற்போகார். “தமேவசாத்யம் புருஷம்ப்ரபத்யே” என்னும் வசனத்தால கண்ணன் அந்த ஆதிபுருஷனையே நான்சரணமடைகின்றேன் என்று தனதுஆத்மநாதனைப் பிரகாசப்படுத்தினர். “ஈச்வரஸ் ஸர்வபூதாநாம்” என்னும் வசனத்தால் சர்வ பூதாந்தராத்மாவாகிய ஸ்ரீ பரமேசுவரனைப் பிரஸித்தப்படுத்தினர். இத்யாதி பிரபலஸாட்சிகளால் கண்ணன் உபாஸ்யனும், சிவபெருமான் உபாஸ்யருமாகிய சைவநலமே கேட்கப்படுகின்றது. இவனைப் பிரதிபாதிக்கு நூலகள்யாவுஞ் சிவனைப் பிரதிபாதிக்குநூலாகவே கொள்ளுவார்க்கு விஷ்ணுபுராணமுதலியவற்றுல் சிவநிந்தையாவது, விஷ்ணுபரத்வமாவது பெறப்படுமென்றுகூறுத லெங்ஙனேவடுக்கும்? விஷ்ணுபுராண முதலியவற்றில் உருத்திரநிந்தை கேட்கப்படுதல் பசுவாகிய அவ்வுருத்திரருக்கும், துரீயராகிய பதிருத்ரருக்கும் பேதத்தைப் பிரகாசப்படுத்தற்கேயாம. சிவபுராணத்திற் கேட்கப்படும் விஷ்ணுநிந்தையும், விஷ்ணுபுராணத்திற் கேட்கப்படு முருத்திரநிந்தையு மவ்விருவரும் பசுக்களாதலைப் போதருவித்தனவென்க. சிவபுராணத்திற்போந்த மகிமையும், விஷ்ணு - பிரமன் - அக்னி - சூரியன்முதலினோரது புராணங்களிற்போந்த மகிமையும் ஸ்ரீ பரமேசுவரனுகிய உமாநாதனது மகிமையென்றே அறியத்தக்கது.

விஷ்ணுபுராணத்தில் “ப்ரஹ்மவிஷ்ணு சிவாப்ரஹ்மந்-ப்ரதாநா-ஆத்யசக்தய:” என்னும்வசனம் பிரமவிஷ்ணுருத்ரர்கள் சிவனுரதுசக்திகளென்று தெரிவிக்கின்றது. கூர்மபுராணத்தில் “ஸர்வாஸாமேவசக்தீநாம்-ப்ரஹ்மவிஷ்ணுசிவாத்மிகா:, ப்ரதாநாஸ்ஸம்ஸ்ம்ருதாதேவா: - சக்தய: பரமாத்மந:” என்னும் வசநம் சர்வ சக்திகளுக்கும் பிரதானிகளாயுள்ள பரமாத்மாவின்சத்திகள் பிரஹ்ம விஷ்ணு ருத்ரர்கள் என்று ஸ்மரிக்கப்பட்டிருக்கிறார்களெனத் தெரிவித்தது. மைத்ராயண்யுபநிஷத்தில்,

" தஸ்யப்ரோக்தாஅக்ர்யாஸ்தநவோப்ரஹ்மா ருத்ரோவிஷ்ணுரிதி" என்னும் வசநம் பிரம விஷ்ணு ருத்ரர்கள் பரமாத்மாவாகிய ஸ்ரீபரமேசுவரனது தநுக்கள் என்று வெளிப்படுத்தியது. இம்மூவரையுந் தநுக்களென்று வேதங்கூறினமையால், இவற்றிற்குச் சைதந்யமே இனி வேண்டற்பாலதாயிற்று. அதுவே துரீயஸ்தானத்தினிற்பதொன்று. இதனால் துரீயம் சிவமாகியசைதன்யமேயாம். தநுக்களென்னும் பிரயோக மிருக்கையால், சிவத்தைநோக்கத் திரிமூர்த்திகளும் ஸ்வதந்த்ர ஹீனரொன்று ஏற்படுகின்றது. இதனை விளக்குங்கால் அவர்கள் பசுக்களென்பதேயாம. ஒருதேகமும, அதில் வசிக்குந்தேகியும் பின்னப்பொருள்களாயிடுதலபோல திரிமூர்த்திகளும், சிவமும் பின்னபபொருள்களாயின. இத்திரிமூர்த்திகளும் பிரஹ்மத்தினது சத்திகளென்னுமிடத்தும் பரிக்ரஹஸம்பந்தத்தால் அஸ்வதந்த்ரமுடைய பசுக்களென்று தெளிதலே முடிவென்றறிக. சிவன்-விஷ்ணு-பிரமன்-அக்னி - சூரியன்முதலினோரது புராணங்களில ஸ்ரீசிவபெருமானைச் சேவ்யரொன்று உபதேசித்ததற்கும், உருத்திரன்-விஷ்ணு-பிரமன்முதலிய பசுக்களைச் சேவ்யர் என்று உணர்த்தியதற்கும், அவ்வுருத்திரன் - விஷ்ணு - பிரமன்முதலினோரைச் சேவ்யராகார்என்று பிரதிஷேதித்ததற்குந் தக்ககாரணங்களை யாமெடுத்து விசதப்படுத்தினோமாகையால், வியாசரபிப்பிராயமறியாமல் யாம் தூக்கிப்பதாகப்பிரசங்கித்த பூர்பட்சியாரதுமதம் அஸங்கதமாகவே முடிந்தது.

இனி ஸ்ரீவியாசரது அபிப்பிராயத்தைக் குருஞானவாசிட்டம், சுகபரீக்ஷித்துஸம்வாதத்தாலு மினிதுவிளக்குவாம். பரிக்ஷித்துவானவர் சுகரைப்பார்த்து " ஐயா பகவானனசுகரே! பஸ்மஜாபால பிருஹஜ்ஜாபாலோபநிஷத்துக்களில் சிவமந்திரமே தாரகமந்திரமென்று சொல்லப்படுகின்றது. இராமதாபினிமுதலிய வுபநிஷத்துக்களில் இராமமந்திரம் தாரகமந்திரமென்றுசொல்லப்படுகின்றது. அவற்றுள், ஜாபாலாதிகளில் சிவனுக்குஇராமசிஷ்யத்வமும், இராமதாபினியாதிகளில்இரா

மனுக்குச் சிவசிஷ்யத்வமுங் கேட்கப்படுகையால், வேதாந்தங்களிலுங்கூட வியவஸ்தையுண்டாவது கஷ்டமாகவிருக்கின்றது.' இப்படிச் சுருதிகளுக்கே பரஸ்பரம்விரோதமுண்டாகிறபடியால், அவைகளைப்பரியாலோசித்து நான் தேடிக்கொணடசமாதானத்தைக் கொஞ்சம் சொலலுகிறேன் கேட்டருளுமென்றுதொடங்கி அந்தச்சிவனும் இராமருமாகிய விருவருமசர்வஜ்ஞர்களும், சர்வசித்தியுள்ளவாகளும, ஜகதாசாரியர்களும், காசிப்பதியின்கண சமானரானவாகளுமா யிருக்கின்றார்கள். தங்களிடத்தில மனுஷ்யர்களுக்குச் சமபுத்தியையுண்டுபண்ணுகைக்காகவே அவவிருவரும ஒருவருக்கொருவாகுருவானாகள்" என்றுமுடித்துத் தமதபிபபிராயத்தைத்தெரிவித்தனர். அதற்குச் சுகபபிரஹ்மம " வாராய் பூபாலகா! விசாரிக்குமளவில் உன்னுடைய நிச்சயமானது சாஸ்திரங்களுக்கும் பூர்வீகப் பெரியோர்களுக்கும் சமாதானமாகாது. வேதமுதலியகலைகளில் சிவனுக்கு விஷ்ணுமுதலிய சகல தேவர்களைக்காட்டிலும் சிரைஷ்டியமானது உத்கோஷிக்கபபடுகிறதல்லவா? திருவாலின்கீழமாநதிருக்கும் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தியே சாவாசாரியஸ்வாமியாயிருபபதறிந்தும், அவருக்கு ஆசாரியனைவிருமபியது என்னமதி? கருணாநிதியும், நித்தியசுத்தவிபுத்தாத்ம நிஷ்டருமான அவர் விஷ்ணுமுதலான சகலருக்குங் குருவென்று சொலலப்படுகின்றாரோதவிர அவருக்குமேலே ஒரு குருவிருபபதாக வோரிடத்துஞ் சொலலப்படவில்லை. இதனால, தாபநீயோபநிஷத்திற் சொல்லப்படும் இராமதாரகத்வம முக்யமாகாது. அது கிரமமுத்திக்குபயோகமாகையாலும், சிவனுக்குச் சிஷ்யத்வம் குணருத்ரரூபமாகையாலும், சிவனாதுபரத்வம் தாழாது.இதுபோலவே விஷ்ணுவுக்கு ஜாபாலத்திற்கூறிய சிவசிஷ்யத்வமுமாகட்டுமேயெனின், அதுகூடாது. சிவனுக்கே ஆலமரத்தடியி லெழுந்தருளியிருக்கும் ஆசாரியத்தன்மை பிரஸித்தமாகையாலும்,விஷ்ணுமுதலானவர்களுக்கு அவ்வாசாரியத்தன்மை யாண்டும் படிக்கப்படாமையாலும், ஸ்ரீதக்ஷிணாமூர்த்தியாகிய பரமேசு

வரர் விஷ்ணுவாதிகளைத் தாரதம்யமாக வுபதேஷ்ட்ருஸ்தா னத்தி லேற்பாடுசெய்திருப்பதாலும் பரமாசாரியத்வம் ஸ்ரீசி வபெருமானொருவருக்கே சொந்தமென் றறியவேண்டியது. இந்தச்சிவோத்கர்ஷத்தால் விஷ்ணுவாதிதூஷணமாவது, வி ஷ்ணுவினிட முபேக்ஷையாவது ஒருவருக்கும் ஸ்வப்நத்திலு முண்டாகவிடமில்லை. விஷ்ணுவானவர் சிவபக்தர்களிலுயர்ந் தவராகையாலும், சிவபக்தர்களுடைய ஆராதனம் சிவாரா தனஞ்செய்பவர்களுக்குச் சாஸ்திரங்களில் பஹுளமாய் வி திக்கப்பட்டிருக்கின்றமையாலும், விஷ்ணுவாராதனமற்றசை வனுக்குச் சங்கரப்பிரஸாதமுண்டாகாமையாலும் புத்திசா லியான சாம்பவன் ஜநார்த்தனனை அவசியம்பூஜிப்பன். விஷ் ணுவுக்குச் சிவஸாம்யத்தை எவன் சித்தத்திலெண்ணுவா னோ, அவன் விஷ்ணுவினுடையகோபத்துக்கு அருகனாவான். இதில் சந்தேகமில்லை. சிவனுடைய வைபவத்தைச் சர்வத ர்மங்களையுமறிந்தவரும், என்னுடைய பிதாவுமான வியாசப கவான் எனக்கு எப்படி யுபதேசித்தாரோ, அப்படியே சொ ல்லுகிறேன்கேளும். விஷ்ணுவினுடைய அம்சரான என்னு டைய பிதாவானவர் ஒருக்கால் சிவசந்நிதியிற் கைகளைத்தூக் கிக்கொண்டு மோகத்தினாற் கோவிந்தனைக்காட்டிலும் அதிக மானதெய்வமில்லை யென்று சொன்னவளவில் நந்திபகவானு டைய ஹுங்காரத்தினால் தூக்கின கைகளும், வாக்கும் ஸ்த ம்பித்துப்போயின. அப்போது தன்னைச் சிவாபராதியாகத் தெளிந்து சங்கரனைத்துதித்தார். எவருடைய பாதசிரசுகளை அஹங்காரிகளான விஷ்ணுவும், பிரமனும் தேடியறியாமற் போனார்களோ, அந்தப்பரமேசுவரருக்கு அதிகராவது, சமா னராவது கிடையவேகிடையார்கள் என்று நிச்சயித்து ஸ் தோத்திரம்பண்ணினதாயுள்ள இதிகாசத்தை நீ யுணர்ந்திலை போலுமென்று தெளிவித்துச் சந்தோஷித்தனர்" என்று பிர திபாதிக்கப்படும் சுகபரீக்ஷித்து ஸம்வாதத்திற்கு விரோதமா க வியாசராபிப்பிராயமறியாமல் சைவர் துக்கிக்கின்றனர் என் று சிவனடியார் நிந்தையும், சிவனும் - விஷ்ணுமுதலினோரும்

சமானராவமொன்று சிவலிங்கதையும், வியாசர் சிவனையும் விஷ்ணுவையும் சமமாகக்கூறினுரொன்று வியாசலிங்கதையும நமது மாயாவாதியார் தேடியது அவரது பாவக்களஞ்சியமென்றே அறியவேண்டியது. இதுநிற்க.

யாம் சிவனைத் தேகியும, விஷ்ணுவாதிகளைத் தேகமுமாகக்கூறியவுபநிஷத்தை முனட பிரஸதாபித்தோமாகையால, அவ்விஷ்ணுவாதிகளைத் தநங்களாகவுடைய தேகி, அலலது சைதன்யம உருவமற்றதாகவேண்டுமென்று இனி நமதன்பர்வாதிக்கலாம. யாம அதனை உருவமென்றும, அருவமென்றும், உருவருவமென்றுங் கூறியபகுதியி லொன்றெனச்சாதித்ததில்லை. இவ்வெல்லாவடிவு மதற்கிலலாமற்போகவுமில லை. அது அருவமேயென்று நமதன்பாசாதிப்பாராயின்,

"உலகினிற் பதார்த்தமெல்லா முருவமோ டருவமாகி
நிலவிடு மொன்றொன்றுகா நின்றவந் நிலையேபோல
வலகிலா வறிவன்றானு மருவமே யென்னிலாய்ந்து
குலவிய பதார்த்தத் தொன்றாய்க் கூடுமென் குறித்திடாயே." -

என்னுஞ்

சஸ்திரத்தாலடிபட்டு கொகதுவீழ்ந்திடுமென்க.

"அருவமோ ரூபாரூப மானதோ வன்றி நின்ற
வுருவமோ வுமக்குங்கர்த்தா வடிவெனக் குணர்த்திங்கென்னி
லருவமும் ரூபாரூப மானது மன்றி நின்ற
வுருவமு மூன்றுஞ் சொன்ன வொருவனுக் குள்ளதாமே." —

எனவும்,

"உருமேனி தரித்துக்கொண்ட தென்றலு முருவிறந்த
வருமேனி யதுவுங்கண்டோ மருவுரு வானபோது
திருமேனி யுபயம்பெற்றோஞ் செப்பிய மூன்றுநந்தங்
கருமேனி கழிக்கவந்த கருணையின் வினைவுதானே."

எனவும்,

"சிவனுரு வருவுமல்லன் சித்தினே டசித்துமல்லன்
பவமுதற் றொழில்களொன்றும் பண்ணிடு வானுமல்லன்

றவமுதல் யோகபோகந் தரிப்பவ னல்லன்றானே
யிவைபெற வியைந்துமொன்று மியைந்திடா வியல்பினானே."

எனவும்

போந்த சைவத்திருவாளரது திருவாக்குகள் பரமாத்மாவினது தன்மையை இனிது பிரகாசிப்பித்தவாறறிக. "இன்னதன்மையனென்றறியாச்சிவன்" எனவும் "ஆட்பாலவர்க்கருளுமாதிமாண்பும் - கேட்பானபுகி லளவில்லை கிளக்கவேண்டா" எனவும்போந்த அருணலமும், "யதோவாசோ நிவர்த்தந்தே" எனனுஞ் சுருதிநலமும் தமமுள் விரவியவாய்மையுணர்ந்தவாக்கே பரனது சொரூபலடசணம விளங்குமென்க. இனி வேதத்தில, "பஞ்சவக்த்ரமுமாஸஹாயம்" எனவும், "விபும்சிதாகந்தரூபமத்புதம்" எனவும, "அசிந்த்யமவ்யக்தமநந்தரூபம்" எனவும போந்தபகுதிகள் உருவம, அருவம, உருவருவம என்னும பரனது அருட்கோலங்களையும், அவரது அவதாரங்களையு மினிதுதெரிவித்தன. இவற்றுள், அவ்யக்தம எனபது அருவுருவமும, அநந்தரூபம என்பது அவதாரங்களுமாம. உருவம, அருவம், உருவருவம என்னும மூன்றினையுங் கொண்டவாகள் சைவசமயிகள். அருவத்தைமதித்தவர்கள் மாயாவாதிமுதலினோா. உருவத்தைமதித்தவர்கள் பாஞ்சராத்திரிமுதலினோர். சைவசமயிகளுக்கு மூனறும்முக்யம. ஏனைய சமயிகளுக்கொவ்வொன்று முக்கியம். மேலவாக்கியங்களில் "கருணையின்வினைவுகாணே" என்று கூறியிருப்பதையே

"உருவருள் குணங்களோடு முணர்வரு ளுருவிற் றோன்று
கருமமு மருள ரன்றன் கரசர ணாதிசாங்கந்
தருமரு ளுபாங்கமெல்லாந் தானரு ளனக்கொன் றின்றி
அருளுரு வுயிருக்கென்றே யாக்கின னசிந்த னன்றே."

என்னுந்திருவாக்கில் விசதப்படுத்தியிருக்கின்றது. உருவம், அருவம், உருவருவம் என்பவைகளைப்போலவே துவைதம், அத்வைதம், விசிட்டாத்வைதம் என்பனவுஞ் சுமயிகளாவா

ளப்பட்டுவருகின்றன. எங்ஙனமெனின், துவைதம் என்னுஞ் சொல்லைமாத்திரந் தழுவி, நான் துவைதியென்று ஒருசமயி பிரவர்த்திக்கின்றான். இவன்றான் மாத்வன் என்றுசொல்லப் படுபவன். மற்றொருவன் அத்வைதம் என்னுஞ்சொல்லைமாத்திரந்தழுவி, நான் அத்வைதியென்று வெளியாகிறான். இவனே மாயாவாதி என்று மதிக்கப்படுபவன். இன்னுமொருவன் விசிட்டாத்வைதம் என்னுஞ் சொல்லைமாத்திரந்தழுவி, நான் விசிட்டாத்வைதி என்று வெளிப்படுகிறான். இவனையே பாஞ்சராத்திரியென்று யாவரும் படிக்கின்றார்கள். இவருள் மாத்வனுக்கு விசிட்டாத்வைதம், அத்வைதம் என்னுஞ் சொற்கள் வேம்பாயிருக்கும். மாயாவாதிக்குத் துவைதம், விசிட்டாத்வைதம் என்னுஞ்சொற்கள் கசப்பாயிருக்கும். பாஞ்சராத்திரிக்கு அத்வைதம், துவைதம் என்னுஞ்சொற்கள் அலட்சியமாயிருக்கும். இம்மூன்றுசொற்களையுந் தழுவி நானே துவைதி, நானே அத்வைதி, நானேவிசிட்டாத்வைதி என்று வெளிவருமபக்குவியே சைவசித்தாந்தியென்று ஸ்மரிக்கப்படுகிறான். இவனே அம்மூன்றுசொற்களையுங் கசப்பாகக்கருதாமல கனிந்து அநுபவிக்கின்றவனுகையால், இவனொருவனையே அந்தப்பதங்களனுகிவாழ்ந்து ஏனையோனைத் தூரமாய் விலகிடத்துரத்துமென்க. ஒரு பெரியதோட்டத்தில் வாழை - மா-பலா என்னும் மூவிதவிருட்சங்களும், வேறுபல விருட்சங்களும், செடி-கொடி-புல்-பூண்டுவகைகளு மிருப்பனவாகக் கொள்வோம். இத்தோட்டத்தில், வாழைமரகுத்தகையெடுத்தவன் வாழைகளையேபார்ப்பன். ஏனை மா-பலா முதலியவைகளை யேறெடுத்தும் பாரான். அவைகளிலவனுக்கு விசுவாசமுமிராது. இப்படியே மாமரகுத்தகை யெடுத்தவன் மாமரங்களையே பார்ப்பன். ஏனை வாழை - பலா முதலியவைகளை யேறெடுத்தும்பாரான். அவைகளிலவனுக்கு விசுவாசமு மிராது. இவர்களைப்போலவே பலாமரகுத்தகை யெடுத்தவன் அப் பலாமரங்களையே பார்ப்பன். ஏனை வாழை முதலியவைகளை யேறெடுத்தும் பாரான்.

அவைகளிலவனுக்கு விசுவாசமுமிராது. ஏனைவிருட்சங்களையும், செடி கொடிமுதலியவைகளையுங் குத்தகைகொண்டவர்கள் அவரவர்களுடைய சொத்துக்களிலேயேயன்றி அன்னியர்களுடைய சொத்துக்களி லபேக்ஷயபிமானங்கள்வையார்கள். அத்தோட்டத்தைத் தன்னதாகவுடைய சொந்தக்காரன் அதிலுள்ள வாழை - மா - பலா - வேறுபலவிருட்சங்கள் - செடி - கொடி - புல் - பூண்டுமுதலிய சர்வபதார்த்தங்களிலும் ஆசையபிமானங்ணீங்காமல், அவைகளைப் பாதுகாக்குஞ் சுதந்திரம்பாராட்டிப் பிரவர்த்திக்கக் கடமைப்பட்டிருக்கின்ருன். இனி, சைவதத்வங்கள்முப்பத்தாறனுள் எல்லாச்சமயமுடிவுகளுமடங்கலானும் எமதுபட்சம்நிலைபெறுகும். இச்சைவசித்தாந்திக ளங்கீகரிக்கும உருவம், அருவம், உருவருவமென்பவற்று ளொவ்வொன்றினை யொவ்வொரு சமயிதழுவலாலும், இப்படியே யிவராதரிக்குந் துவைதாத்வைத விசிட்டாத்வைதங்களையுங் கண்டங்கண்டமாயெடுத்து ஒவ்வொருசமயி ஆளுதலாலும் சைவசித்தாந்திமாத்திரமே அகண்டஞானியும், ஏனையசித்தாந்திகள் கண்டஞானிகளுமாயிடுதல் திண்ணம். இக்கண்டஞானிகளும் போலிஞானிகளேயன்றி வேறில்லை. அவர்கூறும் பொருள்களும், சைவசித்தாந்திகூறுவதுந் தம்முண்முரணுதலாலெனக. இனியிக்கண்டஞானிகளுளொருவரும், போலிஞானப்பெரியாருமாகிய நமது மாயாவாதியார் பரமான்மா அரூபமாகவே யிருக்குமென்று வாதிப்பதற்கு அவகாசமில்லை. அன்றியவர் அபபரமாத்மாவுக்கும், பாசபத்தமுடைய சீவனுக்கும் அபேதமொப்பினைமையாலும், அப்பரமாத்மாவுக்கு விஷ்ணுவாதிகளைக் காரியமாயாவிசிட்டரூபங்களென வங்கீகரித்தமையாலும் அவர் பிரஸ்தாபித்த பரமாத்மா பரமாத்மாவாகாமல் சாதுக்கள் தியஜிக்கத்தக்க அசத்தேயாயிற்று.

சுருதியில் "ஏகஏவருத்ரோநத்விதீயாயதஸ்தே, ஏகமேவாத்விதீயம்ப்ரஹ்மா, ஈசாநஸ்ஸர்வகோருத்ரஃ, ஸர்வைவேர்ஜேவ:, யஏ

கோருத்ர வுச்யதே, தமேகம் புருஷம் ருத்ரம், த்யாவாபூமீஜநய ந்தேவஏக:, ய:காரணாநி நிகிலாநிகலாஸ்யயுக்தாந்யதிதிஷ்டத்யேக:, சிவஏவகேவல:" என்னும் வசனங்கள் உருத்திரர், பிரஹ்மம், ஈசானர், சிவன், புருஷர், தேவர், காரணர், கேவலர் என்று பரமாத்மாவை வெளிப்படுத்தி, அது ஏகமாயுள்ளது என்று சித்தாந்தப்படுத்தின. புருஷர் என்றுபிரஸ்தாபித்த சுருதியில ருத்ரர் எனவும், கேவலர் என்று பிரஸ்தாபித்த சுருதியில் சிவன் எனவுமச்சிவனாரது ரூடிநாமங்கள் மீணடும் படிக்கப் பட்டிருக்கின்றன. இம்மட்டோ, "சிவஏகோத்யேய:, ஸஏகோ ருத்ரோத்யேய:, காரணந்துத்யேச்சம்பு:, த்யாயீதேசாநம், சிவ வஸூதாத்யேய:, ப்ரஹ்மவிதாப்நோதிபரம், ஈசம்ஜ்ஞாத்வாஅம்ருதா பவந்தி, வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம்" என்னுஞ்சுருதிகள் தியேயவஸ்துவினது பெயர்களைப்பிரஸ்தாபித்துச் சிவபரமா ன்மாவை இனிதுதெரிவித்தன. இப்பரமான்மா உருத்திரனா கிய புருடனேயென்பது போதர "தமேகம்புருஷம் ருத்ரம், பு ருஷோவைருத்ர:, புருஷம் க்ருஷ்ணபிங்களம், புராதநோஹம் புரு ஷோஹமீச:, சிவ:புருஷஈசாநோ, தத்புருஷாய வித்மஹே" என் னுஞ் சுருதிகள் கோஷித்தன. இவைபோன்ற சுருதிகளை விஷ்ணு - விதர்தாமுதலினோர்பரமாக நமதன்பர்தேடி யோ ப்படைக்கமுடியுமோ? இந்தச்சுருதிகள் துரீயமூர்த்தியையே பிரதிபாதிப்பனவாயினுங் குணமூர்த்திக்கும் சந்தர்ப்பத்திற் கேற்ப வுபயோகமாம். அன்றியும், "ஸர்வேதேவா: பசுதாமவா பு:" என்று பிரஹ்மா-விஷ்ணு முதலிய சர்வதேவர்களையும் பசுக்களென்று பிரஸ்தாபித்த சுருதிகளுக்குப் பரிவலாநமு ண்டாகும்படி அத்தேவர்களைப் பார்த்து ஸ்ரீசிவபெருமான் "அஹமேவபசூநாமதிபதி:" என்றுகூறியசுருதியும் பிரத்யக்ஷம். இச்சிவபரஞ்சுடரை "ஸ்வயம்தஸ்மாத்பசுபதிஸ்ஸம்பபூவ, பரமா த்மா தேவதா பசுபதி:, தஸ்மாத்ருத்ர: பசூநாமதிபதி:, ஸத்யோதி: பசுபதி:, பசுபதிஸ்ஸாக்ஷீ, ஸ்வயம்பசுபதி:புமாந்" என்னுஞ் சுரு திகளுமிந்த இனிதுபிரகாசப்படுத்தின. இன்னும். "பரமாத்மா மஹேச்வர:" என்று பிரஸ்தாபித்து, "பரமாத்மாநமாச்ரயேத்"

னறு அந்தப்பரமாத்மாவாகிய மகேசுவரனையே ஆச்சிரயிக்க வண்டியது எனவுமவ்வேதம் நன்குபரிஷ்கரித்துவிட்டது. மூ டவில் "அத்வைதம் பரமாநந்தம், சிவம்யாதிதுகேவலம், அதிஷ்டா ம்ஸமஸ்தஸ்ய, ஜகதஸ்ஸத்யசித்கநம்" என்று அநுவிதந்திட்ட புண்மையாலும் சித்கநஸ்வரூபராகிய சிவனாரதுபரமகாரணத் மை ஞானிகளதுசபையில் கனம்பெறத்தட்டில்லை. இத்யாதி பிரபலபிரமாணங்கள் சிவனாரது பரதத்வநிரூபணத்திற்காத வாயுள்ள வருமையறியாத நமதன்பர் விஷ்ணுவோடு சிவ னையும மாயாகாரியவிசிட்டபிரமம என்றினப்படுத்தித் தம றியாமையைப பூர்த்திசெய்துகொண்டது அவரது பரிபாக த்தாழ்வென்றுது வேறுயாதென்பேம்?

இனித்திரிமூர்த்தியுத்தீரநமாகிய பரம்பொருள் "கை லாஸசிகராவாஸ மோங்காரஸ்வரூபிணம் மஹாதேவ முமார்த்தக்ரு சேகரஞ்சம் ஸோமஸூர்யாக்னிநயந மநந்தேந்துரவிப்ரபம் வயாக்ர ர்மாம்பரதரம் ம்ருகஹஸ்தம் பஸ்மோத்தூளிதவிக்ரஹம் திர்யக்த்ரி புண்ட்ரரேகாவிராஜமாநபாலப்ரதேசம் ஸ்மிதஸம்பூர்ணபஞ்சவித பஞ்சாநநம், வீராஸநாரூட மப்ரமேய மநாத்யந்தம் நிஷ்களம் நிர்க்கு ணம சாந்தம் நிரஞ்சந மநாமயஞ்சம் ஹம்ஸம்பட்குர்வாணஞ்சம் சிவநாம யநிசமுச்சரந்தஞ்சம் ஹிரண்யபாஹுஞ்சம் ஹிரண்யரூபஞ்சம் ஹிரண் யவாணஞ்சம் ஹிரண்யநிதி மத்வைதம் சதுர்த்தம் ப்ரஹ்மவிஷ்ணு ருத் ராதீத மேகமாசாஸ்யம் பகவந்தஞ்சம் சிவம்ப்ரணம்ய" என்னுஞ்சுரு தியால நன்குபிரகாசம பணணபபட்டிருக்கின்றது. இதில், கைலாஸசிகராவாஸம்-உமார்த்தக்ருதசேகரம் - ஸோமஸூர் யாக்னிநயநம - வ்யாக்ரசர்மாமபரதரம் - ம்ருகஹஸ்தம-பஸ் மோத்தூளிதவிக்ரஹம-பஞ்சாநநம் என்னும் பானதுஅடை யாளங்களைப் பிரஸ்தாபித்து, அப்ரமேயம் - நிஷ்களம் - நிர் க்குணம் - நிரஞ்சநம் - அநாமயம் என்றுபுகழ்ந்து, சிவம் - மஹாதேவம் என்னுந திவ்யநாமங்களாற்றுதித்து, அத்வைத ம - சதுர்த்தம், பிரஹ்மவிஷ்ணுருத்ராதீதம் என்று சாதிக் குஞ் சுருதியை யொருபோதுங் கண்டுங் கேட்டுமிராத பூர் வபட்சியினது கர்மம் அவர்க்கு வழிவிடாமையால், அதுஅவ

ரைத் தெருவிலேயே நியங்கவிட்டுச் சிக்குப்படுத்திவிட்டது பிரஹ்மவிஷ்ணுருத்ராதீதம், சதுர்த்தம், சிவம்-மஹாதேவம் என்று படிக்கப்பட்டவோர்பொருளையே சந்திரசேகரம் வ்யாக்ரசர்மாம்பரதரம் என்னும் பெயர்களாலும், நிஷ்களம் - நிர்க்குணம் என்னும்பெயர்களாலும் வேதம் அழைக்கையால், இவற்றுள் சந்திரசேகரமே முக்யம, நிஷ்களம அமுக்யமெனவாவது, அல்லது நிஷ்களமேமுக்யம், சந்திரசேகரம் அமுக்யமெனவாவது வாதிடவொருவருக்கும் அதிகாரங்கிடையாது. நிஷ்களம - நிர்குணம என்பனவாதிநாமங்களாற் பிரதிபாதிக்கப்படுவது நாமரூப ரகிதமானவஸ்துவே யன்றி உமா ஸஹாயத்வாதிலிங்கங்களோடு கூடியவஸ்துவாகாதென்றுமதித்து அவ்வருட்கோலங்களிரண்டையு மிரண்டுபின்னபொருள்களாகத் தீர்மானித்துக்கொண்ட மதிக்குறைவால் நமதன்பர் பிரசங்கித்த காரியமாயாவிரெட்டப் பிரஹ்மலட்சணமுதலிய அஸங்கதங்களும அடியோடேசாய்ந்தனவெனக.

இவ்வளவிலமையாது சுருதியில் "கோ ஜீவ: க:பசு: க ஈச:" என்று பிறந்தகேள்விகளுக்கு "அஹங்காராவிஷ்டஸ்ஸமஸாரி ஜீவஸ்ஸஏவபசு:, ஸர்வஜ்ஞ பஞ்சக்ருதயஸம்பந்நஸ் ஸர்வேசவர ஈச. பசுபதி:, கேபசவஇதிபுநஸ்ஸதமுவாச, ஜீவா:பசவ உக்தா:,தத்பதித்வாத் பசுபதிஸ்ஸபுநஸ்தம் ஹோவாச, கதம்ஜீவா: பசவஇதிகதம் தத்பதிரிதிஸதமுவாச யதாத்ருணாசிநோவிவேகஹீநா: பரபரேஷ்யா: க்ருஷ்யாதி கர்மஸுநியுக்தாஸ் ஸகல து:கஸஹாஸ் ஸ்வஸ்வாமி பத்யமாநா கவாதயா: பசவ: யதாததஸ்வாமிநஇவ ஸர்வஜ்ஞ ஈச:பசுபதி:" என்னும் விடைகளுண்டாயின. சம்ஸாரியாகிய ஜீவனே பசுஎனவும், ஜீவன்றான் பசுஎன்றுசொல்லப்படும் எனவும்,கோவானது அதனது எஜமானனது அதீனப்பட்டு அஸ்வதந்திரமுதலியதர்மங்களையடைந்திருப்பதுபோல் ஜீவனும் பரனதுஅதீனப்பட்டு அஸ்வதந்திரமுதலிய தர்மங்களையடைந்திருத்தலால் இரண்டும் பசு என்றுவெளிப்பட்டனவெனவும், ஜீவர்களாகிய பசுக்களுக்குப் பதியாயுள்ளவர் பசுபதியேயெனவும், அவர் ஸர்வஜ்ஞரும், பஞ்சக்ருத்யஸம்பந்நரும்,

வேசுவரரும், ஈசரும், பசுபதியுமாவார் எனவும் வெளிப் பிம் அர்த்தபாஹுல்யங்களையறியும் ஸாதுக்கள் நமதன்பர் ரியமாயாவிசிட்டப்பிரமங்களெனப் பிரஸ்தாபித்த மூவரு ளொருவராகிய உருத்திரனையே சைவசித்தாந்திகள் பரதத்வ பொருளாகக்கொண்டு வழிபடுகின்றார்களென்று எங்ஙனே றத்துணிவார்கள்? இந்தச்சுருதியிறபோந்த சர்வஜ்ஞ-ஈச-ப பதிநாமங்களைக்கடந்த வேறொருசுத்தப்பிரமமுண்டென்று ரதிக்கவும் எங்ஙனந்தலைப்படுவார்கள்? சர்வஜ்ஞத்வாதிகளை பாதியென்று கத்திக்காலங்கழிக்கும் அவிவேகபூரணகுருக்க க்கேயன்றிச் சிவஞானிகளுக்கு யாண்டு முபாதிஞானமின் றன்க. இந்தச்சுருதியில பசுபதிபாசங்களாகிய திரிபதார்த் நிரூபணஞ்செய்து சைவத்தை ஸ்தாபித்திருப்பதும் நமத பரது ஏகான்மவாதத்திற்குத் தலையிடியாயிற்று. இத்யாதி ருதிகளுக்கு அபார்த்தஞ்செய்துகொண்டு மாயாவாதமருள் டித்துழலும பூர்வபட்சியாரோ துக்கசாகரத்திற் றடுமாறிக் ளாகாணுதுதியங்குந் தீனராயினமையால, அவர் சைவர்மே லற்றிய தூஷணம - ஸ்டாருஹமென்க.

இன்னும வியாசரபிப்பிராயத்தைக் கொஞ்சம் பரியா லாசிப்பாம். பாரதத்தில, "உக்தவாநிதமவ்யக்ரம் - ஜ்ஞாநம் பாசுபதம்சிவ:" என்று பெறப்பட்ட வசனம இந்தப் பாசுபத ஞானத்தைச் சிவன மயக்கமின்றி அருளிச்செய்தார என்று தரிவிக்கின்றது. அன்றியும், அதில் "ஜ்ஞாநம்பாசுபதம்ததா" ன்று பெறப்பட்டிருக்கின்றது. இவை வியாசரது வாக்கியங் ள். இந்தவாக்கியங்களால் வியாசரது அபிப்பிராயம் ஈதெ யாவரு மெளிதிலுணரலாம். பாசுபதஞானமாகிய சைவ த்தாந்தமே வியாசரது ஹ்ருதயமாதலை யுணர்ந்தவர்கள் நம ன்பரும், அவரது சமயகுருவாகிய சங்கரருமே வியாசரபி பிராயமறியாமல துக்கங்கொண்டாடினவர்களென்று அறி மற்போகார். தேஹேந்திரியாதிகளைக் காரணவஸ்துவென் வாதிப்பது பாசஞானம். ஜீவனைக் காரணவஸ்துவென்று திப்பது பசுஞானம். இவைகளைத் தன்ஞானவழிச் செலு

த்தும் பசுபதியைக் காரணவஸ்துவென்று வாதிப்பது பா சுபதஞானம், அல்லது பதிஞானமாம். பாசுபதாஸ்திரத்துக்கு மேலொரு சஸ்திரமில்லாததுபோல் பாசுபதஞானத்துக்கு மேலொரு ஞானமில்லையென்பது வியாசரது துணிவென்று நிக. இவ்வுண்மைபோதரவே பாசுபதஞானத்தைச் செம்மை மயக்கமின்றி அருளிச்செய்தார் என்று அமமுனிவேந்தர் விளக்கினுர். இதற்கு வேருனஞானங்கள் மயக்கமுடைய வென்பது சொல்லாமே யமையும். நமது மாயாவாத நண்பர் மயக்கஞானத்தின் மடிந்தவராகையால, இவரோ வியாசரபி பிராயமறியாமல் துக்கவாழ்வெய்தியவரெனல சிறந்தது. பசுபதஞானமும், வேதாந்தஞானமும் பேதமெய்தாத நலத்தைச் சைவபாஷ்யகாரராகிய ஸ்ரீ நீலகண்டசிவாசாரியசுவாமிகள் தமது ஸ்ரீபாஷ்யத்தில் "வயந்து வேதசிவாகமயோர்பே தம் நபச்யாமஃ வேதோபிசிவாகமஃ" என்று பிரகாசம்பண்ணி ருளினர். இதனுல், ஸ்ரீபாஷ்யத்திற்கு மூலமாகிய பிரஹ்ம ஸூத்திரம் வேதசிவாகமங்களைஆதாரமாகக்கொண்ட சைசித்தாந்தத்தையே பிரதிபாதிப்பதாக யாவருமறிவார்கள். ஏனைய சங்கரபாஷ்யமுதலியன வேதசிவாகமங்களை விரோதித்த பாஹ்யமார்க்காவலம்பன முடையனவேயாம. வேதாந்த சூத்திரத்திற்குக் கர்த்தாவாயெழுந்தருளிய முனிவரது அபிப்பிராயத்தை ஔவையாரும் பிரசித்தப்படுத்தியிருக்கிறனர்.

"தேவர் குறளுந் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியுங்—கோவைத்
திருவா சகமுந் திருமூலர் சொல்லு
மொருவா சகமென் றுணர்."

என்றருளிச்செய்த அம்மவுலகமாதாவி னுறுதிமொழியால், திருக்குறளும், உபநிஷத்துக்களும், தேவாரமும், வியாசசூத்திரமும், திருக்கோவை-திருவாசகங்களும், திருமந்திரமும் அபேதமாகிய சைவசித்தாந்தத்தை யுணர்த்துவனவாம் என்று வெளிப்பட்டவுண்மைக்கு நமதன்பர் யா

ாய்யலாம்? இவ்வெல்லா நூல்களுஞ் சைவசித்தாந்தத்தை யே பிரதிபாதிப்பனவென்று கூறிய ஔவையாரது அபிமதத்துக்கு மாறாக முனிமொழியாகிய வியாசரபிப்பிராயத்தை வேறுபிரித்தோத நமதன்பரான் முடியுமோ? பராசர், வியாசர், சுகர், ஔவையார், நீலகண்டசிவாசாரியார் முதலினோர் நிச்சயித்தமுடிவுகளாற் றுணிந்துகூறத்தக்க வியாசரபிப்பிராயத்தை நமதன்பர் அவாந்தரகற்பனையான் மாற்றிக் கூறியது சாலவித்தையேயாமென்க. விரிக்கிற்பெருகும்.

இம்மாயாவாதியார் செய்த சாலவித்தையைப்போல் வேறுசிலருங் கைதேர்ந்தசாலங்காட்டினார்கள். அவர்கள் பாஞ்சராத்திரியும், பிரமஸமாஜியுமேயாம். இவருள், பாஞ்சராத்திரி பதிவிஷ்ணுவொருவருளனெனவும், அவருக்கேவல் செய்யும் பசுச்சிவனொருவருளனெனவும், அப்படியே பதிச்சிவனொருவருளனெனவும், அவருக்கேவல்செய்யும் பசுவிஷ்ணுவொருவருளனெனவும் பிரசங்கித்து, சிவனை விஷ்ணுவணங்கினனென்று கூறுமிடத்துப் பதிச்சிவனைப் பசுவிஷ்ணுவணங்கினனென்பது வியாசரபிப்பிராயமெனவும், விஷ்ணுவைச் சிவன்வணங்கினனென்னுமிடத்துப் பதிவிஷ்ணுவைப் பசுச்சிவன் வணங்கினனென்பது வியாசரபிப்பிராயமெனவும் பிரகாசப்படுத்தினர். இவ்வபசித்தாந்தத்தின் மறுப்பாகிய "விபரீதஞானவிலக்கு" என்பதை யாம்வெளியிட்ட "பிரஹ்மாநுபூதி" யிற்காண்க. இனிப்பிரமஸமாஜியோவெனின், சிவன்-விஷ்ணு-பிரமன் என்னும்பெயர்கள் பிரமத்துக்குரியன எனவும், இந்த பெயர்களேயன்றி இப்பெயர்களைத்தாங்கியுள்ள உருவமுடையமூர்த்திகள் வேறிலையார்களெனவும், உருத்திரன் விஷ்ணுவைவணங்கினன், விஷ்ணு உருத்திரனைவணங்கினன் என்றுகூறுமவைகள் வெறுங்கற்பனையெனவும், இதுவே வியாசரபிப்பிராயமெனவும் பிரசங்கித்துத் தமதுவிபரீதத்தைப் பிரகாசப்படுத்தினர். இவ்வவலட்சணசித்தாந்தத்தை மறுத்துப் "பிரஹ்மதத்திசிகி" என்னுநூலொன்று யாம் வெளியிட்டிருக்கின்றோம். இன்னோர் கற்பித்தகதிகளைப்போலவே "அவிரோதவு

ந்தியார்" எழுதினவரு மொருகதிதேடித் தமதவிரோதத்தை, ஸமர்த்தித்து வியாசரபிப்பிராயத்தை வெளியிட்டனர். ... தனை "ஆசாரியபிரபாவம்" என்னுநூலில் விசாரித்திருக்கின்றோம். இவர்களது ஆபாசங்களைமறுத்ததுபோல் பூர்வபட்சியாரது பொய்யுரைகளையும் ஈண்டு மறுத்தோம். இவர்களது பிரசங்கங்கள்யாவும் சுருதியுக்தியநுபவங்களுக்கு விரோதமாயிருக்கும் வாய்மைமை எமது நியாயதாப்பணங்கிடைக்கப்பெற்றவர்கள் இனிது தெளிவார்களாகையா லிவாகளொருவராக வெளிப்பட்டு, வியாசரது அபிப்பிராயத்தைப் புதுசாய்க்கண்டுபிடித்துக் கூறவந்த நமதன்பரது பிரயத்நம் ஊஷரபூமியிற்செய்த கிருஷிபோலாயிற்றென்க. விரிக்கிற்பெருகும். இதனை யிவ்வளவினிறுத்தி மற்றப்பகுதிகளையும் விசாரிப்பாம்.

## பூர்வபட்சம்.

"ஐந்து தெய்வங்களில் எதனை யுபாசித்தாலும் பிரமலோகப்பிராப்தியாம். அங்கே போகங்களைப்புசித்திருந்து இறுதியில் விதேகமோட்சமும் அடைவர். விஷ்ணுவாதிகளின் உபாசனைகளால் வைகுண்டலோகாதிகளின் பிராப்தி புராணங்களிற் கூறியிருக்கிறதன்றிப் பிரமலோகத்தின் பிராப்திகூறவில்லையேயெனின், உத்தம உபாசகராய் விதேகமுத்திக்கு அதிகாரிகளாயினோர் சகலரும் தேவயானமார்க்கத்தால் பிரமலோகத்திற்கே போகாநிற்பர். பிரமலோகமொன்றே வைஷ்ணவ உபாசகர்க்கு வைகுண்டமாகத் தோன்றாநிற்கும், அவ்வுலகவாசிகளனைவரும் அவர்க்குச் சதுர்ப்புஜபார்ஷதரூபராய்த் தோன்றாநிற்பர்; தாமும் சதுர்ப்புஜமூர்த்தியாகாநிற்பர். அப்படியே சைவ உபாசகர்க்கும் பிரமலோகமே சிவலோகமாகத் தோன்றாநிற்கும்; அவ்வுலகவாசிகளனைவரும் திரிநேத்திரமூர்த்திகளாகத் தம்மோடு தோன்றாநிற்பர். இவ்வாற்றால் சர்வ உபாசகர்க்கும் பிரமலோகமொன்றே தமது உபாசியத்தினுடைய லோகமாகத் தோன்றாநிற்கும். என்னை? தேவயானமார்க்கமன்றி அந்நியமார்க்கத்தால் யாவர் செல்லாநிற்பாரோ அவர்க்கு மீளுதலுண்டாகும்; இது நியமம். தேவயானமார்க்கம் ஓர் பிரமலோகத்திற்கே உள்ளது. ஆகலின், விதேகமோட்சத்திற்கு யோக்யரான உபாசகரனைவரும் பிரமலோகத்திற்கே போகாநிற்பர்."

## சித்தாந்தம்.

ஐந்துதேவதைகளினுடைய வுபாசனையையும், அதன் பலத்தையும் பூர்வபட்சியினது முகம்புலர்ந்திட மேலிடத்தில் யாமநுவாதமுகத்தா லெடுத்தியம்பியதேபோதும். இன்னுமவ்விஷய த்தில் நாமதனைப்பரா யலட்ட மனமில்லை. இவர் வைஷ்ணவர்க ளுக்கும், சைவர்களுக்கும் விஷ்ணுலோக சிவலோகங்களைப் பேறாகவொப்பாமல் பிரமலோகமொன்றே விஷ்ணுலோகமா கவும், சிவலோகமாகவும் நின்றுமென்று பிரசங்கித்தது எந் த ஆதாரமுகொண்டு? இவர்படித்த கதைக்குப் பிரமாணங்கா ட்டாதபோது இவரதுநிந்தைவார்த்தைகளை யாவரங்கீகரிப்ப வா? "விஷ்ணுவாதிகளின உபாசனைகளால் வைகுண்டலோகாதிக ளினபிராப்தி புராணங்களிற்கூறியிருக்கிறதன்றிப் பிரமலோகத்தின் பிராப்தி கூறவில்லையேயெனின்" என்று இவரே சங்கித்தாரன் றோ? இதற்கு என்னசமாதானங்கூறினார்? புராணங்களை ப்பிரஸ்தாபித்துப் பூர்வபட்சங்கூறினவா, அதற்குச் சித்தா ந்தமும் புராணவாயிலாகவே எடுத்துக்காட்டவேண்டும். அல்லது, அப்புராணத்தினும் மேலிட்ட வேதாகமங்களின் வாயிலாகவாவது எடுத்துக்காட்டவேண்டும். புராணங்க ளைப் பூர்வபட்சமாக்க இவரும, இவரன்ன பூர்வமாயாவாதி யரும மழுதுஞ் சொற்பவரிகளா ஆற்றல்பெறுவனவாகும்? இவரெடுத்துக்கொண்ட பூர்வபட்சம் இவரது பிரசங்கத்தால அழியாமையால், இவரதுபிரசங்கமே பூர்வபட்சமும், இவர் மேதடிய புராணங்களே சித்தாந்தமுமாயின. இதனால், இவரது பட்சம் நிலைகுலைந்ததென்க.

பிரமலோகவாசிகள் விஷ்ணுசாரூப்பியமுடையவர்போ லவும், சிவசாரூப்பியமுடையவர்போலவும் அப்பிரமலோகத் தையடைந்த விஷ்ணுபக்தர்களுக்கும், சிவபக்தர்களுக்குந் தோன்றுவாரெனின், அவ்வாறு அவர்காணப்படுதல் தோற்ற மேயன்றி, உண்மையன்றெனெ வெளிப்படுகின்றது. இது கா னற்சலம்போல்வதாகவே யொதுக்கப்படும். இதனை மகிமை

யுடையதாகக் கூறுவது பேதைகளுக்கே சிறக்கும். பிரமனை யுபாசிப்பவர்களன்றோ பிரமலோகப்பிராப்தியும், பிரமனது சாரூப்பியமும்அடையத்தக்கவர்களாவர்? இவர்களைப் பிரஸ்தாபத்துக்கே கொண்டுவராமல் நமதன்பர்காற்றில்விட்டார். பிரமலோகமே விஷ்ணுலோகமும், சிவலோகமுமாகத் தோற்றும்போது பிரமனே விஷ்ணுவுஞ் சிவனுமாகத் தோன்றா நிற்பனன்றோ ? இனி விஷ்ணுலோகமும்-சிவலோகமும்,விஷ்ணுலோகவாசிகளும்-சிவலோகவாசிகளும், விஷ்ணுவும்-சிவனும் போகுங்கதியென்னை ? இவைகளுக்குக் கதியுண்டாகாத போது இவைகளைக் கற்பனையாகவன்றோ வொதுக்கவரும் ? இவைகளே கற்பனையாகிறபோது பிரமலோகமாத்திரம் கற்பனையாகாததெங்ஙனம்? நமதன்பரது பிரசங்கம எல்லாம்பொய்யென்று கூறுவதற்கே பொருத்தமாகநின்றதெனவறிக.

இனித் தேவயானமாாக்கம் பிரமலோகத்திற்கேயுள்ளது என்று இவர் கூறியதற்குத்தான் பிரமாணம் யாது ? இத்தேவயானமார்க்கமே சிறந்தது என்பதற்குப் பிரமாணமும், நியாயமும் என்னை ? இத்தேவயானமார்க்கம் விஷ்ணுலோகத்திற்குஞ் சிவலோகத்திற்கு முண்டாகாமற்போன விதமென்னை ? இவரதுபோதங் கேட்டவர்கள் (சாலோக சாமீப சாரூப சாயுஜ்யங்களாகிய பேறுகளைப பிரஸ்தாபித்துச் சரியை கிரியை யோக ஞானங்களை யெய்தினோர் சிவலோகத்தைப் பெறுவரென்றும், சிவனது சமீபத்திலிருப்பரென்றும், சிவனதுருவத்தை யடைவரென்றும, சிவனோ டத்துவிதப்படுவரென்றுங் கூறும்) வேதவேதாந்தங்களை வெறுத்துப் பிரமனது உபாசனையையே விழைந்து சிவாபராதத்திற் றலைப்படுவரென்க. சிவாராதனஞ்செய்பவர்தம்முள், மந்தாதிகாரிகள் விஷ்ணு-பிரமன் - இந்திரன் - இயமன் முதலினோரதுபதங்களைப் பெற்றுக் குறித்தகாலம்வரையிற் போகம்நுகர்ந்திடுவர். இயமனதுலகத்தில் யயாதி - நகுஷன் - புரூரவன் - மாந்தாதா-சோமன்-இராமன்-இலட்சுமணன்-பிரதர்த்தன் முதலினோர்

இயமனை யுபாசித்துக்கொண்டிருந்தனனென்று பாரதம் கூறுகின்றது. இவ்வியமனதுபாசனையைப் போலவே பிரமனதுபாசனையையும் சாஸ்திரங்கள்பிரஸ்தாபிப்பதை யாமாட்சேபிக்கமாட்டோம். ஒருவன் சிவாலயத்திற்சென்று ஒருபிரதட்சிணஞ்செய்யின்-பிரமலோகத்தையடைவனென்றும், இரண்டுபிரதட்சிணஞ்செய்யின்-விஷ்ணுலோகத்தையடைவனென்றும், மூன்று பிரதட்சிணஞ்செய்யின்-உருத்திரலோகத்தையடைவனென்றும் புராணங்கள்கூறுகின்றன. இதனாலும் பிரமலோகத்தை யடைவாரது யோக்யதை இனிது வெளிப்பட்டது. பிரமலோகத்தையடைந்தவர்கள் அங்கிருந்தபடியே மோக்ஷமடைதல கூடாது. அங்கிருந்து விஷ்ணுலோகத்தையும், அங்கிருந்து சிவலோகத்தையும, அங்கிருந்து சிவசாயுஜ்யத்தையும் கிரமமாகப்பெறுவனென்பதே திண்ணம. விரிக்கிற்பெருகும்.

## பூர்வபட்சம்.

"ஜகத்காரணன், சத்தியகாமன், சத்தியசங்கற்பன், சர்வஞ்ஞன், சுதந்தரன், சர்வப்பிரேரகன், கிருபாலு என்றிவ்வாறு ஈசுரத்தன்மங்களைச் சிந்திப்பாயாக வென்று காரணப்பிரமத்தின் உபாசனை கூறியிருக்கின்றது.

## சித்தாந்தம்.

இவர் சிவன் - நாராயணன் முதலியநாமங்கள் காரியப்பிரமத்துக்கே சொந்தமெனவும், இந்த நாமங்களே காரியப்பிரமத்துக்குப பின்னாக் கூறப்பட்டனவெனவும் முன்பு பிரசங்கித்திருக்கிறார். இங்ஙனமாக, சிவ நாராயணாதி நாமங்களால் காரணப்பிரமோபாசனை செய்யுமாறு இவர் கற்பியாது ஒழிந்தது என்னை ? இவர் ஜகத்காரணன் - சத்தியகாமன் முதலிய நாமங்களாற் காரியப்பிரமங்களையுபாசிக்கக் கற்பியாமையால், அக்காரியப்பிரமங்களாக இவர் கொண்டிருக்குஞ் சிவன் - விஷ்ணுமுதலினோரை ஜகத்காரணரும், சத்தியகாமருமாகப் பிரஸ்தாபிப்பது இவருக்குத் துக்கத்தைவிளைக்கத்

தடைபிரர்து. இவர் காரணப்பிரமோபாசனைக்கு உபகாரமாகக்கற்பித்த ஜகத்காரணன் - சத்தியகாமன் என்பனவாதி தர்மங்களை இவர் கிறிஸ்தவர்களிடங்கற்று வெளிவந்ததாகவே யாம் யோசிக்கின்றோம். ஏனெனின், அவர்கள் "எங்கு நிறைந்தவரோ, எல்லாம் வல்லவரோ, அழியாதவரோ, பராபரவஸ்துவாயுள்ளவரோ" என்பனவாதி விசேடங்களாற் கடவுளைத்துதிப்பது யாவரு மறிவார்கள். இவர்களோ டினப்பட்டுச் சிவாநாமங்களையுச்சரிக்கப் பின்னிட்டு, உமாஸஹாயத்வாதி லிங்கங்களோடுகூடிய அருட்கோலங்களில அன்பு பாராட்ட இசையாத பூர்வபட்சியினதுவினைக்கு யாம அதிகமாக வருந்துகின்றோம். கைவல்யோபநிஷத்தில் "ஏகாந்த ஸ்தானங்களிலே சுகாசனத்திலிருந்து சுத்தனாய், நேராகிய கழுத்துத்தலை யுடம்புகளையுடையனாய், அத்தியாச்சிரமஸ்தனாய், இந்திரியங்களனைத்தையுமடக்கிப் பத்தியால் தனது ஆசிரியனை இறைஞ்சி யிதயபுண்டரீகத்தைத் துகளற்ற சுத்தமாக்கி, அதன் மத்தியிலே தெளிவுடையவராய், சோகமில்லாதவராய், எண்ணப்படாதவராய், வெளிப்படாதவராய், அநந்தரூபராய், சிவனாய், அமிர்தராய், பிரமயோனியாய், தற்பரராய், ஆதிமத்யாந்தவிகீனராய், ஏகராய், விபுவாய், சிதானந்தரூபராய், அரூபராய், அற்புதராய், உமாஸஹாயராய், பரமேசுவரராய், பிரபுவாய், முக்கண்ணராய், நீலகண்டராய், பிரசாந்தராய், பூதயோநியாய், சமஸ்தஸாட்சியாயிருப்பவரைத் தியானித்து, அதனான்முனியானவன் இருளின்மேற்போமவன். அவர்பிரஹ்மா, அவர்சிவன், அவர் இந்திரன், அவரழிவற்றவர், மேலானவர், சுவப்பிரகாசர், அவரே விஷ்ணு, அவர் பிராணன், அவர் காலன், அக்னி, அவர் சந்திரன், அவரே இருந்தது மிருப்பதுமாகிய வெல்லாமானவர், என்று முள்ளவர், அவரையறிந்து அதனால் மிருத்தியுவைக்கடப்பன். முத்திக்கு வேறுவழியில்லை" என்று கூறப்பட்டிருக்கின்றது. இந்த வுபநிஷதார்த்தத்தை நமதன்பர்கேட்டிருப்பன், அவருக்குச் சிவநாமங்களி லுபேக்ஷை யுண்டாகமாட்டாது. இதில், உருவம், அருவம், உருவருவமுதலிய பரனது அருள்வடிவங்களும், அவரது அநந்த கல்யாணகுணங்களும், அவர் எல்லாந்தாமாயிருக்கும் அருட்பிரகாசமும், அவர் உமாஸஹாயரும், திரிலோசனரும், நீலகண்டருமா யெழுந்தருளியிருக்கும் அடை

யாளங்களும் பெறப்பட்டிருக்கின்றன. இவ்வருட்கோலமூர்த்தியை வழிபடுதலே மிருத்யுவைக் கடப்பிக்குமெனவும், முத்திக்கு வேறுவழியில்லையெனவு முபதேசிக்கவெழுந்த வேதாந்தம் நமதுகைவல்யவேதாந்தியார்க்குக் கசப்பெடுத்துப் போனது அதிசயமன்று நூற்றெட்டுபநிஷத்துக்களில் கைவல்யமென்பதொன்று. இவ்வுபநிடதத்தின்பேரையே தமது நூலின்பெயராக வமைத்து, ஒருவேதாந்தியார் கைவல்யம் என்னுந் தமிழ் நூலியற்றினார். உபநிஷத்தாகிய கைவல்யத்தின் பிரமேயத்தை மேலே யாம்விதந்தமே போதும். அதன் பேரை இரவல்கொண்டெழுந்த கைவலயம் அதனோடு முரணிப பேய்ஞானத்தைப் போதிக்கின்றது. இதற்கு உரையாசிரியராக நமதன்பர் வெளிபபட்டமையால், இவர்க்கு உபாஸஹாயத்வாதிலிங்கங்களோடுகூடிய பரணிடத்தில் அன்பு ஜநியாதது ஸஹஜந்தான்.

"உன்திரு வடிக்கீ ழுறுதியா மன்பு
முன்திரு வருளினாற் கிடைப்ப
தன்றிநூற் பலவு மாய்ந்ததா னுரைசெ
யளப்பருந் திறமையான் மதியான்
மன்றவே கிடைப்ப தன்றுமற் றதனை
மாதவஞ் செய்திலாக் கயமை
துன்றிய புலையோர் யாங்ஙனம் பெறுவர்
சோதியே கருணைவா ரிதியே."

என்னும பிரமாணம் பொய்யாயிடுதல் கூடாமையின், பூர்வபட்சியினது பிரவர்த்தக முசிதமாயினதறிக. "அநேக ஜந்மஸித்தாநாம்—ச்ரௌதஸ்மார்த்தாநு கர்மிணாம், சந்த்ரசேகர பாதாப்ஜ—சரணஸ்ய குதூஹலம்" என்னும் வசனமிரியாலோசனையும் எமதுண்மையை நிறுத்தும். இனிச் சிவஞானிகள் செய்யும் பிரமோபாசனை "குவளைக்கண்ணி கூறன் காண்க, அவளுந்தானு முடனேகாண்க. பரமாநந்தப் பழங்கடலதுவே." என்னும் ஸ்ரீவாசகத்திருமுறையால் வெளிப்பட்டவாறறிக.

(பட்டினத்தார்பிரபந்தத்தில்)

" நஞ்சுபொதி
காளகண்டமுங் கண்ணொருமூன்றும்
தோளொருநான்குஞ் சுடாமுகமைந்தும்
பவளநிறம்பெற்றுத் தவளநீறுபூசி
யறுசுவையதனினு முறுசுவையுடைத்தாய்க்
காணினுங் கேட்பினுங் கருதினுங் களிதரு
சேணுயர்மருத மாணிக்கத்தீங்கனி
பையப்பையப் பழுத்துக்கையர
வெம்பிறைக்கனி இனிதருந்திச், செம்மாந்திருப்ப"

எனவும்,

(திருக்களிற்றுப்படியாரில)

" உள்ளும்புறம்பு நினைப்பொழியிலுன்னிடையே
வள்ளலெழுந்தருளு மாதிறனும்"

எனவும்,

" இன்றிச்சமயத்தி னல்லதுமற்றேழையுட
னென்றுசொலி மன்றத்து நின்றவரார்"

எனவும்,

" துரியங் கடந்தசுடர்த் தோகையுட னென்றும
பிரியாதே நிற்கின்ற பெம்மான்"

எனவும்,

" இக்கணமே முத்தியினை யெய்திடினு மியானினைத்த
வக்கணமே யாகுந் தந்திடினு—நற்கணத்தா
நாயகற்கு நாயகிக்கு நானடிமை யெப்பொழுது
மாயிருக்க லன்றியிலேன் யான்."

எனவும்,

" சிந்தையிலு மென்றன் சிரத்தினிலுஞ் சேருமவை
வந்தவினை மண்ணினை—நாம் வாராமற்—றந்தவினை
மாதினுட னெத்திறமும் வாழ்ந்திருக்க வெனபதலா
லேதுசொலி வாழ்த்துவே னின்று."

எனவும்

போந்த அருள்வாக்கியங்களுங் கைவல்யசுருதியினது ஆர்
ந்தப்பிரகாசவடிவமாகக் காட்டப்பட்டவாறறிக. விரிக்கிற்
பெருகும். இத்யாதிப்ரபலஸாக்ஷிகளால் ஸித்தாந்தப்பட்
டிருக்குஞ் சிவோபாசனையால் க்ஷேமமடைவதை விட்டு,
'அர்யயனரனென்னுமிவரை, யுணர்ந்துணர்ந் துரைத்துரைத் திறை
ஞ்சுமின் மனப்பட்ட தொன்றே" எனவும், "நாரணனான்முகனர
னென்னு மிவரை, ஒன்றநும்மனத்துவைத் துள்ளிநும்மிருபசை
யறுத்து" எனவும்போந்த சடகோபரதுபாடல்களை எமக்குப்
புதுமைகாட்டி நமதன்பர் சேர்வெய்தினார். இந்தப்பாடல்
களும், இவைபோன்ற பலபாடல்களடங்கிய திருவாய்மொ
ழியுஞ் சங்கசக்ராதி சின்னங்களைத்தாங்கிய நாராயணர் காரிய
பிரமமெனவும், ஜகத்காரணன் - ஸத்யகாமன் என்பனவா
திதர்மங்களால்வழிபடத்தக்கது காரணப்பிரமமெனவும் போ
திக்கவில்லை. இந்நூனமுழுதும் நாராயணனையே பரமா
த்மாவென்று போதிக்கின்றது. நமதன்பர் பசுவாகியதன்னைப்
பரமென்று கூறுவதுபோல் சடகோபர் விஷ்ணுவாகிய வே
றுபசுவைப் பரமென்று கூறினர். இச்சடகோபரதுநூல வி
ஷ்ணுபரத்வங்கூறும் வைஷ்ணவநூலாகையாலும், வைஷ்
ணவசித்தாந்தம "நாராயணன் நான்முகனைப்படைத்தான், நான்
முகன் சங்கரனைப்படைத்தான்" என்பதாகையாலும், நமதன்பர்
தேடிய இரண்டுபாடல்களிலும் முதற்கண் விஷ்ணுவையும்,
இரண்டாவது பிரமனையும், மூன்றாவது சிவனையுங் கூறி அவ
ர்களது உயர்வுதாழ்வுகளை விளக்கியிருக்கின்றமையாலும்,
"பேசநின்ற சிவனுக்கும் பிரமன்றனக்கும் பிறர்க்கும், நாயகனவனே
கபாலநன்மோக்கத்துக் கண்டுகொண்மின்" என்னுஞ் சிவநிந்தை
பொதிந்தபாடலும், இதுபோன்றபலநிந்தைகளும் அப்பசு
பாரம்யநூலிற்படிக்கப்பட்டிருத்தல் ப்ரத்யக்ஷமாகையாலும்
பூர்வபக்ஷியார் துணிந்தவாறு சடகோபரதுநூல் அபேதவாத
த்தைச் சாதித்ததில்லையென்பது வியக்தமாயிற்று. இச்சட
கோபரது சிவநிந்தைகளைச் சிவாதிக்யரத்நாவளியில் முன்பே
யாம் பரிகரித்திருக்கின்றோம். இனி நமதன்பர் தேடியபாடல்க

ளில் மூவரையுமிறைஞ்சவிதித்தது யாதெனின், முதற்கடவுளாக விஷ்ணுவையும், அவரதமைச்சராகப் பிரமனையும், அவரதமைச்சராகச் சிவனையும் வணங்குவீர்களாகவென்றமையாம். இப்படி வழிபடுவதால் பிரமன், சிவன் என்பவர்களது வழிபாடுகள் விஷ்ணுபாரத்வஹானியை யுண்டாக்காமையாலும், அவ்வழிபாடுகள் விஷ்ணுவாதிக்யத்தைவிடாமல் ஜீவிக்கின்றமையாலும், முடியில் எல்லாம்விஷ்ணுவினதுவழிபாடேயாமென்று துணியப்படுகின்றமையாலும் "மனப்பட்டதொன்றே" யென்னுந்திருப்பாசுரம் நமதன்பரதுமதத்திற்கிணங்காமல் தூரமாய்விட்டதென்க. அல்லது "மனப்பட்டதொன்றே" என்பதற்கு, அரி-அயன்-அரன் என்னுந்தெய்வங்களில், அயன்-அரன் என்பவர்களைத் தள்ளி, அரியென்னுந் தெய்வமொன்றையே மனத்திற்குச் சம்மதப்பட்டதாகக்கொண்டு வழிபடுவீர்களாகவென்று பொருள்கூறுவதுநேர் சிறக்கும். இவர்தேடிய மற்றொருபாடலில் "நன்றெனக் கைதொழப்பெற்றவனிடை நம்முடைநாளே" என்றிருப்பதுவும் இவரதுமதத்தைப் பழித்தது. எங்ஙனமெனின், இதில், "காரணன் நான்முகன்-அரன்-என்னுமிவரை" என்று முதற்கடவுளைப் பிரஸ்தாபிக்காது முடிவிலும் பிரஸ்தாபிப்பதாயின், "நன்றென நன்குசெய்வாரினை நம்முடைநாளே" என்று பாடமிருக்கவேண்டும். அங்ஙனமின்றி "அவனிடை" என்று நாராயணனையே பிரஸ்தாபித்தமையால், யாம் கூறிய பொருளே அமைவுடைத்தாகி, நமதன்பரது மேவதாந்தம் வெளுத்தவாறறிக. இவருக்கு இப்பாடல்கள் எமக்குத் துச்சமேயானாலும், இவருக்கவற்றுள் ஒருசாதகமும் உண்டாகவில்லையென்பதைத் தெரிவிக்கவேண்டியே அவைகளையும் வருவித்தொழித்தாமென்க. விரிக்கிற்பெருகும்.

இதுகாறும் பூர்வபட்சியார் கூறியபரவஸ்துலட்சணத்தி ஞாபகத்தை யொருவாறுவிரித்துச் சைவஸித்தாந்தத்தாற்றுணியப்படும் பரசிவாதிக்யப்பிரசங்கஞ் செய்துமுடித்தோம். இனி அவரது நூலிலடங்கிய வேறு ஆபாசங்களையும் எடுத்திசைப்பாம்.

## பூர்வபட்சம்.

"முதனூலிருக்கவும் வழிநூல் சார்புநூல் செய்யப்புகுவோர் ஆதிக்கண்ணே மங்கலஞ்செயற்பாலது அவசியமே; என்னை? இரந்த சமாப்திக்குப் பிரதிபந்தங்களாகவுள்ள எவ்விதவிக்கினங்களும் அம்மங்கலத்தால் நாசமுறுதலின். விக்கினமென்பது பாவம். பாவத்தினால் சுபகாரியங்கள் சமாப்தியாகா; ஆகலின் அப்பாவங்களைப்போக்கவல்ல மங்கலம்வேண்டும். பாவமின்மையராயினரோ வெனின்? அவர்களும் மங்கலஞ்செய்யத்தக்கதேயாம்; இன்றேல் அந்நூலை நோக்குவோர்க்கெல்லாம் நூலாசிரியரிடத்து நாஸ்திகப்பிராந்தியுண்டாகி அந்நூற்கண் ஊக்கஞ் செல்லாதென்க."

## சித்தாந்தம்.

ஒருநூலி னாதிக்கண் மங்கலம் வேண்டற்பாலது என்றதெமக்குமொப்பே."இன்றேல் அந்நூலைநோக்குவோர்க் கெல்லாம் நூலாசிரியரிடத்து நாஸ்திகப்பிராந்தியுண்டாகி அந்நூற்கண் ஊக்கஞ் செல்லாதென்க" என்று கூறிய சமாதானமே அஸம்பாவிதம். ஒருநூலின்முதற்கண் மங்கலஞ்செய்யாமைகொண்டே அந்நூலையாக்கியோரிடத்து நாஸ்திகப்பிராந்தியுண்டாவது யாங்ஙனம்? அந்நூலிற்சிறிதுபாகம், அல்லது அதிகபாகம் பார்த்தபின்னரோ அதனை யாக்கியோரது யோக்யதை வெளியாகாநிற்கும். முதற்கண் மங்கலஞ்செய்யாமைகொண்டே அந்நூலாசிரியரிடத்து நாஸ்திகப்பிராந்தியுண்டாமென்பது அஸங்கதம். இதனை யிவர் வேறுவிதமாகக்கூறினொருவாறு பொருந்தலாம். என்னெனின்,மங்கலமிழந்தநூலைநோக்குவோர் தாமுமங்கலமிழந்து கெடுவராகலின்,அவர்பொருட்டுப் பாவமின்மையராயினரும் மங்கலம்விழைதற்பாலார் என்று கூறுவதேயாம். இனி மங்கலங்கூறுவது "தெய்வவணக்கமுஞ் செயப்படுபொருளே, மெய்தவுரைப்பது தற்சிறப்பாகும்." என்ற சூத்திரப்படி அமையும். இதனை நமதன்பரநுசரிப்பின், மங்கலமின்றேல் நூலாசிரியரிடத்து நாஸ்திகபிராந்தி யுண்டாமென்றுகூறிய அவர்நியாயம் அங்கீகாரமாம். இவர் "பாவங்களைப் போக்கவல்ல மங்கலம் வேண்டும்" எனவும், "பாவமின்மையராயினரோ" எனவும்

பிரசங்கித்தமையே யிவர்க்குத் தலைநோயாக முடிந்தது. மங்கலம் பாவத்தைப்போக்குவது என்று கூறுகையால், பாவமுடையாரே மங்கலம்வேண்டற்பாலாரென்பது துணியப்படும். பாவநிவிர்த்தியின் பொருட்டு மங்கலங்கூறிவிட்டுப் "பாவமின்மையராயினுரோ" என்றது எற்றுக்கு? ஈண்டு மங்கலமென்பது கடவுள்வழிபாடேயன்றிவேறில்லை. இவ்வழிபாடு பாவமுடையார்க்கேயென்பதும் அசங்கதம். பாவமுடையார்வழிபடுவது அப்பாவநீங்குதற்பொருட்டும், பாவமில்லாதார்வழிபடுவது அக்கடவுளின்பத்தை நுகாதற் பொருட்டுமேயாம். இவ்வுண்மை "நாதநாதவென்றழுதரற்றிப்-பாதமெய்தினர்பாதமெய்தவும்" என்னும் ஸ்ரீவாசகத்திருமுறையாற் பெறப்பட்டவாறறிக.பாதமெய்தினர் என்பது பாவநீங்குதற்கெய்தினர்எனவும், பாதமெய்தவும் என்பது சிவாநுபவமபண்ணுதற்கெய்தவும எனவும் தெளிந்திடுபர் மேலோர். இதனால், பாவமுடையாராயினும், பாவமின்மையராயினுரும் கடவுள்வாழ்த்தாகிய மங்கலஞ்செய்யாதொழிய அதிகாரம் பெறுராயினர். எனவே, இருதிறத்தவரும் விதிபிறகட்டுண்டுமங்கலஞ்செய்யக் கடமைப்பட்டவராயினுரெனல சிறந்தது. அவ்விதிவாக்கியந் தம்மையுடையான தருமமொழியே யாகையா லதன்வழிநிற்ற லெத்துணைபபெரியாாக்கும மரபேயாமெனக. இவ்வாறுதெளிபுந தெரிவிழந்த நமதன்பர் "பாவமின்மையராயினுரோ" எனக் கடாவியதை யாமவாது பாவமென்னுது வேறுபாடுதென்பேம்? பாவமின்மையராயினர்க்கே மங்கலமெல்லாஞ் சொந்தமாகவின், அம்மங்கலத்தைத் தமக்கெனவிழையாதாரை அமங்கலமுடையா ரெனலே யமைவுடைத்து. இவர் தம்மையுந் தமது கைவல்யநூலாரையும் பாவமில்லாதவரென வெளிப்படுத்திக் கொள்ளவே இவ்விசேடப்பிரசங்கத்தி லிறங்கினர். இதனை, "வினைப்போகமேயுறு தேகங்கண்டாய் வினை தானொழிந்தாற்-றினைப்போதளவு நில்லாதுகண்டாய்" என்று எமதுபட்டினத்தடிகள் கூறியதுப்த்துணரவறியாரே மதித்து மாழ்குவரெனக. இம்மாயாவாதியார் "பூஜ்யபாதர், வியாசர்" என்று கொண்டாடப்

பெற்றவர்தாமே பலதுன்பத்தழுந்திப் பாவத்தா ஞெந்தவ ராக,இவரும் இவரது கைவல்யநூலாரும் அப்பாவப்பிணியா ஞெந் தயராரென்பது விந்தையினும் விந்தையேயாமென்க. சிவஞானியர்க்கே பிராரத்தவினை நுகர்தலுண்டாயின், இப் பசுஞானப்பெரியார்க்கு வினைப்போகமாகிய பாவமில்லையெ ன லெங்ஙனேவடுக்கும்? இவ்வுண்மையை யுய்த்துநோக்கு வார்க்கு நமதன்பர்சாதித்தமங்கலம் அகரத்தை முதலிற்கொ ண் டழிந்ததெனலே துணிவாமென்க. விரிக்கிற்பெருகும்.

## பூர்வபட்சம்.

"மாயாவிசிட்ட சைதன்யத்தைக் காரணப்பிரமமென் று கூறியிருக்கின்றனராகலின், அதற்கு உள்ளந்தன்னிற் சா ட்சிமாத்திரமாய்நிற்கை அசம்பவமாமேயெனின், அது பர மார்த்தமாகச் சுத்தப்பிரமமேயாகலான், சாட்சித்தன்மை அதற்கு அசம்பவமாகாதென்க.

## சித்தாந்தம்.

ஈண்டிவர் மாயாவிசிட்டசைதன்யமென்றது காரணமா யாவிசிட்டசைதன்யமேயாம். இக்காரணமாயாவிசிட்டசைத ன்யம் பரமார்த்தமாகச் சுத்தப்பிரமமாயிடுதல்போ லிவர் மத த்திற் கூறுங் காரியமாயாவிசிட்டசைதன்யமும் பரமார்த்தமா கச்சுத்தப்பிரமமாயிடத் தட்டில்லை. இவர் காரணமாயாவிசிட் ட சைதன்யத்திற்குக் கூறிய லட்சணம் காரியமாயாவிசிட்ட சைதன்யத்திலும் பெறப்பட்டமையா லிம்மாயாவாதியாரது நியாயம் வியபிசரித்துவிட்டது. உள்ளந்தன்னிற் சாட்சிமாத் திரமாய்நிற்கை காரணமாயாவிசிட்ட சைதன்யத்துக்கேயன் றிக் காரியமாயாவிசிட்டசைதன்யத்திற் கிவரொப்பாதது நியாயவாதத்தி னிலைபெற்றிலது. இரண்டுக்குங்காரணகாரிய சம்பந்தங்களான் மாயாத்வந்தமும்,பரமார்த்தமாகச் சுத்தப்பி ரமமாந்தன்மையு மிருப்பதுதெளிவார் உள்ளந்தன்னிற் சா ட்சிமாத்திரமாய்நிற்கை காரணப்பிரமத்திற்கே யுண்டென்று வாதிக்கு மிவரதுவெள்ளறிவை யெள்ளிநகையாடாநிற்பரோ

ன்க. இவரது விருத்தியுரைக்காதாரமாய் நின்ற பாடலில் "ஏகநாயகன் பதங்கள் போற்றி" என்றபகுதிக்கு "அகண்டைகரசனுன சிவபெருமானுடைய சீர்பாதங்கட்கு நமஸ்காரம்' என்று இவரே பொருள்விரித்திருக்கின்றார்.சிவபெருமானுடைய சீர்பாதங்களுக்கு நமஸ்காரம் என்று விரித்தபொருள் உமையொருகூறுடையானுகிய சிவனையேயன்றி யுருவமற்ற வேறு எந்தப்பொருளையும்போய்ப் பற்ருது. இங்கே யிவ்வாறுவிரித்தவரிதனேடுமேலேவுண்டாகப் பின்னேரிடத்தில "இந்நூலாசிரியர் இவ்வபிப்பிராயத்தையறிவித்தற்பொருட்டே காரியப்பிரமங்களின் சின்னங்களான சதுர்ப்புஜ, திரிநேத்ர, சதுண்ட, அஷ்டபுஜாதிகளுள்ளே யாதொன்றையும் எடுத்து விசேடியாமல் "ஏகநாயகன்பதங்கள்போற்றி" என்ருர்" என்று பிரசங்கித்தனர். முன்னெடுபின் முரணுமாறெழுதிய பகுதிகளிற் பின்னெழுதியதே யவரதுதுணிவாயின், முன்னெழுதியதை யெழுதவறியாதெழுதினுரென்றிழிவுரைக்கவரும். ஏகநாயகன் என்றவிடத்திலிவர் சிவன்என்று பொருள்கூருமல் ஏகமாகியபிரமம் என்று முடித்திடலே யமைவுடைத்து.சிவன்என்றதே பிரமம் எனின், சிவன் என்று கூருமல் சிவபெருமான் என்றுங் கூறினமையால், இது சைவரது பரிபாஷையாகமுடிந்தது. இதனுல் அவர் பிரமமென்று சாதிக்கவெழும்பொருள் சைவர்கூறும் பிரமமாமேயன்றி மாயாவாதியர்கூறும் பிரமமாகாது. அதவா நமதன்பர் "ஏகநாயகன்" என்பதற்குச் சுத்தப்பிரமம் என்று சாதிப்பினு மதனையடுத்துவந்த "பதங்கள் போற்றி" என்பதற்கு இவ ரிந்திரஜாலவித்தைசெய்தே காட்டவேண்டும். பிரமம் ஏகம். அது உருவமற்றது.கைகாலில்லாதது அந்தோ ஈண்டுப் பரமான்மாவினது பாதங்கள் நமதன்ப ரோதங்கொளச்செய்தது அவரது வினையேயாம்.இந்தப்பரியாலோசனையால்"ஏகநாயகன் பதங்கள் போற்றி" என்பதற்கிவ ரிவரது காரியமாயாவிசிட்டசைதன்யத்தை யொப்படைப்பாராயி னிவருக் கிவ்வளவவஸ்தையுண்டாகவிடமிராது. காரியமாயாவிசிட்டசைதன்யங்கள் கைவிடத்தக்கனவென்றுஇவர்கொடிபோட்டிருப்பவ

ராகையா லதனை யிறக்கவிசைந்திலரென்க. இவருக்கு அதனை
யிறக்குவதில்லையென்னும் எண்ணமாத்திரமேயன்றி எமது
சஸ்திரம் பட்டபோதே யறுந்துவிழு மற்பகிலையினது அது
வென்றறிக. காரியப்பிரமத்தைவேண்டாதவிவர் "பதங்கள்
என்றது காரணப்பிரமத்துக்கு அசம்பவமாமேயெனின்? அக்கார
ணப்பிரமம் ஓரோர்காலையில் பக்தாநுக்ரகார்த்தம் அவர்வேண்டிய
அருளுருக்கொண் டாவிர்ப்பவிக்கும் ஆற்றலுடைத்தானமையின்
அதற்குப் பாதங்கூறியது உபசாரமும், அசம்பவமுமாகாது" என
வொன்று கூறினா. இவரது ஞானம் கரணம்போட் டுருண்டு
கொண்டே போகிறதன்றி யோர்நிலையி னின்றிலது. இதற்கு
முன்வரையில காரணப்பிரமம், காரியப்பிரமங்கள் என்பவை
களைக்கூறிவந்தவரிப்போது காரணப்பிரமத்தினருளுருவான
வெறுபலபிரமங்களைத் தேடிக்கொண்டுவந்தார். இவை காரிய
பபிரமங்களல்லவென்பதிவரது மதமாகாவிடின், "காரியப்பிர
மங்களுள் யாதானுமொன்றைக்கூறுதல் பொருந்தாது" என்றிவா
கூறமாட்டார். இதனால்,காரணப்பிரமமுங் காரியப்பிரமங்களு
மல்லாத வெறுபிரமங்க ளவையென்பதே நிச்சயமாயிற்று. இ
வரதுகாரணப்பிரமம் மாயாவிசிட்டசேதனம். இம்மாயையை
ப பிரமத்துக் கபின்னமாகவொப்பின்,விசிட்டம் என்பதுகெ
டும், பின்னமென்பதே இனித் துணியத்தக்கதாயிற்று. பின்
னமெனின், ஏகத்வமெடுபடுகிறதேயெனின், இதற்குமதன்
பரோ விடைகூறவேண்டியது. விசிட்டசப்தசிரவணமாத்திர
த்தானே மாயையும்,பிரமமும் விஜாதியென்றே யாவரு மறி
வார்கள். இம்மாயையோடுகூடிய பிரமம் அருளுருக்கொள்ளு
மாறெங்ஙனமெனவிசாரிப்பதே இப்போதவசியமாம். அருளு
ருவென்கையில் அருள் உபாதானமும், உரு வதன்காரியமு
மாம். அவ்வருளென்பது பிரமத்துக்குப்பின்னமா? அபின்ன
மா? பின்னமென்றாலத்துவிதங்கெடும். அபின்னமென்றாற்
சைவசித்தாந்தத்திற் பரிவஸானமாம். இது மாயாவாதமா
காது. அன்றி யிவ்வருளென்பது காரணமாயைக்கு வேறா?
வேறன்றா? வேறென்னின், பிரமமொருமுதல், மாயையொரு

முதல், அருளொருமுதலென்னும் விவிதப்பிரஸங்கமுண்டாம. வேறன்றென்னின், மாயையேயருளாகி, அருளுருவென்பது மாயையுருவாகிக்கெடும். அவராது மதத்தில் மாயைக்கும், அருளுக்கும் பேதமுணரும்பெற்றியின்றென்க. மாயாகாரியவுருவத்தையேயிவரருளுருவென்றுபிரஸ்தாபித்துப் பெருமை வகித்தாராகையால் இவர் கூறியவருளுருவங்க ளிவர்கைவிடத்தக்கனவென்றுபிரசங்கித்துவரும் காரியமாயாவிசிட்டப்பிரமங்களில் வேறுகாதனவாகவே முடிந்தன. இதனால இவர்முதற்கண்ணெடுத்துக்கொண்ட காரணமாயாவிசிட்டசைதனம், காரியமாயாவிசிட்ட சைதன்யங்கள் என்பவைகளே தேறியகாரணப்பிரமமும், காரியப்பிரமங்களுமாக நிலைத்தன. இந்த முடிவால், காரணப்பிரமம் "பக்தாநுக்ரகார்த்தம் வேண்டிய அருளுருக்கொண்டாவிர்ப்பவிக்கும்" என்றிவர் பிரசங்கித்தது அவலமாகியது.

இனி யிவரெடுத்துக்கொண்ட பிரமேயத்திற் கிவர்தேடிய பிரமாணங்க ளிவருக்கிணங்கினவோ, அல்லதிவரோடு பிணங்கினவோவெனச் சற்றுயோசிப்பாம்.

(பிரமகீதையில்)

" புருட னென்றுரை செயப்படு வதுபரி பூரண மாகின்ற
சொருப நின்றவா நிற்கவிங் கருளொடு தோன்ற வல்லவன்றனே
யரனு மன்றுமா லயனுமன் றெவர்க்குமுள் ளாகியே யாவர்க்குந்
தெரிவ ருஞ்சிவ னவனையிங் கொருங்கிய சிந்தையார் தெளிவாரோ."

எனவும்,

(பகவற்கீதையில்)

" சாவாது பிறவாது தனிமுதலா யிருந்தநா
னுவாவிவ வுலகுபடி மழிதுயர்தீர்ப் பதற்காக
மேவாது நின்றேயென் மாயையினுன் மெய்யேபோ
லோவாது பிறந்திடுவே னுகந்தோறு முகந்தோறும்."

எனவும்,

(திருவாய்மொழியில்)

" துயரில்சுடரொளி தன்னுடைச்சோதி நின்றவண்ணநிற்கவே
துயரின்மலியும் மனிதப்பிறவியிற் றோன்றிக்கண்காணவந்து
து ங்கள்செய்து தன்றெய்வநிலையுலகிற் புகவுய்க்குமம்மான[னே."
று யமில்சீர்க்கண்ணன் மாயன்புகழ்துற்ற யானோர் துன்பமிலே

எனவும்,

(அஞ்ஞவதைப்பரணியில்)

" தன்ப ராபரம தானதிரு மேனிநிலையிற்
ன மின்றியொரு தன்மையினி னின்றருளியே
ன்ப ரானவர்க ணெஞ்சினி லுவந்த வடிவா
யங்கு வந்தவர்க ளுய்யும்வகை செய்த வருளும்."

எனவும்,

பாடலகளே இவர்தேடிய பிரமாணங்கள்.

இவற்றுட் பிரமகீதை தத்துவராயர்செய்த தனிநூல். இதிற்போந்த " புருடனென்றுரை செயப்படுவதுபரிபூரணமாகின்ற சொரூபம்" என்றதனைச் சூதசங்கிதையிலடங்கிய பிரமகீதையில்,கடவல்லியொடு சுவேதாசுவதரமுறைத்தவத்தியாயத்தில் " புருடனிலும் பரமான தொன்றுமிலே சிவனேயப் புருடனென்ப, கருடனுயர்த் தவன்முதலோ ரல்லர்" என விளக்கியிருக்கின்றது. இதில், " கருடனுயர்த்தவன்முதலோரல்லர்" என்பதனையே " அரனுமன்றுமா லயனுமன்று" எனத் தத்துவராயரும் விதந்தனர். இதனால், திரிமூர்த்தி யுத்தீர்ணராகியசிவமூர்த்தி உருவமில்லாத மாயாவிசிட்ட சைதன்யமென்று நமதன்பர் கொண்டுகூறியது குணம்பெற்றிலது. சூதசங்கிதையில், " உமார்த்த விக்ரஹாசுத்தா த்ரிணேத்ரா சந்திரசேகரா, நீலக்ரீவாபராநந்த ப்ரமோதாதாண்ட வப்ரியா, ப்ரஹ்மாவிஷ்ணு மஹாதேவைரூபாஸ்யா குணமூர்த்திபி :" என்று கூறப்பட்டமையால், குணமூர்த்திகளாகிய அரன்-மால்-அயன் என்னும் மூவருக்குமேலாகியசிவம் உமையொருகூறுடையதும், நிர்மலமானதும், மூ

ன்றுகண்களையுடையதும், சந்திரனைச் சிரசிற்றரித்ததும், நீலநிறமானகண்டமுடையதும், ஆநந்தத்தாண்டவமபுரிவதுமாகிய அருட்கோலப்பொலிவினதென்று துதிக்கும் பெற்றியுடையதென்பதே சிவஞானிகளது துணிவு. திரிமூர்த்திகளைக் [illegible] மூர்த்திகளென்றமையால், இவர்களைக்கடந்தவரும், இவர்[illegible] சிக்குந்தெய்வமாயுள்ளவருமாகிய துரீயசிவத்தைக் [illegible] தியென்றலகூடாது. இச்சிவமூர்த்தியே பக்தாநுக்ரஹார்த்தம் பலவருளுருவங்களைத்தாங்குவரொனபது வேதமந்த[illegible] சிரேஷ்டார்த்தசமமதம். இவரதருளுருவங்களாகப் பிரமன் [illegible] ருதியரது வடிவங்களையும், இவரது பிறப்புகளையும் [illegible] வது அருளுக்குபாத்திரமானவர்க்கேகூடும். இப்பிரமன் [illegible] ருதியராகிய பக்தர்களுக்கே சிவம் அருளுருக்கொண்டநுக்கிரகிக்குமென்பதை, சாமவேதார்த்த சங்கிரகமுரைத்த [illegible] யாயத்தில்,

" மாய னேமுதல் வானவ ரன்பினுக் கிரங்கிப்
பாய நான்மறை முடிக்குமெட் டாதநம் பரம
ரூப வாநந்த மனைவரு மடையவன் பிலார்க்குச
சேய வாநந்த தாண்டவஞ் செய்தனன் மாதோ."

என்று சொல்லியிருக்கின்றது.

இன்னும்,

" தூய பரயோ கிக்கெல்லாந் தோன்றுஞ் சிவமா யேயன்றும்
பாயதரங்க மொழிகடல்போற் பகாநிற சலமா யேயிருப்பார்
ஞேய வவனற் னுடைய நிட்டை யறியா ரான்மும் மூர்த்திகளும்
மேய மறையு மறிந்துரைக்க மாட்டா தெனனில் விள்ளுவதென்."

எனவும்,

" அன்ன நிட்டை பரசிவற்கு மவனை யகலா வுமையவட்கு
நன்ன ரியல்பே யுண்டன்று னலமார் பிரசா தத்தினன்
மன்ன வெனக்கு மாயவற்கு மற்று ளோர்க்கு முண்டாகும்
பன்ன வரிய வதுகிடைக்கும் பான்மையெவவா றெனக் கேண்மின்."

எனவும்,

ந்த பாடல்களாலும் உமையொருகூறுடையானேசர்வா
க்ஷமூர்த்தியென்பது வியக்தமாகியது. இம்மட்டோ,
தை க வுபநிடததாற்பரியமுணாத்த வத்தியாயத்தில்
எச் த்தினுடைய பேராநந்தலேசத்தா லின்றேனூற்றும், பச்சி
னர்பூ் துளவன்முத லோரதிக நூனமாப் பகராநந்த, மெச்சி
டவுதிருக்கின்றார்" எனவும், "உருத்திரனு ரணன்முதலோ ரிரு
தயத்திற் சாட்சியா யுறுவான் யாவன்" எனவும், "உமைபாகன்
பிரசாதத் தாலத்திநாத்தியெனு முலகம்யாவு, மமைவாரு நிர்க்குண
வா நந்தசொரூபமே யாகித்தோன்றும்" எனவுங் கூறியிருக்கின்
றது. சாமசாகோபநிடததாற்பரியமுணாத்தவத்தியாயத்தில்,

'வயங்குசிவப் பிரசாத முண்டாகி லெவ்வுயிரு மருவு ஞானம்
பயங்குலவு முகின்மேனி நாரணனும் யானுமற்றைப் பண்புளோருந்
தயங்குசிவ ஞானமோ ருயிர்க்களிக்கத் தக்கசுதந் தரரோ யல்லம்
நயங்குலவு கிரமசா தகர்களா யேயிருப்பே நன்மை மிக்கீர்."

எனவும்,

'இத்தகு தெய்வச் சிவப்பிரசாத மிளமதி சூடியபெருமா
னுத்தம வுமையா ளிவரனுக் கிரக முற்றிடிற் கிடைப்பதாலமரீர்
மைத்தகார் மேனி மாயவன் றன்னை மலருறை யென்னைநாடோறு
மொத்தபே ரன்பிற் றியானஞ்செய்தாலு முத்தமக் கதிமருவாதே."

எனவும்,

'ஆதலின் முத்தி விரும்பினோ ரென்னையு மாழியங் கரலத் தனையுங்
காதலியாமற் பரசிவ னடியே கருத்துறத் தியானிக்க வேண்டுஞ்
சாதலையடையாத் தன்பிரசாதஞ் சார்ந்தவன் பாலென்றும் பரமன்
மேதகுமூர்த்திசொருபமாயான்மசொருபமாய்விளங்கிவைகுவனால்."

எனவும்,

பிரசங்கித்திருக்கின்றது. இதுகாறுங்காட்டிய பிரமகீதை வசன
ங்களால் பிரமன்முதலிய மூவருஞ் சர்வாநந்தமயனாகியும்,
அவரது ஹ்ருதயத்தில் சாக்ஷியா யெழுந்தருளியிருப்ப
வனாகியும் விளங்கும் உமாநாதனது பிரஸாதத்தையேபெற்றி
ன்புறுகின்றாரெனவும், சிவப்பிரஸாதமே ஞானத்தைப்பயப்
பதன்றிப் பிரமன்-மாயன் முதலியோர் ஞானமளிக்க யோக்

யாகாமையால், சிவனையும், உமையையுமே ஆச்சிர ஞானத்தையும், மோக்ஷத்தையும் யாவரும் பெறற்குரியா னவும், மோக்ஷாபேக்ஷையுடையவர்கள் பிரமன் [illegible] தலினோரைத்தியஜித்துச் சிவனையே தியானித்திடின், அவ் வன் ஆன்மசொருபமாகிய ஞானவடிவினையும், அந்த த்தாலாகிய சித்கனவடிவினையும் அநுபவவேத்யமாக னெனவும் வெளிப்பட்ட துணர்ந்தவாகள் நமதுமாயாவாதக ளியார் கண்டுபிடித்த பிரமகீதையா லவருக்கொரு சாதகமு முண்டாகவில்லையென்று துக்கியாமற்போகார.

இனிப் பகவத்கீதையிற்காட்டிய வசனம் கண்ண டையது. கண்ணனே விஷ்ணுவினது அவதாரம். விஷ் வோ திரிமூர்த்திகளிலொருவா. திரிமூர்த்திகளோ காரிய யாவிசிட்ட சைதன்யங்கள். காரியமாயாவிசிட்டசைதன்ய களோ நமதன்பரது சித்தாந்தபபடிக் கைவிடத்தக்கன. இ ஞல் கைவிடத்தக்க காரியப்பிரமங்களி லொருவராகிய வி ணுவும், அவருடைய அவதாரமாகிய கண்ணனுங் கைவி தக்கவரேயாயினர். இவர் பிரஸ்தாபித்த கண்ணன் காரிய பிரமத்தி னுருவமாக வெளிப்பட்டமையா லிவரைப் பக்தா நுக்கிரகாரத்தம் அருளுருக்கொண்டு வெளியாகாநிற்குமெ றுரைத்த காரணபபிரமத்தி னருளுருவென்ற லடாது. யுக தோறும் நான் பிறக்கின்றேனென்று கணண னுரைத்த தவறு. ஏனெனின், யுகந்தோறும் பிறப்பவா கண்ணனன்று அவ்வாறு பிறபபவர் விஷ்ணுவாகவேண்டும். அவ்விஷ்ணுவா லுகந்தோறு மெடுக்கு மவதாரங்களிற் கண்ணனெருவர். இ ஞற் கண்ணன்கூறிய துண்மையன்று. உபசாரம். இந்தக்கண் ணன் கூறுமிடத்தும் "என்மாயையினுற் பிறந்திடுகின்றேன்" என் றமையா லப்பிறப்புகளை மாயாவுருவங்க ளென்பதேயன்றி யருளுருவங்க ளென்பதற் காதாரங்காணும். இவ்வலம்பா விதங்களை நோக்குவார் நமதன்பர்தேடிய பகவத்கீதாவசனத் தைப் பிரகிருதோப யுத்மான சாதகமாகாதெனத் தள்ளப் பின்னிடாரென்க. இவர்தேடிய வாக்கியத்தில் "சாவாதுபிற

தனிமுதலா யிருந்த நான்" என்று கண்ணன்கூறியது அக் ண்ணனைப் பரமான்மாவாக வுணர்த்துமெனின், எஜுர்வே ம், சித்வல்லியில் " நான் பிராணனுகவிருக்கிறேன், அறிவுமய ான ஆத்மாவாயிருக்கிறேன், ஆயுளை யமுதமாக வுபாசியுங்கள்" ன்று இந்திரனுடைய பிரசங்கங் கேட்கப்படுகின்றது. அவ் ந்திரனுற் சொல்லப்பட்ட பிரஹ்மபாவத்தினுடைய வுபதே ப்படியே கண்ணன்கூறிய பிரஹ்மபாவத்தையு மறியவேண் யது. இவர்களைப்போலவே " நானேமநுஹ்ருதயாதிகளிலிருக் ன்றேன்" என்று வாமதேவரிஷியுங் கூறி யிருக்கின்றனர். ன்றியும்,கண்ணன் " தமேவசாத்யம் புருஷம் ப்ரபத்யே" என் ஆதிபுருஷனுகிய சிவனிடந் தான் பிரபத்திசெய்ததும், ஈச்வரஸ்ஸர்வபூதாநாம்" என்றுதொடங்கித் தனக்கு வேறாகிய ரமேசுவரன் சர்வபூதாந்தராத்மாவாயிருக்குந் தன்மையைப் ரகாசப்படுத்தினதுமாகிய கலங்களைக் கீதாசாஸ்திரம் போ க்கின்றது. அன்றிக் கண்ணன் சிவபூஜாநிஷ்டனுயிருந்த விப ம் பாரதம், துரோணபர்வம், கைலாசயாத்திரா சந்தர்ப்ப தில் பிரகாசம் பண்ணப்பட் டிருக்கின்றது. பீஷ்மபர்வம், தோபதேச ஸந்தர்ப்பத்தில் நானே பரமாத்மா என்று பிர தாபித்த கண்ணன், அடுத்த துரோணபர்வத்தில் சிவபூசை சய்து சிறந்தமை கூறப்பட்டமையால், பகவத்கீதையினுற் ார்ந்த கண்ணன்மகிமை யாவும், அவர் சிவபக்த சிரோமணி ாயிடும் அருணலத்தையே ஆதரியாநிற்குமென்க. இத்யாதி ரபல நிச்சயங்களைத் தெளிந்தின்புறுவோர் நமதன்பரது தோபதேச விபரீதத்தைத் துச்சமென்றே தொலைத்திடுவ ான்க. விரிக்கிற் பெருகும். இதுநிற்க.

இவர் திருவாய்மொழியிற் காட்டிய பாடல் யாம் அநாத கத் தக்கதேயாயினு மதனையு மங்கீகரித் தொருவாறு சமா ன முரைப்பாம். இதில் " துயரின்மலியும் மனிதப் பிறவியிற் ான்றி" என்று கூறப்பட்டிருக்கின்றது. இதனை யருளுரு வன்றுகோடல்கூடாது. தெய்வம மனிதப்பிறவியெய்தாது. றவா எய்திடின், தனது தெய்வத்தன்மை மாறும். பிறந்தி

றங் தெய்த்தலில்லாத பரப்பிரமம் கண்ணனாகப்பிறந்திறந்
ய்த்ததெனல் பெரும்பேதமையே. துயரில் சுடரொளிதுயரி
மலியும் மனிதப்பிறவியிற் ரோய வாவசியகமின்றாந் தன்
மை யுய்த்துணரார் "இருவினைக்கு முரியவனாகிப் பிறந்து பமெ
மை யிறைவனென்று, சுருதிமுறை யிடுமாயி னுமுமரி யாகுமென
சொற்றா லெண்ணே" என்னும்பாடலைச் சிந்திக்க வுரியாரொன்
"துயரில் சுடரொளி - துயரின்மலியும் மனிதப்பிறவியிற் ரோன்றி
என்னுமிந்தப்பகுதியைக் கண்ணனிடமாத்திரமேயன்றி அ
த்யோபாதிகதராக வெளிப்பட்ட வொவ்வொரு சீவரிடத்
மே மாயாவாதிகள் சமர்த்தித்துக்கொள்ளலாம். இனித் தி
வாய்மொழிசெய்தார் விஷ்ணுபக்தியிற் சிறந்தவராகவி னவ
து தெய்வத்தின்றலையிலேறிய வழுக்கை இனிய மணமென
சாதித்த லவரதியற்கையென்க. அவரது மதமும், அதனை
யவலம்பித்த நமதன்பரது மதமு மவலமாயிட யாமிழை
தவுபநியாஸமுணர்ந்தவர்கள் பிரமகீதையும், பகவதகீதை
யும், திருவாய்மொழியுந் தமமின்முரணிப் பூர்வபட்சியானை
தெருவிலே தியங்கவிட்டனவென்று கூறப் பின்னிடாரொன்
இந்த நுட்பமறிந்தவர்கள் "ஏகநாயகன் பதங்கள் போற்றி"எ
னும்மூலத்திற்கு நமதன்பர் அரண்யசஞ்சாரஞ்செய்துகொ
டுவந்து சேர்த்த சாதகங்க ணிஷ்பலமாயினவென்றே நூற்
வர். விரிக்கிற்பெருகும்.

நமதன்பர் முடிவாகக்கூறிய அஞ்ஞவதைப்பரணி மு
யாவாதநூல். இதனைச்செய்தவா தத்துவராயர். இவரது
யாவாதநூலே யாம் மதிக்கவும், அதற்கு ஸமாதானஞ் சொ
லவு மவசியமேயில்லை. பிரமகீதையை மாயாவாதமாகக்கெ
ண்டே யிவர் மொழிபெயர்த்து விரித்தனர். இது மாயாவா
மாகாது. மாயாவாதிகள் மயங்க விடந்தருவதொன்றும். எ
ஙனமெனின், இப்பிரமகீதை சூதசங்கிதையி லுள்ளதென்
முன்னரே கூறினம். அச்சூதசங்கிதை காந்தம் ஆறு சங்
தையி லொன்று. இது சிவபுராணம் பத்தனுள் ஒன்று. சிவ
ராணமாகிய சூதசங்கிதை சிவபாரம்யத்தை விளக்குவ

ஸஹஜம். இது சிவேதரமானவைகளைப் பரமென்று யாண்டுஞ் சாதியாது. சிவன் சிற்சடப்பிரபஞ்சங்களைத் திருமேனியாகக்கொண்டு விளங்கலால், அத்திருமேனிகளையே அவைகளையுடைய பரனென வபேதம்பாராட்டி அது விளக்குமென்க. தேகம் - இந்திரியம் - பிராணன் - அந்தக்கரணம்-ஆத்மா என்னும் பொருள்களிற் சிவன் நிறைந்திருத்தலால், தேகமே சிவமெனவும், இந்திரியமே சிவமெனவும், பிராணனே சிவமெனவும், கரணமே சிவமெனவும், ஆத்மாவே சிவமெனவும் உபசரித்தல் குற்றமாகாது. அன்னமயமுதலிய பஞ்சகோசங்களையும்,ஆத்மாவையுஞ் சிவமென்று வேதங்கள் கூறுவது பிரசித்தியாகையால், கோசங்களையும் கோசவியதிரிக்தமாகிய வஸ்துவையுஞ் சிவமென்றிடுதல (பிரமம் என்னும் பரியாயநாமமுடைய) சிவம் அவற்றினுள்ளும் வெளியுங் கலந்தியங்கு மொருமை நோக்கியென்பது யாம் பலதரஞ்சொல்லவேண்டுமோ? விஷ்ணுவைப் பிரஹ்மம் என்று வேதங்கூறியதும இவைபோன்றதேயாம்.விஷ்ணுவைப் பிரஹ்மம்என்று கூறுங்கால, அவர் பிரமமாயிடுதெலெவ்வாறு உபசாரமாமோ, அவவாறே தேகமுதலிய பொருள்களையும், ஆத்மாவையுந் தெய்வங்களென்று கூறியதும் உபசாரமாகத் தட்டில்லை. இவ்வுண்மை தேர்ந்தவர்கள் ஆத்மாவே பிரஹ்மம் அலலது சிவம என்று சூதசங்கிதை கூறியது உபசாரமென்றே தெளிந்திடுவர். இவ்வாத்மாவினிடத்தி லது சமர்த்தித்த பிரஹ்மத்வம் உபசாரமென்பது நன்குபுலப்படுத்தவேயன்றோ உமாஸஹாயத்வாதி லிங்கங்களையுடைய பரமசிவனையே பரமாத்மாவென்று பலவிடங்களி லினிது பிரகாசம்பண்ணி யிருக்கின்றது? இனி விஷ்ணுபுராணத்தில் விஷ்ணுவையும், பிரமபுராணத்தில் பிரமனையும், அக்னிபுராணத்தில அக்னியையும், சூரியபுராணத்தில் சூரியனையுந் தெய்வங்களென்றுகூறியிருப்பதும் எமதுபட்சத்தை நிறுத்தும். பல தெய்வங்களை யொப்புவது அஸங்கதமாகையாலும், “ஸ்தோமம்வா அத்யருத்ராய ஸர்வஸேக்ஷயத்விராய நமஸாதிதிஷ்டந” என்னுஞ் சுருதியான

று தேவர்களைப்பார்த்து உங்களுக்கு நான் செய்த நமஸ்கார ங்களைச் சிவனுக்குச் சேர்த்துவிடக் கடவீர்களாக வென்று கூறினமையாலும், "அஹம்ஹி ஸர்வஹவிஷாம் போக்தாசைவ பலப்ரதঃ, ஸர்வதேவ தநுர்ப்பூத்வா ஸர்வாத்மா ஸர்வஸம்ஸ்திதঃ" என்னும் புராணவசனம் சாவகதனுகியும், சர்வசொரூபியாகியும, அக்னிஸோமேந்திர விஷ்ணுவாதி சர்வதேவ தநுர்பபூதனுகியும், சர்வமுக்யஹவிர்த்திரவியங்களுக்கும் போக்தாவாய் நானே பலப்ரதா,தாவாகின்றேன என்று சிவனுரைசொன்ன,தாகத் தெரிவித்தமையாலும் சாவபுராணஙகளாலுஞ் சிவனேபரமாத்மா என்று துணியப்பட்டமையே சித்தம. விஷ்ணுவாதிகளுக்கே பிரஹ்மதவம் உபசாரமாகிறபோது ஆத்மசப்தபரியாயமுடைய ஜீவனைசூதசங்கிதை பிரஹ்மமென்று உபசாரமாகாமலுணைப்பாவதெங்ஙனம? உபபிரஹ்மணமாகிய புராணஙகளைபபோலவே அவைகளுக்கு மூலமாகியவேதத்தின் றுணிவுமாம. இவ்வளவறிந்தபேர் சூதசங்கிதையினது ஹ்ருதயத்தை யுணர்ந்து பசுஞானத்திற படிந்திடாமல் சிவோபாசனையிற் செறிந்து இன்புறுவரெனக. இதற்குச் சூதசங்கிதையைத் தமிழ்நூலாக வகுத்த பெரியாரோ சானறென்க.

"மறிதிரைக் கடல்சூ ழுலகிடை யரிதம
மானிடப் பிறப்பென வறிந்துங்
குறிபெறு மவற கறந்துகை யிளைப்பார்
குழாத்தினை மறந்துநண் ணற்க
செறிதரு முறையிற் சென்றுவே தாந்தத்
தெளிவெனுஞ் சைவசித் தாந்த
நெறியினை யடைந்தோர் குழாத்தினைப் பிரியா
நிலையுறக் கடவதென் னெஞ்சம்."

என அப்பெரியார் கூறியதன்றியும்,

"விரிதிரைசூ ழுலகுமுதல் யாவுமினி தளித்தருளு
மேன்மை பூண்ட
கரியவனும் யாம்பரமென் றெண்ணியதற் களவில்பிழை
கலந்த தென்று

ஓரியபிறப் பிறப்பொழியாச் சீவர்சிலர் யாம்பரமென்
றுரைப்ப ரந்தோ
தெரியினிவர் தமைகிரய முமிழாதெஞ் ஞான்றுமிது
திண்ணந் தானே."

என்று (திருமா லகம்பாவநீங்கி ஆநந்தாடந்தரிசித்த வத்தியாயத்தில்) தமதுண்மையைப் பிரகாசப்படுத்தியிருக்கின்றனர். இவ்வாறு தெளிவதே நடுநிலையுடையார் துணிவென்க. சிவனைப் பரம என்றது உண்மையும், சீவன்முதலிய வேனைப் பொருள்களைப் பரம் என்றது உபசாரமுமாமென்க.

இதனை

"பூதங்க ளல்ல பொறியல்ல வேறு புலனல்ல வுள்ள மதியின்
பேதங்க ளல்ல விவையன்றி நின்ற பிறிதல்ல வென்று பெருநூல்
வேதங் கிடந்து தடுமாறும் வஞ்ச வெளியென்ப கூடன் மறுகிற்
பாதங்க ளோவ வளையிந்த ஞுதி பகர்வாரை யாயு மவரோ."

என்னும

ஆன்றோர் திருவாக்கும் வலியுறுத்தும். வேதமானது பூதமே பரம் என்று முதற்கட் கூறியதை மறுத்தற்பொருட்டுப் பூதங்கள்லலவெனவும், பின்னர் இந்திரியங்களேபரமென்று கூறியதை மறுத்தற்பொருட்டுப் புலனல்லவெனவும், பின்னர்ப் பிராணாதிகளே பரமென்று கூறியதை மறுத்தற்பொருட்டுஉள்ளமல்லமெனவும்,பின்னர்க் கரணங்களே பரமென்று கூறியதை மறுத்தற்பொருட்டு மதியின்பேதங்க ளல்லவெனவும்,பின்னர் ஆன்மாவே பரமென்றுகூறியதை மறுத்தற்பொருட்டு இவையன்றி நின்ற பிறிதல்லவெனவும் பூர்வபட்சஞ் செய்தவாறறிக. ஆத்மாவரையில் பூர்வபட்சமாயினமையால் இனிச் சித்தாந்தப்பொருள் "கூடன்மறுகிற் பாதங்களோவவளையிந்தஞுதி பகர்வார்" என்று பிரதிபாதிக்கப்பட்ட சிவபரஞ்சுடரேயாம். இந்த நுட்பங்களை யுணர்ந்தவர்கள் சூதசங்கிதையிற் போந்த ஆத்மபரமான பரதத்வபோதங்க ளனைத்தும் "ஆத்மாந:பசுபதி:,' என்றசுருதிவசனப்படி அவ்வாத்மாவை யியக்கும் பசுபதியாகிய சிவபெருமானையே தெளிவிக்குமென்றறிந் தின்புறுமற்போகார். இதனை விச்சூதசங்கிதையி லடங்கிய பிரமகீ

தையுஞ் சிவனையுபசாரமாகவும், சிவனை யுண்மையாகவும் பரதத்வமாகச் சாதிக்குமெனவே யமைவுடைத்து. இதுகாறுங் கூறிய நியாயங்களால் நமது மாயாவாதியார் தேடிய பிரமகீதை-பகவத்கீதை - திருவாய்மொழி முதலிய பிரமாணங்களும், அப்பிரமாணங்களை யாதாரமாகக்கொண்ட அவரதுபிரசங்கமும் அவலமாயினவெனவே சித்தமாயிற்று.

நமதன்பர் சைவகிங்கையி லிறங்காமல் தமது ஏகாத்மவாதத்திற் கேற்றங்கூறிக்கொண்டு போவாரெனின், அவர் ஜோலிக்கு யாம் போகவிடமிராது. அவரது ஏகாத்மவாதத்தை யாமிப்போது புதுசாகமறுக்கவேண்டியதில்லை. பூர்வமே எம்பெரியாரவைக்கண் அவரது புன்மதம் துச்சமாயினது சிவஞானபோதபாஷ்யம், ஸ்ரீபாஷ்யம், திராவிடமஹாபாஷ்ய முதலிய பிரபலசாட்சிகளால் சாதுக்களறிவார்கள். ஆகையாலும், சிந்தாந்தசேகரம் - சமரசஞானதீபம் - சித்தாந்தபூஷணம் - உத்தமவாததூலவாதூலம் - குதர்க்கவாதவிபஞ்சிநி - ஆபாசஞான நிரோதம் முதலிய நூல்களால் யாமுங் கூடியவளாயி லவ்வபசித்தாந்தத்தைத் தடிந்திருக்கின்றோமாகையாலும் இன்னு மவ்வற்பமதத்தை யொருபொருளாக மதித்து விவகரிப்பது எமக்குக் குறைவாகவே யிருக்கின்றது. ஆயினும், நமது மாயாவாதியார் தமதுஞான மொருவராலும் பேதிக்கமுடியாதென் றெண்ணி யிறுமாந்திருக்கின்றனராகவி னதனையுங் கொஞ்சம் விசாரிக்க விசைந்தாமென்க. அப்படி யாமிசைந்தும் பூர்வபட்சியினது சொந்தசரக்கொன்றுங் காணேம். பழைய சுவடிகளிலிருந்தெடுத்துத் தமதுசுவடியிற் பரப்பிப் பிரதிட்டையை விழைந் திறுமாந்தனர். அவற்றுட் சில கூறுதும்.

## பூர்வபட்சம்.

"இன்னும் சாந்தோக்கியத்தில், சத்துரூபபரமாத்மாவினின்றும் அக்னி, சலம், பிருதிவி என்னும் இவை கிரமமாக வுண்டாயிற்றென்றும், தைத்திரியத்தில் ஆகாசம், வாயு, அக்

கினி, சலம், பிருதிவி என்னும் இக்கிரமத்தால் பஞ்சபூதங்கள் உண்டாயினவென்றும், ஓரிடத்தில் சர்வஜகத்தையும பரமேசுரர் சிருட்டித்தாரென்றும் முறைதெரிக்காது உற்பத்திகூறியிருக்கின்றது, வாஸ்தவமாகச் சகத்திருந்தால் அதனது உற்பத்தி அநேகபிரகாரமாக வேதஞ்சொல்லாது, அநேகபிரகாரமாகச் சொல்லியிருப்பதாற் சகத்தினுற்பத்திப் பிரதிபாதனத்தில் வேதத்திற் கபிப்பிராயமின்றாம், பின்னையாது! அதனபிப்பிராயமென்னில்? அத்வைதப்பிரமத்தை யறிவித்தற்பொருட்டுச் சகத்தை நிஷேதஞ்செய்வதேயாம். ஆகவின், மித்தையான சகத்தை யாதாவதொருவழியாக ஆரோபஞ்செய்ததென்க. எதுபோலெனின்? விநோதத்தி னிமித்தம மேலே கிளம்புதற்கு வாணமருந்தை யுள்வைத்துத் தாருவினுல் யானையுருவமைப்பவன் அதன் செவி, வால்முதலிய வவயவங் கோணிப்போமாயின், அவற்றை ஒழுங்குறச்செயயவேணடுமென்று முயற்சியாததுபோல வென்க.

சூத்திரகாரரும், பாஷியகாரரும் இரண்டாம் அத்தியாயத்தில உற்பத்திகூறுஞ்சுருதிவாக்கியங்களின் விரோதங்களைபபோக்கித் தைத்திரிய சுருதிகூறியபடி ஒரேவழியாகச்சகத்துற்பத்தியில் சர்வ உபநிடதங்கட்கும் அபிபபிராயமுளதென வருளிச்செய்தது எற்றிற்கோவெனின்? உற்பத்திவாக்கியங்கட்குப் பூர்வஞ்சொன்ன அபிபபிராயமறியாத மந்தவிஞ்ஞானையுடையோர்க்கு உபநிடதங்களில் நாநாவிதமாகச் சகத்துற்பத்திகூறியிருக்கின்றதைப்பார்த்துப் பிராந்தியுளதாமாகவின், அதை நிவிர்த்தித்தற்பொருட்டும், பிரமவிசாரத்தால யதார்த்தஞானம் உதியாதோர்க்கு லயசிந்தன நிமித்தமும் அங்ஙனம் அருளிச்செய்ததென்க. சகத்துற்பத்தி நியமமின்றென்பதை

"வான்முதலா மண்முதலா நீர்முதலாத் தீமுதலா
மற்ற வாயுத்
தான்முதலா மிப்படியே சிருட்டிதொறு மொரொன்று
தலைமை யாகும்

யானமுநலோ ரய்ன்பிருட்டி பிலேடையா யுனக்குரைத்தே
ணிந்த வாற்றன்
மேன்முதலா நியமமிதற் கொன்றாக விலதுபல
விதமாய்த் தோன்றும்."
என்னும வாசிட்டத்தானும் அறிக."

## சித்தாந்தம்.

சாந்தோக்யத்தில், அக்னி - ஜலம்-பிருதிவி என்பவை பரனிடத்தி னின்று முண்டாயின வென்றது திரிசியபூதங்களே. தைத்திரியத்தில் ஆகாசம்-வாயு-அக்னி-ஜலம்-பிருதிவி என்பவை பரனிடத்தினின்று முண்டாயினவென்றது திரிசியமும் அதிரிசியமுமாகிய பூதங்களே. பிருதிவி-அப்பு - தேயு என்பவை கட்புலனுக்கு விஷயமாகக்கூடிய திரிசியங்களும, வாயு-ஆகாசம் என்பவை கட்புலனுக்கு விஷயமாகாத வதிரிசியங்களுமாம். பூதங்களைந்தில் இரண்டு அதிரிசியங்களும்,மூன்று திரிசியங்களுமாதல் சர்வசம்மதம். இவ்வாறு தெளிவார்க்குப் பூதோத்பத்தியை வேதங்களொன்று சொன்னபடியொன்று சொல்லவில்லை யென்பவரது போதம் மலத்தாற் குழம்பினதாகவே துணியப்படும். இக்குழப்ப ஞானியார் "ஸர்வஜகத்தும் பரமேசுவரனிடத்தினின்று முண்டாயின" என்று வேதம் மற்றோரிடத்திற் கூறியதும் முன்னிரண்டு சுருதிகளை விரோதிக்கின்றதாக அபிப்பிராயப்பட்டிருக்கிறார். சர்வஜகத்தும் என்றது தநுகரணபுவன போகங்களே. இவற்றை விரிக்கின், பிருதிவிமுதனாததத்துவமீறான முப்பத்தாறு தத்துவங்களாக வெளிப்படும். இவற்றுள், மூன்றாகவும், ஐந்தாகவுங் கூறப்பட்டபூதங்கள் ஆத்மதத்வ மிருபத்துநான்கனுளடங்கும். ஒருபுருடனைப் பிரஸ்தாபித்து இவனுக்கு மூன்றுகுழந்தைகளென்று ஒருவனும், ஐந்து குழந்தைகளென்று மற்றொருவனுஞ் சொன்னதாக வொப்புவோம். மூன்று குழந்தைகளுண்டென்று சொன்னவன் பெண்குழந்தைகளை. ஐந்து குழந்தைகளுண்டென்று சொன்னவன் பெண்குழந்தைகள் மூன்று, ஆண்குழந்தைகளிரண்டு என்பதுணர்ந்து. இவ்வி

ருவர்கூறினவும் ஒன்றையொன்று விரோதித்தில். வேறொரு சந்தர்ப்பத்தில் இவனுக்குக் குழந்தைகளுளவென்று ஒருவன் சொன்னதாகவொப்புவோம். இதுவும் அவிரோதமேயாம். ஒருவன் மூன்றுகுழந்தைகளென்றும், மற்றொருவன் ஐந்துகுழந்தைகளென்றும், வேறொருவன் மொத்தமாய்க்குழந்தைகளென்றும் ஒருவர்போலொருவர்சொலலாமல் பேதப்பட்டமையால, இவனுக்குக் குழந்தைகள்பிறக்கவில்லையென்பதையே அவாகள் தெரிவித்தார்களென்று எந்தமூடனே அபிப்பிராயப்படக்கூடும்? இவருள், முறைதெரிவிக்காமலிவனுக்குக் குழந்தைகளுணடென்றொருவன் சொன்னால், அவன் குழந்தைகள் முதலேயில்லையென்று சொன்னதாக யாவரொப்புவர்? அவனேயாவது, மற்றொருவனாவது இவனுக்கு ஐந்துகுழந்தைகளுண்டென்று சொன்னால, அது இவனுக்குக்குழந்தைகளுண்டென்று முறைதெரிக்காமல் முன்பு சொனனதோடு விரோதிக்கின்றதெனவாவது, அதனாலிவனுக்குக் குழந்தைகளில்லை யென்பதையே யின்னோர்தெரிவித்தாரெனவாவது யாவரோகொணடு குழம்புவர்? மூன்றுகுழந்தைகளுண்டெனறு சொன்னவன் ஐந்துகுழந்தைகளுண்டென்று சொன்னவனோடு விரோதியானோவெனின், அவ்விருவருமொருகுடும்பத்திலொத்துவாழுஞ் சகோதரராயிருப்பி னவ்விருவர்சொல்லும் விரோதிக்கவிடமில்லை. விசாரித்தால் விரோதமின்மைவெளியாம். இவ்விரோதமின்மையை முன்னரே யாம் விளக்கிக்காட்டினோம். இவ்வுபமானவாயிலாகப் பூதோத்பத்தியைக்கூறுஞ் சுருதிகள் ஒன்றோடொன்று விரோதியாமனிலைத்தனவாகலின், இவற்றினதுஹ்ருதயத்தைக்கண்டுகூறிய பூர்வபட்சியினதறியாமைக்கே விவேகிகள் துக்கிப்பரொன்க.

நமதன்பர் அத்வைதத்தைக் கெட்டியாகப்பிடித்துக் கொண்டாராகையா லிவ்வளவுதிப்படுகிறார். இவ்வத்வைதசப்தத்தைப் பின்னர்விசாரிப்போம். இவரது அத்வைதத்தைச்சாதித்தற்பொருட்டு வேதம் உலகத்தைநிஷேதஞ்செய்தது என்றிவர்கூறியதும் விந்தையேயாம். இவ்வேதம் அத்

வைதப்பிரமத்திற்குஅபின்னமா? பின்னமா? அபின்னமென்பாராயின், வேதம் சப்தஜாலங்களடங்கிய வொலிவடிவமாகிய ஜடமாகையாற் பிரமும் ஜடமாகியழியும். பின்னமென்பாராயின், உலகத்தைப்போல நிஷேதபதார்த்தமாயொதுங்கும். நமதன்பரது சித்தாந்தம் வேதத்தை அபின்ன மென்றற்கிடங்கொடாது. உலகத்தைப்போல் வேதமு மத்யாஸமென்றற்கே ஆதரவாயிடுமென்க. உலகத்தைப் பிரதிஷேதிக்கவந்த வேதமு மவ்வுலகத்தைப்போல் பிரதிஷேதிக்கப்படுமாயின்,அவ்வேதம் பிரமாணமாயிடுதல்யாங்ஙனம்? வேதம் பிரதிஷேதிக்கப்படமாட்டாதெனின்,பிரமத்தைப்போலதுவுமொருமுதலாகி அத்துவிதப்பிரமம் ஆடலபட்டழியும். இந்தவிரோதத்தால," வாஸ்தவமாகச் சகத்திருந்தால் அதனது உற்பத்தி அநேகப்பிரகாரமாக வேதஞ்சொல்லாது" என்று பூர்வபட்சியார்பிரஸ்தாபித்தது அஸங்கதமாயிற்று. இப்படிச் சொல்வதைக்காட்டிலும் "வாஸ்தவமாக வேதம் பிரமாணமாயிருந்தா லொன்றி லொன்று விரோதமுண்டாகச்சொல்லாது"என்று ஏன்சொலலக்கூடாது? பூர்வபட்சியினது குழப்பத்தைநோக்கி யாமிவ்வாறு கூறியதன்றி, வேதம் குழப்பமுண்டாகக் கூறினதில்லையென்பதே யெமது துணிவு.

இனி அத்வைதப் பிரமத்தை யறிவித்தற்பொருட்டு வேதம் ஜகத்தை நிஷேதித்ததென்றார். நிஷேதம் நமதன்பரது கைச்சரக்காய் முடிந்ததன்றி, வேதத்திலஃதொன்றுங்காணோம். 'இல்லாததைக் கற்பித்துரைத்த விவரது போதமே நிஷேதிக்கத்தக்கது. ஜகத்தோடு நிஷேதமாயொழியத்தக்க பொய்வடிவமாகிய வேதத்திற்கு மெய்யாகிய அத்வைதப்பிரமத்தை யறிவிக்கத்தக்கவதிகாரங்கிடையாது. பொய்யாகிய வேதம் காலைக்கிளப்பிக்கொண்டபடியே யன்றோ அதிற்போந்த அத்துவிதப்பிரமமும் அஸத்தாயழிவுபெறும்? இவற்றைநோக்குழிப் பூர்வபட்சியினதுமதம் கேவல மற்பவிலையினதாகவே முடியும். இவரிவ்வளவி லமையாமல் "மித்தையான சகத்தை யாதாறுமொருவழியாக (வேதம்) ஆரோபஞ்செய்ததென்க" என்று

கூறியதும்அஸங்கதமே. மித்தையான சகத்தை ரஜ்ஜு—ஸர்ப்பம்,மருமரீசிகைபோல்வனவாக ஆரோபித்தலே யமைவுடைத்து. இவ்வாறன்றி ஆகாசம்-வாயு-அக்னி-சலம்-பிருதிவி என்னும் பஞ்சபூதங்கள் பரனிடத்தினின்றும் பிறந்தனவென்றும் சர்வஜகத்தும் பரனிடத்தினின்றும் பிறந்தனவென்றும் ஒவ்வொன்றற்கும் நியாயம்விளங்க முறைபிறழாமல் வேதங் கூறியதை யாரோபமென்ற நமதன்பருணாயே யாரோபமாயதென்க.

இவரதாரோப ஸமர்த்தனத்திற் கோருபமானமுங்கூறினார். வாணமருந்தை யுள்வைத்துத் தாருவினால் யானையுருவமைப்பவன் அதன் செவி, வால்முதலியஅவயவங்கோணிப்போமாயின், அவற்றையொழுங்கு செய்வனோ? என்றிவர்காட்டியவுபமானம் இவரது உபமேயத்தோடொட்டாதொழுங்குகின்றது.எங்ஙனமெனின்,யானையுரு வமைப்பவன் செவியிருக்கவேண்டியவிடத்தில் வாலையும்,வாலிருக்கவேண்டியவிடத்திற் செவியையும் அமைப்பனோ? இப்படியமைப்பினன்றோ யானையைப் பிரதிஷ்டித்தற்கும், இதுபோல வுலகத்தைப்பிரதிஷ்டித்தற்கு மிவருக் கநுகூலமுண்டாகி வேதமொருவாறுஆரோபித்தது என்னுமிவரது மதுரவாசகம் மணமபெறும்? செவியிருக்கவேண்டிய விடத்திற் செவியையும், வாலிருக்கவேண்டியவிடத்தில் வாலையும், காலிருக்கவேணடியவிடத்திற் காலையும்,தலையிருக்கவேண்டியவிடத்திற் றலையையும்,கையிருக்கவேண்டியவிடத்திற் கையையும்,ஏனையுறுப்புகளிருக்கவேண்டியவிடங்களில்அவ்வுறுப்புகளையும் முறைபிறழாம லமைப்பதே யானையுருவமைப்பவன் செயலாக, நமதன்பரிதனைத் தமதத்யாச வுலகுக் குவமையாகக்கொண்டது தவறேயாமென்க. உலகமுண்டாகவில்லை யென்பதற்கும்,யானையுருவத்திற் கோணியவுறுப்புகளையொழுங்குசெய்யவில்லையென்பதற்கும் பரஸ்பரம் பேதமுண்டு. வாணமருந்தையுட்கொண்ட(தாருவினாற்செய்யப்பட்ட) யானை தீப்பட்டழியுமாயின்,அது உலகம் சங்கரிக்கப்படுதற்கே யுபமானமாமன்றி, உலகமுண்டாகவில்

லேயென்பதற்கும், உண்டாகாதவுலகத்தை வேதமோருவாறு ஆரோபித்ததென்பதற்கும் உபமானமாகாது. இதுநிற்க.

சூத்திரகாரரும், பாஷியகாரரும் உற்பத்திகூறுஞ் சுருதிவாக்கியங்களின் விரோதங்களைப்போக்கிச் சகதுத்பத்தியில் சர்வவுபநிடதங்கட்கும் அபிப்பிராயமுளதென வருளிச்செய்தார்களெனவும், அவர்களவ்வாறருளிச்செய்தது பூர்வஞ்சொன்ன வபிப்பிராயமறியாத மந்தர்களுக்கு உபநிடதங்களிற் பிராந்தியுண்டாதலை நிவிர்த்தித்தற்கும், பிரமவிசாரத்தால் யதார்த்தஞானமுதியாதோர்க்கு லயசிந்தனமுதிப்பித்தற்குமே யெனவும் நமதன்பர் பிரசங்கித்திருப்பதால அதனையுங் கொஞ்சம்யோசிப்பாம். சூத்திரகாரர் வியாசர். அவரோடு இவரது பாஷ்யகாரராகிய சங்கராசாரியரைச் சேர்க்க இவருக் கதிகாரங்கிடையாது. சங்கராசாரியரது அபிப்பிராயத்தைவிரோதித்த பாஷ்யகாரர் பலருளராகலின், பாஷ்யகாரரென்று சங்கராசாரியருக்கே சிறப்புப்பெயர்கூறியது கூடாது. இவரதபிப்பிராயமே சூத்திரத்திற் குரியதென்றலுமேலாது. இதனுண்மையை முன்னரே யாம்பரிஷ்கரித்திருக்கின்றேம். ஆகையா லிவர்பாஷ்யகாரரொன்று கொண்டாடிய சங்கராசாரியரது பிரஸ்தாபம் சாதுக்களுக்கு வேம்பேயாகியது. சூத்திரகாரர்மாத்திரமே யாவரும்போற்றத்தக்கவர். இவரோடு சங்கராசாரிய ரொத்துவாழாதவரென்பதே யெமதுகருத்து. இத்தகையோராயினும் அவர்சகதுத்பத்தியில் சர்வவுபநிடதங்கட்கு மபிப்பிராயமுளதெனக்கூறினாரன்றே இதனை யிப்படியேகொள்ளாது நமதன்ப ரிதற்குமேலு மொருவியாக்யானஞ்செய்தவா றென்னை? இவரது வியாக்யானம் இவரது சொந்தமேயாயினும், அல்லது சங்கராசாரியரது கருத்தை யநுசரித்ததேயாயினுமாகுக. அதனை முன்னரே யாம் துலைத்துவிட்டோமாயினும், இன்னுங் கொஞ்சம் சொல்லுகிறேம்.

இவர் "பூர்வஞ்சொன்ன வபிப்பிராயமறியாத மந்தர்கள்" என்று பிரஸ்தாபித்திருக்கிறார். பூர்வஞ் சொன்னவபிப்பிரா

யமாவது: உலகமுண்டாகவில்லை யென்பதுணர்த்த வேத மொருவாறு ஆரோபித்ததே. இதனையறியாத மந்தர்களுக்கு உலகமுண்டாகவில்லை யென்று நியாயவாயிலாகச் சாதித்து அறியும்படிச் செய்வதைவிட்டுச் சர்வ வுபநிடதங்களுக்குஞ் சகதுற்பத்தியில் அபிப்பிராயமுண்டு என்று பிரசங்கித்தது என்னை? கொண்டது ஒன்று, கூறியது மற்றொன்றாக முடிந் தவருமை சால வழகுடைத்து. மந்தருக்கு உலகமுண்டு என்பதையும், மந்தரல்லாதார்க்கு உலகமில்லை யென்பதை யுஞ் சாதித்தது கூடுமெனின், இது அஸங்கதம். ஒரு மந்தனுக் கும், மந்தனல்லாத வொருவனுக்கும இரண்டும், மூன்றுஞ் சேர்ந்த மொத்தத்தொகையை யொருவன் தெரிவிக்கப் புகுந்த தாக வொப்புவோம். இரண்டும், மூன்றும் ஐந்து என்று ஒவ் வொருவிரலாக விடச்செய்து தெரிவிப்பதே மந்தனுக் குணா த்துமவிதம. கைவிடச்செய்யாமல இரண்டும மூன்றும் ஐந் து என்று தெரிவிப்பதே மந்தனல்லாதானுக் குணாத்தும் விதம. யாருக்குணர்த்தினும் இரண்டும மூன்றும் ஐந்தென்ப தேயன்றி வேறு ஆகாது. சுருதிகளினுடைய ஸமர்த்தகமு மிவ்வாறே செய்யத்தக்கது. இப்படிக்கொள்ளுங்கால், நமத ன்ப ரிரண்டு முடிவுகளை முறையேயிரண்டதிகாரிகளுக்கு ஆ வசியகமாகத் தேடிச் சுருதிகளை ஸமர்த்தித்து, உலகமுண்டு- உலகமிலலை யென்று சாதிக்கப்புகுந்தது அவரது விபரீதமெ ன்றே யெண்ணத்தக்கதாயிற்று. தாமகொண்டதே தக்கதெ னின், அதனைச் சுருதிவாயிலாக நிரூபித்தல்வேண்டும். சுரு திக ளுலகமுண்டென்பதற்கே யாதாரமாயின. உலகமில்லை யென்பதற்குப் பூர்வபட்சியினது குயுக்தியே யாதாரமாகி யது. சுருதியுத்திக ளொவ்வாதபோது சாதுக்கள் விரஸமாக வே கொள்வார்கள். சுருதிக ளுலகமுதித்தன வென்பதற்கு ம், பூர்வபட்சியார் தேடிய குயுத்தி உலகமுதிக்கவில்லை யெ ன்பதற்கு முபகாரமாயினமையால், நமது மாயாவாதியாரது பட்சம் நிஷ்பலமாயிற்று. உலகம் பரனிடத்தினின்றுந் தோன் றியது என்று சுருதிகள் கூறியதற்கே யெமது யுத்திக ளுபகா

ரமாயினமையால், எமது பட்சத்துக்கே அந்தச் சுருதிகள் சாதகமாயின. அதனால், (சுருதிசித்தமாகிய) உலகந்தோன் றியபட்சம் சாதுக்களுக்கும், (சுருதி விலக்காகிய) உலகந தோன்றாதபட்சம் அசாதுக்களுக்கும் சம்மதமாயினவென லே தீர்மானமாயிற்று. இதுநிற்க.

நமதன்பர் "பிரமவிசாரத்தால் யதார்த்த ஞானமுதியா தோர்க்கு லயசிந்தன முதிப்பிக்கும்பொருட்டும் உலகமுண்டென்று கூறிய சுருதிகள் ஸமர்த்திக்கப்பட்டன" எனவொன்று கூறினுரன்றோ? இதுவும்அஸங்கதமேயாம. உலகமுதித்தலையொப்பாத இவர் யதார்த்தஞானமுதித்தல்,லயசிந்தனமுதித்தல் முதலிய பலதோற்றங்களேப்பிரஸ்தாபித்தது யாங்ஙனம ? உதித்தலெனபது முன்மறைந்திருந்தவொன்று பின்னாக்காணபபடுதல். உலகம் காரியரூபமாக வெளிபபட்டதையே உலகமுண்டாகியது என்று மேலோர கூறுவர். காரியமாய் வெளிப்படுவதற்குமுன் காரணமெனனும்பெயாபூண்டு விகாரமின்றி யிருந்ததென்பதே துணிவு. ஒவ்வொரு தோற்றமு மிவ்வாறே கொள்ளத்தக்கது. உலகத்தோற்றம் பொய்யென்று கூறினவர் ஞானமுதித்தல்,லயசிந்தன முதித்தல என்பவைகளை மெய்யென்று பிரசங்கிக்கவந்தது யோசனையின் குறைவேயாமெனக. இவரது பிரசங்கத்தால் யதார்த்த ஞானமுதித்தலும, லயசிந்தனமுதித்தலும ஜகதுத்பத்தியைக் கூறுஞ் சுருதிகளை ஸமர்த்தித்தலாற்றுனே யுண்டாமென்று ஏற்பட்டமையால், ஜகதுத்பத்தியில் வேதத்துக் கபிப்பிராயமில்லையென்றுசாதித்த தமது சொந்தசித்தாந்தம் யதார்த்தஞான முதித்தலுக்கும்,லயசிந்தனத்திற்கு மேதுவாகாம லஸம்பாவிதமாயினதெனலே சித்தமாயிற்று. இவரது யதார்த்தஞானம யாது? பசுவாகியதன்னைப் பதியாகமயங்கலேயன்றோ? பாசமாகிய ஜகத்தைத் தானகமயங்கலேயன்றோ? பாசமாகியஜகத்தைத் தன்னிற்கற்பிதமென்று மயங்கலேயன்றோ? பாசமாகியஜகத்து வெறும்பொய்யென்று மயங்கலேயன்றோ? இவ்விபரீதத்தை அயதார்த்தஞானமென்றே சாதுக்களொதுக்

குவரென்க. இவர் யதார்த்தஞானமெனத் துணிந்த பகுஞானசித்தியால் உலகமில்லையென்று சாதிக்க முடியுமேயன்றி உலகமுண்டென்று சாதிக்குஞ் சுருதிகளை ஸமர்த்திக்க முடியாது. இதனால், இவரது சங்கராசாரியு மிவரு முலகமுண்டென்றுகூறிய சுருதிகளை ஸமர்த்தித்து, யதார்த்தஞான முதிப்பித்து, லயசிந்தனத்தை யுண்டுபண்ணினராக வென்பது வெறுங்கதையாய் முடிந்தது. விரிக்கிற்பெருகும்.

இனி யிவர் வாசிட்டச் செய்யுளொன்று வரைந்திருக்கின்றார். அதில் ஒருபிருட்டியில் ஆகாயம் முதலாகவும், ஒருபிருட்டியில் பிருதிவி முதலாகவும், ஒருபிருட்டியில் அப்பு முதலாகவும், ஒருபிருட்டியில் வாயுமுதலாகவும் பூதங்கடோன்று மென்று கூறப்பட்டிருக்கின்றது. இதனா லாகாயமுதலியன தோன்றவில்லையென்னு மபிப்பிராயத்தை வசிட்டர் இராமருக் குபதேசித்திலர். இந்த வாசிட்டத்திற் கூறியதும், முன் சுருதிகளிற்கூறியதும் அபிப்பிராயபேதமுடையன. எடுத்துக்கொண்ட சுருதிபேதங்கட்கு இவர் வாசிட்டத்தை யாதாரமாகத் தேடியதும் பொருந்திலது. ஏனெனின், ஆகாயம்-வாயு-தேயு-அப்பு-பிருதிவி யென்பவைகளை யொருசுருதி கூறியது. மற்றொன்று ஆகாயம்-வாயு என்று பதிரிபங்களை விடுத்துத் தேயு - அப்பு - பிருதிவி யென்பவைகளைக் கூறியது. இரண்டு சுருதிகளும் முறைபிறழாமலே யிருக்கக் காண்டாம். வாசிட்டத்தில் ஆகாயத்தை முதலென்றும், வாயுவை முதலென்றும், தேயுவை முதலென்றும், அப்புவை முதலென்றும், பிருதிவியை முதலென்றுங் கூறுத லிவ்வாறுகூறுஞ் சுருதிகளுக்கு விரோதமேயாம். ஆயினும், இந்தவேறுபாடுகளோரேகாலத்திற் பெறப்படாமல் வேறுவேறு காலங்களிற் பெறப்பட்டனவாக வாசிட்டங்கூறலா லிதற்கு யாம் தோஷங்கற்பிக்க வருகிலோம். ஒருசுருதியில் ஆகாயம் - வாயு - தேயு - அப்பு - பிருதிவிகளை முறைப்படுத்தி, மற்றொரு சுருதியில் அக்னி - ஜலம் - பிருதிவி - ஆகாசம் - வாயுவென்பவைகளை முறைப்படுத்தியிருக்குமாயின், சுருதிகள் முறைபிறழக் கூறினவென்

லும் வாதந் தலையெடுக்கும். அங்ஙனமில்லாமையாலும், வாசிட்டங் கூறிய முறை வேறுவேறு காலங்களுக்கு விஷயமாகின்றமையாலும், அங்ஙனமானவிடத்தும், முதற்சிருட்டியி லாகாயமே முதன்மையாகத் தோன்றியதென்று சுருதிக் கபேதமுண்டாக வது பிரகாசிப்பித்தமையாலும் பூர்வபாட்சியார் ஐகத்தைப் பிரதிஷேதித்து மிச்சாவாதத்தைப் பூர்த்திசெய்துகொள்ளக் கொண்டபேராசை விருதாவாய் முடிந்தது. இதுநிற்க.

இவரெடுத்துக்கொண்ட சுருதிகளி லொன்று பஞ்சபூதங்களையும், மற்றொன்று மூன்று பூதங்களையும் பிரஸ்தாபித்தனவன்றோ? இந்தப் பூதங்களுக்குத் தெய்வங்களாகப் பஞ்சகர்த்தாக்களும், திரிமூர்த்திகளும் பெறப்பட்டிருக்கின்றனா. இவ்விரண்டுவிதமும் ஸாமஞ்சஸமேயாம. ஐந்து கர்த்தாக்களென்றும், திரிமூர்த்திகளென்றும பேதமுண்டாயினமையாலின்னொருண்டாக வில்லையெனவாவது, இவ்வாறு வேதங் கூறிய திவர்களைப் பிரதிஷேதித்தற் கெனவாவது யாவரேனுமபிப்பிராயப் படுவாருண்டோ? இவைகளை யூன்றிவிசாரியாத குறையே நமதன்பர் பூதோத்பத்தியை நிஷேதிக்கவிடஞ் செய்ததென்க. இந்தப் பூதோத்பத்தியை யாமின்னுங்கொஞ்சம் விரித்து உண்மையைப் பிரகாசப்படுத்துவாம்.

பூதங்க ளைந்தென்று வேதாதிகள் கூறுகின்றன. ஆகாசத்தினின்றும் வாயுவும், வாயுவினின்றுந் தேயுவும, தேயுவினின்றும் அப்புவும், அப்புவினின்றும் பிருதிவியும் பிறந்தனவென்று கூறுஞ் சுருதிகளைப் பரியாலோசிக்கின், பூதங்களைந்து என்பது கெட்டுப் பூதம் ஒன்றே என்னுஞ் சித்தாந்தம கிலைபெறும். எங்ஙனமெனின், ஆகாசத்தினின்றும் வாயுபிறந்தது என்கையில் ஆகாசத்தின்காரியம் வாயுவென்பது சிறக்கும். அப்படியே வாயுவின்காரியம் தேயுவும், தேயுவின் காரியம் ஜலமும், ஜலத்தின்காரியம் பிருதிவியுமாம். இதனல், ஆகாசமொன்றே பூதமும், ஏனையவை பூதகாரியங்களுமாதல துணியப்படும். இது பஞ்சபூதப் பிரசங்கத்துக்கு விரோத

மாம். இனி யிதனுண்மையைப் பிரகாசப்படுத்துவாம். ஆகா சம வியாபகமும், அதில் வாயு வியாப்தியுமாம். வாயுவியாபக மும், அதிற் றேயுவியாப்தியுமாம். தேயுவியாபகமும், அதிலப்பு வியாப்தியுயாம். அப்புவியாபகமும்,அதிற் பிருதிவி வியாப்தியுமாம். அடுக்குப்பாத்திரங்களைப் பெரியதினின்றுஞ் சிறிய தையும், அச்சிறியதினின்று மதிற் சிறியதையும் முறையே யெடுத்தல்போல ஆகாசவியாபகத்திலிருந்து வாயுவையும், வாயுவின் வியாபகத்திலிருந்து தேயுவையும்,தேயுவின் வியாபகத்திலிருந்து அப்புவையும், அப்புவின் வியாபகத்திலிருந்து பிருதிவியையு மெடுத்தலே பூதங்க ளொன்றினின்றுமொன்று பிறந்தனவென்பதன் கருத்தாம். பஞ்சபூதங்களும் பஞ்சதன்மாத்திரைகளி னின்றும் முறையே பிறந்தனவென்பது சித்தமாகையா லப்பஞ்சபூதங்களி லொன்று மற்றொன்றிற்குக் காரணமெனவாவது, ஒன்று மற்றொன்றிற் பிறந்த காரியமெனவாவது கூறுவது கூடாது. வேதங்கள் பூதமொன்றே எனக் கூறிற்றில. அங்ஙனங்கூறின், ஆகாயமென்னு மொருபூதமே வாயுவாதி காரியங்களாயினவென வாதிக்கலாம், இதுகாறும் யாம் பிரவசனித்த தத்வார்த்தங்களை யுணர்ந்தால் வேதத்தில் விரோதவாக்கியங்க ளுளவென்னும் வாதம் நிகழாது. இனிப் பஞ்சபூதங்க ளோரோகாலத்தி லுண்டாயினவென்றும், அவை யொன்றன்பின் னொன்றாக வுண்டாயினவென்றுஞ் சுருதிகள் கூறு மபிப்பிராயத்தையும் ஸாதுக்கள் சுலபமாகவறிந்துகொள்ளக்கூடும். எங்ஙனமெனின், ஓரோகாலத்திற் பிறந்தனவென்பது பஞ்சதன்மாத்திரைகளிற் பஞ்சபூதங்கள் பிறந்தனவென்பதையும், ஒன்றன்பின் னொன்றாகப் பிறந்தனவென்பது ஒன்றின் மற்றொன்று அடங்கியிருந்த முறைப்படியே வெளிவந்தனவென்பதையு முணர்த்தும். இந்த வுண்மையால் வேதத்தில் விரோதபுத்தியுண்டாக விடமேயில்லை. இவ்வாறு தெளியாதார்க்கே மேல்வாக்கியங்களில் விபரீதமுண்டாகும். நமதன்பாது அபசித்தாந்தத்திற் கிடங்கிடைப்ப தரிதாகி அவரை யலக்கண்படச்செய்த வெமது பிரசங்கத்தால்

அவரது விபரீதத்தைமெச்சி நச்சுமேழைகள் மயக்கந்தவிர்ந்து குணப்பட வேதுவுண்டாகலி னிதி விம்மட்டில் விச்சிராந்தி யடைந்து அவரது ஏனையாபாசங்களையு மெடுத்துக் காட்டி யுபகரிப்பாமென்க.

## பூர்வபட்சம்.

"சுத்த சத்துவகுண சகிதமாயையும், மாயைக் கதிஷ்டான சேதனமும், மாயையின்கண் ஆபாசமும் மூன்றுங்கூடி ஈசுரனென ப்படும். இவ்வீசுரனே சகத்துக்குக் காரணமாம். காரணம் இருவகைத்து; ஒன்று உபாதானகாரணம்: மற்றொன்று நிமித்தகாரணம். கடத்தின் சொரூபத்தில் மண்போல யாதுகாரியத்தின் சொரூபத்திற் பிரவேசமாமோ யாதின்றிக் காரியத்தின் ஸ்திதிகூடாதோ! அது உபாதானகாரண மெனப்படும். யாதுசொரூபத்திற் பிரவேசமாகாமல் காரியத்திற்கு வேறாயிருந்து குலாலன்போலச் செய்கிறதோ! யாது நசித்தால் காரியங்கெடாதோ! அது நிமித்தகாரண மெனப்படும்: உலண்டுபோல, ஈசுரனுடைய சரீரமான சடமாகிய மாயை சகத்துக் குபாதானகாரணம்; சேதனபாகம் நிமித்தகாரணமென் றறிக."

## சித்தாந்தம்.

இவர் ஈசுவரனுண்டானவிதத்தைக் கூறியது சாலச்சிரிப்புடைத்து. அதனை ஈண்டுவிரிக்கின்றாம். சுத்தசத்வகுண மாயை, மாயைக்கதிஷ்டானசேதனம், மாயையின்கண ஆபாசம் என்னும்இம்மூன்றுங்கூடியபோதே ஈசுவரனையொப்பினவர் இம்மூன்றையும் யாவர் கூட்டினரொன்பதை விரித்திலர். இவற்றை யொன்றுகூட்டுவதன்முன்னர் மாயையில் சத்வாதி விபஜநங்க ளுண்டுபண்ணியதும், அம்மாயையின்கண் ஆபாசந் தோன்றப்பண்ணியதும் யாவரொன்பதையும் விளக்கிலர். மாயையென்னுமுதல் சேதனமாகிய அதிஷ்டானத்திலிருந்து எப்படி யுண்டாயிற் றென்பதையும் பிரகாசப்படுத்திலர். இவரது மதத்தில் "யாது இல்லாதது, அதுமாயை" என்று கூறுவது சித்தாந்தம். இது முயற்கொம்பு போல்வது. இல்லாத முயற்கொம்பை யெண்ணி முழம்போடுவதும், அதன் பருமனிவ்வளவென்று கூற விசைவதும் இயையுமா றெங்ஙனம்?

இதனை நோக்குவார் இல்லாததாகிய மாயையினிடத்துச் சர்வாதி குணங்களைப பிரஸங்கித்தவரது விவேகத்தை வெறுத்திடுவரொன்க. ஈசுவரனுண்டாவதற்கு இவர்தேடிய சத்வகுண சகிதமாயை சடம். சடம் ஒன்றினைச் செய்யாது. இவர் பின்னர்த்தேடிய மாயைக்கு அதிஷ்டானசேதனமும இவருக்கு உபகாரத்தைச்செய்திலது. எங்ஙனமெனின், மாயை சடம. சடத்துக்கு அதிஷ்டானமுஞ்சடமாகத்தகட்டிலலே. அதனைச் சேதனமென்றது கூடாது. அதிஷ்டானம் சேதனமெனின, மாயையுஞ்சேதனமாம. இவர் மாயையைச் சேதனமாகவொப்பாமையால், சடமாகிய மாயைக்கு அதிஷ்டானத்தைச் சேதனமென லடாதென்பதே சித்தம. அதவா சேதனமென்றே யொப்புவோம். இது சடமாகிய மாயைக்கு அதிஷ்டான சேதனமாயினமையால, சுதந்தரத்தன்மை யிழக்கும. பரதந்திர நிலையினதாகிய அது ஒன்றினைச்செய்யுமா றெங்ஙனம்? இனி மூன்றாவதாகத் தேடிய மாயையின்கண் ஆபாசம் முதற்கட் டகையபபெற்ற சுத்தசத்வ சகிதமாகிய மாயைபோல்வதேயா யிருக்கும. இன்னுமிவர் மாயையின்கண் ஆபாசமென்றதும் அஸங்கதமாம். மாயையின்கண் ஆபாசம் எவ்வாறு உண்டாயிற்று? பாலானது பிறைக்குற்றத்தால தயிரா யாபாசப்பட்டது. இதுபோல மாயையினகண் வேறு எதன்குற்றத்தா லாபாசமுண்டாகியது? இவைகளை விசாரியாது ஈசுவரனுக்கு உற்பத்திகூறியது யாங்ஙனம்? பூர்வபட்சியார்தேடிய ஈசுவரன் அஸ்வதந்திர சைதந்யமும், மாயாஜடமுங் கூடியபோதுண்டானதாக ஏற்பட்டமையால், இதனை வைதிகசிரேஷ்டர்கள் வெறுத்திடுவரொன்க.

இனியிவர் ஈசுவரனென்றுபிரஸ்தாபித்த வஸ்துவைக் கொஞ்சம் விசாரிப்பாம். இவரது மதத்தில சத்வரஜஸ்தமசுகளின் சமஷ்டி மூலப்பிரகிருதியென்றும், இவற்றுள், சத்வத்திற்றோய்ந்த சைதன்யம் விஷ்ணுவென்றும், ரஜசிற்றோய்ந்த சைதன்யம் பிரமனென்றும், தமசிற்றோய்ந்த சைதன்யம் உருத்திரனென்றும் போதிப்பதுண்டு. இந்த மூன்று மூர்த்திக

ருள் நமதன்பர் சகத்துற்பத்திக்குக் காரணபூதராய்த் தேடிய ஈசுவரன் இன்னுரென்று விளங்கவில்லை. இவர் சத்வகுண சகிதமாயையென்றதனால், சத்வத்திற்றேய்ந்த சைதன்யமாகிய விஷ்ணுவென்று கொள்வாமெனின், விஷ்ணுவுக்குத்தொழில் பாலனமேயன்றிச் சிருட்டியில்லை. சிருட்டித்தொழில பிரமனுடையது. பிரமனையே ஜகஜ்ஜந்மாதி காரணமாகக் கொள்வாமெனின், அவனைத்தந்தவர் விஷ்ணுவும், விஷ்ணுவைத்தந்தவர் உருத்திரனும், உருத்திரனைத்தந்தவர் துரீய சிவனுமாகக்கூறுஞ் சுருதிகளுக்கு விரோதமாம். அன்றியும், பிரமன் இராஜசகுண விசிட்டனுகையால், அவனைச் சத்வ குணசகிதன் என்றது கூடாது. இவ்விருவருக்கும் வேறாய உருத்திரனைக் கொள்வாமெனின், சம்ஹாரத்துக்கு ஏதுவாகிய தாமசகுணவிசிட்டமுடையாரை உற்பத்திக்குக் காரண ரென்று கூறுவது கூடாது. இவ்வாறு குழம்புவதற்குப் பூர்வ பட்சியார் பிரஸ்தாபித்த "சத்வகுணசகிதமாயை" என்றதே இடஞ்செய்தது. சத்வகுணசகிதம் என்றதைத் தள்ளி "மாயையும்" என்று அம்மாயையைத் தனியே பிரஸ்தாபித்திடினொருவாறு பொருந்தும். அங்ஙனங் கொள்ளுங்கால், அம்மாயையைச் சுத்தமாயையென்றுகோடல் உசிதம். அப்போது அத்துடன் "மாயையின்கண் ஆபாசம்" என்றதைச் சேர்த்தது குற்றமாம். எப்படி நோக்கினும் நமதன்பரது சித்தாந்தம் தலையெடுப்பது கஷ்டமாயிருக்கின்றது. இம்மூன்றுகுணங்களையுந் தள்ளியபோது பிரஹ்ம விஷ்ணு ருத்ரர்கள் இடம்பெறு தொழிகின்றனர். இவர்களுக் கதீதமாகியதொன்றே ஜகஜ்ஜந்மாதி காரணவஸ்துவென்று கொள்வாமெனின், அதனிடத்துச் சத்வாதிகள் கிரஸ்தமாகையால், அதற்கு நமதன்பர் உற்பத்தி காரணத்வங் கூறமுடியாது. இந்த நியாயங்களால், இம்மாயாவாதியார் தேடிக்கொண்டுவந்த ஈசுவரனை அநீசுவரனென் றெதுக்குதலே முடிவாயிற்று. இதுநிற்க.

இவர் காரணம் இருவகைத்து எனவும், அவை உபாதான்காரணமும், நிமித்தகாரணமுமாமெனவுங் கூறினுரன்

ரே? அங்ஙனங் கூறினவா உபாதானநிமித்தகாரணங்க ளி வ்விலக்கணத்தனவென்று பின்னர்பபிரலங்கித்தார். அவைநி ற்க. உபாதானம் சடமாகிய ஈசுவரனுடைய சரீரமும், நிமித் தம் அச்சடசரீர விசிட்டமாகிய சேதனமுமாமென்று அவா கூறியதே யாவரு மருவருக்கத்தக்கது. ஈசுவரனுக்கு மாயா ஜடத்தைச் சரீரமென்றது ஈசுவரநிந்தையாம். பிராமணனொ ருவனைச்சுட்டி இவ்வேதியன் எப்போதும் இந்தப் பறச்சேரி யிற்றான் வசிக்கின்றான் என்று ஒருவன்கூறுதல்கூடுமோ?பற ச்சேரியிலவாழ்பவன் பார்ப்பானுகாதவாறு ஜடமாகியமாயை யைச் சரீரமாகக்கொண்டது பரவஸ்துவாகாது. ஒருபெரியகி ராமத்துக் கதிபதியாகிய அந்தணன் அந்தக் கிராமாந்தர்க்கத மாகிய பறச்சேரிக்குமதிபனுகவெண்ணபபடுதல் அவனுக்குச் சிறுமையைப் பயவாது. அதுபோலச் சிற்சடப் பிரபஞ்சங்க ளை யியக்குமாறு எலலாபபொருள்களிடத்துந் தோய்ந்து பிரி வறநிற்கும் பெருந்தகைக்குப் பிரபஞ்சத்தைத் திருமேனியெ ன்றதுகுற்றமாகாது. அத்திருமேனிப்பிரசங்கத்தால் ஈசுவரனு க்குச் சொந்தபிரயோசனமொன்றுமில்லை. சித்துப்பிரபஞ்சத் தையறிவிக்கவும், அசித்துப்பிரபஞ்சத்தை யசைவிக்கவுமே ய வ்விருவிதபிரபஞ்சங்களிலும்ஈசுவரன்றோய்ந்தமையால், அவ் விருவகைப்பிரபஞ்சங்களையும் ஈசுவரனதுசரீரமென்றது ஔ பசாரிகமென்பதே சித்தம். சீவனுக்குண்டாகுஞ் சரீராதிகள் அச்சீவனுக்கே பிரயோசனமாகத்தக்கன. இவனுக்குக்கூறுஞ் சரீரமும, ஈசுவரனுக்குக்கூறுஞ் சரீரமும் சமநிலையினவாகா. சீவனுக்குச் சரீரமுண்டாகாதபோது அச்சீவன் இகபரலாப ங்களை யடையான். ஈசுவரனுக்குச் சரீரமில்லாத போ து அவ்வீசுவரனுக்குண்டாகு நஷ்டமொன்றுமில்லை. இவ்வா று பகுத்தறிந்தால், ஈசுவரனுக்கு மாயாஜடம் சரீரமென்று கூற நம்மவரிசைந்திடார். இவர் ஈசுவரனை வெளிப்படுத்த வேண்டிச் சத்வகுணசகிதமாயை, அம்மாயைக்கதிஷ்டான சேதனம், மாயையின்கண் ஆபாசம் என்பவைகளை யொன் றுசேர்த்தமையால், இம்மூன்றுங்கூடாதபோது ஈசுவரனில்லை

பென்றே சொல்லவரும். இதனால், ஈசுவரனுடைய கூறு மூன்று என்று எண்ணப்பட்டு, சத்வகுண சகிதமாயையொரு ஈசுவரக்கூறும், அம்மாயைக்கு அதிஷ்டானமான சேதனமொரு ஈசுவரக்கூறும், மாயையின்கண் ஆபாசமொன்று ஈசுவரக்கூறுமாவது சித்தாந்தமாம். இவ்வாறுகொண்டால் பிரமமொன்றே என்னுஞ் சித்தாந்தத்திற் றத் தலைபிடி பாயுமேதாம், சேதனமேபரம், சடமேபரம் என்னும் வாதிபப்பாதகிய அஸங்கதம வாதமும் இவர் தலைமேல் வந்தேறும். இன்னுமிவர் "உலண்டு போல" என்றொரு உபமானங்காட்டுகிறாரன்றோ? இவ்வுபமானத்தா லிவரது ஏகவாதம் பெரும்பட்டுப்போவதேயன்றிப் பெரிதுங்கொண்டவிஷயம் நிலைபெறாது போயிற்று. எங்ஙனமெனின், உலண்டுப்பூச்சி தனது தேகத்தினின்று நூலையுண்டுபண்ணி, அதனாற் கூடுசெய்து, அதனுட்புகுந்து, தான் சென்றவழியை யடைத்து, உள்ளிருந்து வெளிப்படமாட்டாம லிறந்து முதலற்றுப் போகின்றது. இவ்வுலண்டினை நோக்கின், இதனிடத்தில் தேகமும், தேகியாகிய சேதனமும் கேட்கப்படுகின்றது. தேகமும், தேகியும் பின்னமா? அபின்னமா? என்று வினவின், பின்னமென்றே நமது வாதிபெரியரெனிடார். பின்னமாகிய தேகத்தின்காரியமென்று நூலை யாம் ஆதரிப்பதேயன்றி, அத்தேகவிசிட்டமாகிய சேதனத்தின் காரியமென்று ஆதரித்திலேம். உலண்டுவின் றேகத்தில் நூல் காரியப்படாமல், தேகியாகிய சேதனத்திற் காரியப்படுமாயின, ஏகாத்மவாதத்துக் கிசைந்த அபின்னநிமித்தோபாதானவாதம் கனம்பெறும். இவர் தேடிக்கொண்டுவந்த உலண்டுவினுபமானத்தால் பின்னநிமித்தோபாதானவாதமே ஸமர்த்திக்கப்பட்டமையால், பூர்வபட்சியாரது மதம் புலர்ந்துபோயிற்று. இந்த விசாரத்தால், உலண்டுப்பூச்சி யுருவழிந்து நிர்மூலமாயிடுதல்போல், ஈசுவரனு மிருப்பழிந்து முதலற்றுப்போவதே நம்மவரதுவாதத்தான்முடிந்த சித்தாந்தமாயிற்று. இவர்கூறு மொவ்வொரு அபசித்தாந்தமும் அஸாதுவாகவே முடி

ந்தமையால் இவர் சைவர்பக்க வேற்றியதுக்கம் இவருக்கே ஆஸ்தியாயிற்று. விரிக்கிற் பெருகும்.

## பூர்வபட்சம்.

"அன்றியும், அஞ்ஞானம் ஜீவேசுவர விபாகரஹிதமான சுத்தப்பிரமத்தின் ஆசிரிதமாய அச்சுத்தப்பிரமத்தைத்தானே ஆச்சாதனம் பண்ணுகின்றது. [ஆச்சாதனம் = மறைத்தல்] எதுபோலெனில்? அந்தகாரமானது கிரகத்தையே ஆசிரித்துக்கொண்டு அக்கிரகத்தைத்தானே ஆச்சானம் பண்ணுவதுபோ லென்க; இந்தப்பட்சத்தைச் சவாசிரய சுவவிஷய பட்சமென்பர்; இதற்கு, சுத்தப்பிரமமே மாயைக்கு ஆசிரயம்: சுத்தப்பிரமமே மாயைக்கு விஷயம் என்று பொருள். மாயை சுத்தப்பிரமத்தை மறைப்பதே அதனை விஷயம்பண்ணினதாம்.

சங்க்ஷேபசாரீரகம், விவரணம், வேதாந்தமுக்தாவலி, அத்வைதசித்தி, அத்வைததீபிகை முதலிய கிரந்தகாரர் அஞ்ஞானம் சவாசிரயம் சுவவிஷயம் என்னும் பட்சமே அங்கீகாரஞ்செய்திருக்கின்றனர். வாசஸ்பதி யென்பவர் அஞ்ஞானம், ஜீவன் ஆசிரிதமாய்ப் பிரமத்தை விஷயம்பண்ணுகிறதென்று ஒப்பினர். எதனாலெனின்? நான் அஞ்ஞானி பிரமத்தை யறிகின்றிலேன் என்னுந் தோற்றரவால் நான் என்னுஞ் சத்தத்துக்குப் பொருளான ஜீவன் அஞ்ஞானி யென்பதால் அஞ்ஞானத்திற்கு ஆசிரயமாக விளங்குகின்றனன். பிரமத்தையறிகின்றிலேன் என்பதால், அஞ்ஞானத்திற்கு விடயமாகப் பிரமந் தோற்றுகின்றது. இவ்வாற்றால், அஞ்ஞானம் ஜீவனாசிரிதமாய்ப் பிரமத்தை விடயம் பண்ணுகின்றதென்பது வாசஸ்பதியினுடைய மதம். ஜீவபாவம் அஞ்ஞானத்தின் காரியம்: அஞ்ஞானம் சுதந்தரமாக ஒருகாலும் இராதாதலால், நிராசிரய அஞ்ஞானத்தால் ஜீவபாவங்கூடாது. முன்னே ஏதேனும் ஒன்றன் ஆசிரிதமாக அஞ்ஞானம் இருக்குமாகில் அப்போது அஞ்ஞானகாரியமாகச் ஜீவபாவம் உண்டாகும். ஜீவத்துவம்போல ஈசுவரத்துவமும் அஞ்ஞானகாரியமாகலின், ஈசுரனாசிரிதமாகவும் அஞ்ஞானம் இன்றாம். பின்னை எதனது ஆசிரிதமாமெனின்? சுத்தப்பிரமத்தின் ஆசிரிதமாய் அநாதியாம். சேதனமும்அஞ்ஞானமும் அநாதி; அவைகளின் சம்பந்தமும் அநாதி:சேதன அஞ்ஞானங்களின், அநா

திசம்பந்தத்தால் சீவபாவமும், ஈசுரபாவமும் அநாதியாம். அங்ஙன மாயினும், சீவபாவம் ஈசுரபாவம் இரண்டும் அஞ்ஞானத்தின் அதீன மாம். ஆதலால், அஞ்ஞானத்தின் காரியமென்று சொல்லப்படும். சீவன் அஞ்ஞானத்திற்கு அதிஷ்டானரூபவாசிரயமென்னல் கூடாது: சுத்தப்பிரமமே அஞ்ஞானத்திற்கு அதிஷ்டான ரூபவாசிரயமாம்; சுத்தப்பிரமமென்னும் அதிஷ்டானத்தி னுசிரிதமாகிய அஞ்ஞானம் அந்தச் சுத்தப்பிரமத்தையே ஆச்சாதனஞ் செய்கிறது; அதன் பின்னர் நான் அஞ்ஞானியாயிருக்கிறேன் என்னும் இயவாற்றால், சீயன் அஞ்ஞானத்திற்கு அபிமானி ரூபவாசிரய மாகின்றானென்பதும் இவர்க்குடம்பாடாமெனக் கொள்க."

## சித்தாந்தம்.

இவர் அஞ்ஞானம் சுத்தப்பிரமத்தைத்தானே மறைக்கின்றது என்றா. பிரமத்துக்கு வேறாக இரண்டாவதுவஸ்துவில்லையென்னும் இவரதுமதத்தில் அஞ்ஞானமென்பதற் கவகாசங் கிடைத்தவிதந் தெரியவில்லை. வஸ்துவொன்றேயென்பதொழிந்து பிரமம் ஒன்று, அஞ்ஞானம ஒன்று என ஏற்பட்டபின்னர், ஏகவாதத்திலிறங்கி யிவர்காலங்கழிக்க வேண்டிய ஆவசியகமில்லை. அஞ்ஞானம் இருள்போல்வதென் றிவரோ விரித்தாரன்றோ? அஞ்ஞானத்தை யிருளென்றவர் சுத்தப்பிரமத்தைக் கிரகஸ்தானத்தி னிறுத்தியதென்னை இருள் கிரகத்தை யாசிரித்துக்கொண்டு அந்தக் கிரகத்தையே மறைப்பதுபோல அஞ்ஞானம் பிரமத்தை யாசிரித்துக்கொண்டு அதனை மறைத்திடுமென்றதே அதுவாம். இது என்ன மதி? பிரமம் கிரகமானால், அந்தக்கிரகத்தையாசிரித்து மறைத்துநின்ற இருளையோட்டும் ஒளியாது? இவர் ஒளியைக்கூறாமையால், அஞ்ஞானம் - பிரமம் என்பவைகட்கு வேறாயதோர்பொருள் ஒளிஸ்தானத்தில் ஸமர்த்திக்கப்படல்வேண்டும். அதுவே பசுபாசங்கட்கு வேறாய பதிப்பொருளாதல் வேண்டும். பாசம் இருளும், பதி அவ்விருளைத் துரத்து மொளியுமாதலே வேதத்தின்றுணிவு. இடையினின்ற பசுவே இருளையும், ஒளியையும் அநுபவிப்பது. இந்தப் பசுவையே

பிரமமென்றுபசரித்துக் கிரகஸ்தானத்தி னிறுத்தியதாக யா மொப்பினேம். கிரகத்தை யாவரித்த விருளை ஒளிதூரத்துவ துபோலப் "பிரமம்" என்றுபசாரமாகப் பிரஸ்தாபித்த பசுவை யாவரித்த வஞ்ஞானத்தைப் பதியாகிய சிவம் தூரத்து மெனலே துணிவு. இவ்வாறு கூறுமல் பிரமம் அல்லது பதி பபொருளையே கிரகமென்றுகொண்டால், அக்கிரகாசிரிதமாயதனை மறைத்த விருளைத்துரத்த வேதுவில்லாமற் போகின் றமையால், சமதன்பாதேடிய பிரமத்தைப் பிரமமன்றெனவொதுக்குவதே மரபாமென்க.

அன்றியு மிவா சுத்தப்பிரமத்தைப் பிரஸ்தாபிக்குங்கால் "சீவேசுர விபாகரகிதமான சுத்தபிரமம்" என்றனர். "சீவேசுரவிபாகரகிதமான" என்கையால், சீவனும், ஈசனும் மிச்சையென்ப திவாகருத்து. பிரமம் சத்தியமாகையா லதனையே பிரஸ்தாபித்தனர். அது எமக்கு முடம்பாடே. அத்துடன் அஞ்ஞானப் பிரசங்கஞ்செய்ததுமாத்திரமே அஸங்கதம. சீவேசுரர்கள் மிச்சையாகையில, அஞ்ஞானமாத்திரம் மிச்சையாகாதது என்னே? அஞ்ஞானமு மிச்சையாயி னதனைச் சத்தாகிய பிரமத்தோடு ஸாம்யமாயும், அதற்கிரண்டாவதாயும்,அதனையாச்சாதனமபண்ணுவதாயும் பிரசங்கித்தது என்னே? இவ்வஞ்ஞானத்தையே மாயையென் றிவரொப்பினமையால், "சுத்தப்பிரமத்தை மாயைமறைப்பதே அதனை விஷயம்பண்ணினதாம்" என்று பின்னர்ப் பிரசங்கித்தனர். மாயையால் உயிர்க்குடம்பாதிகளுண்டாயின.இவை தநுகரணபுவன போகங்களாம். இவை அறிவை மறைக்குங் கருவிகளாகா. "மாயாதநுவிளக்காய்" என்றனர் சைவத்திருவாளர். இருள் பொதிந்த கண்ணினர்க்குக் காட்டாய்நிற்பதொரு கருவியாயி டுதலே மாயையின் காரியம். இது இருளாகாது. பிரமத்தை மறைக்காது.பிரமபென்று இவர்கூறு யான்மாவின்ஞானத்தை மறைப்பது ஆணவமேயாம்.இவராணவத்திற்கும்,மாயைக்கும் பேதமறியாது மயங்கிமாழ்கின் றிதென்கொலோ? இன்னுமி

வர் மாயை சுத்தப்பிரமத்தை யாச்சாதனம் பண்ணியதென்றதும் பிழையாம். சுத்தப்பிரமத்தி னறிவை மறைத்தது என்றுகூறுதலே யமைவுடைத்து. சுத்தபபிரமத்தை மறைத்தது என்பதற்கும், அதனறிவை மறைத்தது என்பதற்கும் பரஸ்பரம் பேதமுண்டு. ஒருபுருடனது உடலை மறைத்தது என்பதற்கும், அவனுடைய கண்ணை மறைத்தது என்பதற்கும பேதமுண்டு. உடலை மறைத்தது என்கையில், அவனுக்குத் துன்பமில்லை. கண்ணைமறைத்தது என்கையில அவனுக்கே துன்பம். உடல் மற்றொன்றினன் மறைபடுமானுல், அதனைப் பிறர்காணமுடியாது. கண் மற்றொன்றினுல் மறைபடுமானுல, அந்தக்கண்ணுக்கே ஈனமுணடாம். உடல்மறைவது அவ்வுடலுக்கும், அதனைப் பாாப்பவருக்கு மிடையிலுண்டாகிய திரைச்சீலை, சுவர்முதலிய பொருள்களாலுணடாம. கண்ணெளி மறைவது இருளினுலேயே யுண்டாம. சுவர் முதலியவற்முன் மறைக்கபபடுவது சடமாகிய தூலமும,இருளான் மறைக்கபபடுவது சித்தாகிய சூக்குமப்பொருளுமாம். சூரியன் மேகத்தான் மறைக்கப்படுவதனுல, சூரியனுக்குண்டான தோஷமென்னை? அச்சூரியப்பிரகாசத்தைவிழைந்துள்ளார்க்கே மேகாவரணத்தாற் கேடுண்டாயினமையறிக. இதனையுய்த்துணாவார் சுத்தப்பிரமம் மாயையான்மறைக்கப்பட்டதென்பதனை எங்ஙனேமாதிப்பா? அதனு லப்பிரமத்துக்கு நஷ்டமுனாக்கவினையத்திலது. அப்பிரமத்துக்கு வேறுயுள்ளவாக்கே (அப்பிரமத்தை யநுபவிக்க முடியாததாகிய) நஷ்டம் பிராப்தமாம். இதனுல, நமதன்பா பசுவையே பதியாகமயங்கிக் கூறினரென மேல் யாம்விருந்ததே நிலைத்தது. அவரது பிரமத்தை யாம் பசுவாகக்கொண்ட காலத்தும் அதனறிவை மறைக்கும் பிரஸங்கமன்றோ பெறப்படவேண்டுமெனின், அவரது மதத்திற் குணிகுணப்பிரசங்கங் கூடாதாகையால், அவர் பிரமத்தினறிவை மறைத்தது என்னுமல் பிரமத்தைமறைத்தது என்று பேசி முடித்தார். குணியோடு குணத்தையொப்பினுல அத்துவிதங் கெடுமென்ப தவரதுகருத்து. குணிகுணங்களை

த் தாதாத்மியமாக வொப்புவதே அத்துவிதத்தின் ருறபரியம். அங்ஙன மொப்பாதபட்சமே அத்துவிதத்தையழிக்கும். அத்துவித மென்பது இரண்டன்மை. இரண்டின்மை யென்பது பூர்வபட்சியினது மதம். அத்துவிதத்தினுண்மையைப்

"பண்ணையு மோசையும் போலப் பழமதுவும்
எண்ணுஞ் சுவையும்போ லெங்குமா—மண்ணரு
ளத்துவித மாதலருமறைக ளொன்றென்னா
தத்துவித மென்றறையு மாங்கு."

என்று மெய்கண்டசிவம் கட்டளையிட்டருளிய திருவாக்கா லை தெளிந்திடுவர் மேலோர். இவ்வாறு தெளியாதார் தமது ஏகான்மவாதத்தால வெதும்பி, அறிவு -ஆநந்தம் என்பவைக ளைப் பிரஸ்தாபித்துப் பால - தயிருபமானங்களைப்பாடித்து அத்துவிதத்தைச் சாதியாநிற்பர்.

உத்தமவாததூலவாதூலம்.

"அறிவுதனி லானந்த மானந்தந் தன்னி
லறிவிலவென் றுய்பேதை யானாய்—அறிவின்க
ணானந்த மின்லெனி லாக்கோ வதுமற்றிங்
காநந்தமில்லா யறை"

"ஆநந்தந் தன்னி லறிவில்லை யென்னினுனக்
கானந்த மாவதிலை யோர்ந்திடுவா—யாநந்தந்
தானே தனிக்குமென றெனப் படிகண்டா
யேனிந்த வீண்மாய மீங்கு."

"பாலிற் றயிருண்டோ பாலுண்டோ தான்றயிரி
லேதுங்கா ணேத்திவற்றை யென்றிடினீ—பாலெய்த்
தறிவுதனி லானந்த மாமிப்பின் னுங்கே
செறியுந் தயிர்நிலையைச் சேர்ந்து."

"பாலே தயிராய்ப் பரிணமிக்கு மோதானே
பேலாய் பிளைக்குற்ற மென்னவே—மேலா
வுளைக்கு முயரானந்த மொத்திடுமோ காணீ
யுளைக்குந் தயிர்முன் னுரை."

"ஒன்றுசிலைதந் தொன்முன தொல்வா தறிவினிடத்
தொன்றுமானந்த முறைசெய்வார்க்—கொன்றுங்காண்
பண்ணையு மோசையும் போலப்பழமறைதேர்ந்
தெண்ணுவா யத்துவித மீங்கு."

இந்தப் பிரசங்கத்தால் பூர்வபட்சிகள் (அத்துவிததந்திக்குக்) கூறு முபமானம் அடியோடேசாய்ந்தது. அன்றியும், இவரது அத்துவிதம் பின்வெண்பாக்களாலுங் கண்டிக்கப்பட்டவாறறிக.

உத்தமவாததூலவாதூலம்.

"அத்துவிதத் துண்மை யறியா யறிவொன்றே
வத்துவெனல் விட்டிங்கே மாறுக—வத்துவிதங
காட்டுவே னென்றெழுவாய் கண்மூடி யானைக்கா
ணூட்டுவாய் நின்மதத்தை நன்கு."

"ஏகான்ம வாதியென வேற்றாற பெரியோர்கின்
மோகாந்த காரநின் மூலந்தேர்ந்—தேகமாம்
வத்துவே யுள்பொருளாய் வாதிப்பா யாதலினுல
அத்துவித மேதுக் கறை."

"ஒன்றே பொருளானு லொன்றென்னல் விட்டுமரு
ளன்றேநீ யதத்துவித மாய்ந்திடுத—லொன்றுமே
டிரண்டல்ல வத்துவித மென்பார்காண் மேலோ
முரண்பெறவே யென்று முணர்ந்து."

"ஒன்றிரண் டாகாம லுபயமுமின் றாகாம
லொன்றுங்கா ணத்துவித மோர்கிலா—யொன்றென்று
நீயேனோ வத்துவித நேர்வா யகம்பிரமப்
பேயேவந் திங்கேதான் பேச."

"துவிதியோ வத்துவிதஞ் சொல்லானின் போலக்
குவியவே யுள்ளமருள் கூடாய்—புவியின்க
ணத்துவிதஞ் சொன்னு யழிந்துபோ முன்னேக
முத்தியிலா யென்னே வுரை."

இவற்றால் பூர்வபட்சி மதத்தை அநுவதித்து மறுத்தது மாத்திரமன்றி, மேல சித்தாந்தபட்சத்தை நிரூபித்தமையுங்

காண்க. இதனால், பிரமம் - அதனறிவு என்னும் பாகுபாடுணராது அத்துவிதங்கூறியமதம் அஸங்கனூற்றதெனலே சித்தம. சமதனபர் ஏகான்மவாதமாகிய போலியத்துவிதத்திற் புக்க பெரியோராயினமையால், பிரமத்தினறிவை ஆச்சாதனம்பண்ணியது மாயையென்றது பிரமத்தை ஆச்சாதனம் பண்ணியதென்று அஸங்காத்மவாதத்துக் காளாயினர். இதுநிற்க.

இவர் சஞ்சேபசாரீரக முதலிய நூல்களின்பேரைப் பிரஸ்தாபித்தாரன்றோ? அதனால் இவர்சாதித்தது ஒன்றுங்காணோம. அவை இவருக்குப் பிரமாணமாய் நின்றமையா லிவரது பிரமேயமலக்கனூற்றதுபோல அந்தப் பிரமாணமும அஸங்கதமாயினதெனலே முடிவாயிற்று. இனி யிவர் வாசஸ்பதி மதத்தை யநுவதித்து மறுத்திருக்கின்றார். இவர் மறுத்தபாடு தெய்வத்துக்கே வெளிச்சம். அதனை யீண்டு விளக்கி, அநந்தரம் எமது பட்சத்தை வெளிப்படுத்துவாம்.

இவர் வாசஸ்பதிமதத்தை மறுக்கவேண்டி "சீவபாவம் அஞ்ஞானத்தின் காரியம். அஞ்ஞானம் சுதந்தரமாக ஒருகாலுமிராது. நிராசிரய அஞ்ஞானத்தால் சீவபாவங்கூடாது. முன்னே ஒன்றனுசிரிதமாக அஞ்ஞானமிருக்குமாகில் அப்போது அஞ்ஞானகாரியமாகச் சீவபாவம் உண்டாகும்." என்று பிரசங்கித்தனர். இவர் சிவபாவம் அஞ்ஞானத்தின் காரியமென்றது கூடாது. சீவபாவம் அஞ்ஞான காரியமாயின், அஞ்ஞானம் காரணமும், சீவபாவம் காரியமுமாகும். அங்ஙனமாயின், சீவபாவமாகிய சேதனம் அஞ்ஞானமாகிய ஜடத்திற்றோன்றியதென்னும பிரசங்கமுண்டாம். இது உலகாயதன்கூற்றோ யொதுங்கும். அன்றியும், சீவபாவம் என்றதும் பிழையாம். அஞ்ஞானம் ஒருமுதலாயிடுதல்போலச் சீவன் ஒருமுதலாயிடுதல சுருதிசித்தமாகையால், சீவனை அஞ்ஞானகாரியமென்றதும், சீவபாவம் என்று பிரஸ்தாபித்ததுஞ் சுருதி விலக்கெனலே அறிஞர் துணிபாம். இவர் பூர்வபட்சஞ் செய்யவந்த வாசஸ்பதிமதத்தில் "சீவபாவம் அஞ்ஞானத்தின்காரியம்" என்றதுமுதலிய சித்தாந்தங்க ளுடம்பாடாயின், ஈண்டிவர் தீட்டிய வசனங்கள்

கனம்பெறும். அங்ஙனமின்மையின், அவ்வசனங்கள் சாதுக்கள் சபையில் வெகுதுச்சமா யொதுங்குமென்க. இதுநிற்க.

இவர் சீவபாவம் அஞ்ஞானத்தின் காரியம் என்று பிரஸ்தாபிக்கையில் அஞ்ஞானம் பிரமத்தை யாசிரித்துக் காரியமுண்டாகின்றது என்று பிரசங்கித்தாராகையால், சீவபாவத்துக்குப் பிரமமேகாரணம் என்னும் வாதம் நிகழலாம். அப்போது பிரமத்தை அஞ்ஞானமணுகிக் கெடுத்ததென்பதே முடிவாம். அன்றியுங்கெடுத்தது அஞ்ஞானமும், கெட்டதுபிரமமும், கெட்டுத்திரிந்தது சீவனுமாகிய பிரசங்கமுங் கேட்கப்படும். அஞ்ஞானம் ஜடமாகையால், பிரமத்தையணுகாது. பிரமம் நிர்மலமும், நிர்விகாரமுமாகையால் அஞ்ஞானத்தையணுகாது. அன்றியும் அப்பிரமம் ஏகமும், எதிரோகமு மிலலாததாகையால், அஞ்ஞானப் பிரசங்கத்துக் கவகாசமே கிடையாது. இம்மட்டேயமையாமல் இவர் "சேதனமும் அஞ்ஞானமும் அநாதி, அவைகளின் சம்பந்தமும் அநாதி" என்று கூறியிருக்கின்ருர். இது பிரமத்தை அபரிசுத்தபதார்த்தமென்று போதிக்கின்றது. அன்றியும், பிரமத்துக்கு வேருக அஞ்ஞானம் என்னும் இரண்டாம்வஸ்துவொன்றுளதென்றும் உபதேசிக்கின்றது. இந்தப் பிரசங்கத்தால் நமதன்பரது ஏகவாதத்திற்கு நேத்திரபங்கமுண்டாவது சித்தம். இப்படி வியவஸ்தையுண்டாக நேரும் வாதசபையில் "சீவபாவம்அஞ்ஞானத்தின்காரியம். அஞ்ஞானம் சுத்தப்பிரமத்தின் ஆசிரிதமாய் அநாதியாம்" என்னும் பிரசங்கம் எங்ஙனே மணம்பெறும்? இதனை நமதன்பர் யோசிக்கவேண்டியது.

இன்னுமொன்று சொல்லுகிரும். அஞ்ஞானம் பிரமத்தை யணுகிச் சீவனைக் காரியப்படுத்திய தென்னுங்கால், சீவனுக்கதிஷ்டானம் பிரமமும், பிரமத்தைக் காரியப்படுத்துங்காரணம் அஞ்ஞானமுமாகக்கொள்ளவரும். இதனுல், அஞ்ஞானத்துக்கே சர்வாதிகாரப் பிராப்தமுண்டாம். பிரமத்தை அஞ்ஞான மாசிரித்தபோது அவ்வஞ்ஞானத்திற் ருேயாமல் பிர

மம் தாக்கற்றுவிளங்கியதெனின், "அஞ்ஞானகாரியமாகச் சீவபா வமுண்டாகும். நிராசிரய அஞ்ஞானத்தால் சீவபாவங் கூடாது" என்னும் பிரசங்கம் நிஷ்பலமாம். இவைகளுக்கு நமதன்பர் தேடுங் கதியாதோ அறிகின்றலம். இதுநிற்க.

இவர் "அஞ்ஞானம் சுதந்தரமாக ஒருகாலுமிராது" என்றது எமக்குமொப்பே. அவ்வளவேயன்றி "நிராசிரய அஞ்ஞானத் தால் சீவபாவங்கூடாது" என்றதும், "முன்னே ஒன்றனுசிரித மாக அஞ்ஞான மிருக்குமாகில் அப்போது அஞ்ஞானகாரியமாகச் சீவபாவம் உண்டாகும்" என்றதும் அஸங்கதமேயாம். எங்ஙன மெனின், சீவன் என்னுஞ் சொல அஞ்ஞானத்திற் காரியப்பட் டவனென்றுவது, அஞ்ஞானமயனென்றுவது பொருள்படயத் திலது. சதா சீவிக்கின்றவன் என்னும் பொருளையே தந்து சேதனன், ஆத்மா என்னும் பதங்களுக்குப் பரியாயமாய் விள ங்கும். இந்தச்சீவன் சிற்றறிவுஞ் சிறுதொழிலு முடையவன். இவன் அநாதிநித்தன். இவனுடைய அறிவுந்தொழிலும் அற் பமாயிருந்தமையால், இவனைப்போல் அநாதியே நித்தமாயி ருந்துள்ள அஞ்ஞானம் அல்லது ஆணவம் இவனது சிற்றறிவு சிறுதொழில்களை அநாதியே மறைத்தது. இவ்வஞ்ஞானத்தி ற்குச் சீவனது அறிவுதொழில்களை மறைக்குமாற்ற லுண்டே யன்றிப் பேரறிவு - பெருந்தொழில்களையுடைய பிரமத்தை யணுகி, அதனது அறிவு தொழில்களை மறைக்குமாற்றலின்று. இருளானது கண்ணொளியைமறைத்துக் கதிரொளியைமறை க்குமாற்றல் வகியாததுபோல. இவ்வுண்மையை யுணர்ந்தவர் கள் அஞ்ஞானம் சீவனை யாச்சாதனம் பண்ணியது என்பார்க ளேயன்றிச் சீவனை யுண்டுபண்ணியது என்றுகூற விசையார் கள். நமதன்பர் சீவத்வம் அஞ்ஞானகாரியம் என்று கொண் ட வஞ்ஞானமே அவரை வீண் பிரசங்கத்திலிழுத்து விடுத் தது. சீவத்வம் என்பது சீவனுடைய சிற்றறிவு சிறுதொழில் களினது நிகழ்ச்சியேயாம். இந்தச்சீவன் அஞ்ஞானம் தனது சிற்றறிவு சிறுதொழில்களை யாச்சாதனம் பண்ணியதனால் அஞ்ஞானியாயினனென்பதே முடிவென்றறிக. இனி நமதன்

பா "அஞ்ஞானம் சுதந்தரமாக ஒருகாலுமிராது" என்று தமது மியாய சஸ்திரத்தை எமக்குப்புதுமைகாட்டவரமாட்டார். இதுகாறும் யாம் பிரகாசிப்பித்த வுண்மையை நிறுத்தவே "நான அஞ்ஞானி பிரமத்தை யறிகின்றிலேன் என்னுந்தோற்றரவால் நானென்னுஞ் சத்தத்துக்குப்பொருளான சீவன் அஞ்ஞானத்துக்குஆச்சிரயமாக விளங்குகின்றனன்" எனவும், "பிரமத்தை யறிகின்றிலேனென்பதால் அஞ்ஞானத்துக்கு விடயமாகப் பிரமந்தோற்றுகின்றது" எனவும், "இவ்வாற்றால் அஞ்ஞானம் சீவனாசிரிதமாய்ப் பிரமத்தை விடயம் பண்ணுகின்றது" எனவும் வாசஸ்பதி சித்தாந்தப்படுத்தியிருக்கின்றார். மதன்பரிப்போதுகண்டிறந்துபார்ப்பாராயின், அவருக்கு உண்மைவிளங்காமற் போகாது. சீவனது சிற்றறிவுசிறுதொழில்கள் ஆணவத்தான் மறைக்கப்படுவதே பெத்தமும், அவ்வாணவத்தைச் சிவம் நீக்கியருளித் தனது திருவடியின்பத்தை நுகரப்பண்ணுதலே சீவனுக்கு முத்தியுமாம். பெத்தத்துக்கு முன்னும், பெத்தத்தினும், முத்தியினுஞ் சீவனிடத்துச் சிற்றறிவு சிறுதொழில்களே கேட்கப்பட்டவாற்றிக. பெத்தத்தின் மறைக்கப்படிருந்த சிற்றறிவு சிறுதொழில்களே முத்தியில விளக்கமாயினவென்க. முத்தித்தசையில சீவன் சிவாநுபவம் பண்ணிக்கொண்டிருக்கும. சீவன் அநுபவிப்பதும், சிவம் அநுபவிக்கப்பணுவதுமாம. சீவன் காணுமறிவும், சிவம்காட்டுமறிவுமாகை பால், இரண்டறிவுகளு பொன்றாகா. காணுகின்ற கண்ணொளியுங் காட்டுகின்ற கதிரொளியு மொன்றாயிடினன்றோ காணுகின்றசீவவறிவும, காட்டுகின்ற பரவறிவு மொன்றாகும்? இவ்வுண்மையைத் தெளிந்த பின்னரும் எங்ஙனே "சீவபாவம் அஞ்ஞானத்தின காரியம்" என்றதுமுதலிய பூர்வபட்சியினது வாக்கியங்களை விவேகிகள் மதிப்பாரகள்? சீவன் பாசத்தை யநுபவிக்கும் பெத்தகாலத்தில் பசு என்றும், சிவத்தையநுபவிக்கும் முத்திகாலத்தில் சிவம் என்றும் அழைக்கப்படும். உண்மையில் அது பாசத்தினின்றுங் காரியப்பட்ட பசுவுமன்று, பதியாகிய சிவத்தினின்றுங் காரியப்பட்ட சிவமு மன்றென்பதே முடிவென்றறிக.

சிவனது திருவாணையினின்று சீவிக்கும் அடிமையென்பதே சித்தம். விரிக்கிற்பெருகும்.

இனி இவரதுமதத்தில் பிரமம் - கூடஸ்தன் - ஈசுவரன் - சீவன் என்று நாலுவித சித்துக்க ளுரைக்கப்படுவதுண்டு. முதலிரண்டு சித்துக்களதிஷ்டானமும், பின்னிரண்டு சித்துக்களவற்றிற் காரியப்பட்டனவுமாம். ஈசுவரன்-சீவன் என்பவர்களுக்கு உற்பத்திகூறுவதேயன்றிப் பிரமகூடஸ்தர்களுக்கு அமதத்தினர் உற்பத்திகூறார்கள். அதனால், பிரமமொரு முதலும், கூடஸ்தனொரு முதலுமாக இரண்டுமுதல்களுக்கிடமுண்டாகிய பிரமமாகிய வொருமுதலேயுளதென்ற வாதத்திற் றும அவரது ஏகான்மவாதத்தின் றலையில் விழுகின்றது. இதனைப் பூர்வபக்ஷியினது நூலிலிருந்தே தெரியவெடுத்துக் காட்டுகின்றாம். "சீவத்தன்மைக்குப் பற்றுக்கோடு விசேஷணமுண்டே அதனையுடையதாயிருக்கும் கூடஸ்தனென்று நாமம். அக்கூடஸ்தன் உற்பத்தியிலாதவன்; இந்தக் கற்பிதமாயம் பிரமத்தினின்று வேறாக எப்படிச் சீவாபாசனுற்பன்னமாயினனோ அப்படிக் கூடஸ்தனை உற்பன்னமாகவில்லை. பின்னை யெப்படி உளனெனின் ;—பிரமரூபமாகவே யுளன்; இக்கூடஸ்தனே ஆன்மபதத்திற்கு இலட்சியார்த்தம்; இவனையே பிரத்தியக்கென்றும், நிஜரூபமென்றுங் கூறுவர்: இவனே சீவசாட்சியாம்" என்று கூறியிருப்பதே அதுவாம். இதில், கூடஸ்தன உற்பத்திரகிதன் என்றார். பிரமத்தைப்போலக் கூடஸ்தனும உற்பத்திரகிதனானல், பிரமத்தைப்போல கூடஸ்தனுமொருமுதலென்றுகூறத் தடையென்னே? பிரமமே கூடஸ்தனானமையால அவைகளை யிருமுதல்களாகக் கொள்ளாமெனின், பிரமகூடஸ்தர்கள் என்றிரண்டாகப் பிரசங்கித்ததற்கும,பிரமத்தை ஈசுரசாட்சியென்றதுபோல் கூடஸ்தனை ஈசுரசாட்சியென்னமைக்கும், கூடஸ்தனைச் சீவசாட்சியென்றதுபோல் பிரமத்தைச் சீவசாட்சியென்னமைக்குங் காரணந்தானென்னை? இந்தக் கூடஸ்தனையே சிற்றறிவுஞ் சிறுதொழிலுமுடையபொருளாக மேலோர் தெளிகின்றனா. இவனையே அஞ்ஞானமாவரித்தது. இவனே சீவனென்று வெ

ளிப்பட்டவன். இவனே பிரமவிஷ்ணுருத்ரர்களெனவும்,தேவர்-மனுஷ்யர்-பசு-பட்சிகளெனவும்பலஜந்மங்களெடுத்துழன்று அருளைநாடியழுது உஜ்ஜீவிக்கத்தக்கவன். இவனையே அஞ்ஞானம் ஆச்சாதனம்பண்ணியதாக நமதன்பர் பிரசங்கிக்கக் கடமைப்பட்டிருக்கின்றார். இவனைவிடுத்து இவனுக்கு வேறாயுள்ள பிரமத்தை அஞ்ஞானம் ஆச்சாதனம்பண்ணியதெனவும், சீவபாவம் அஞ்ஞானத்தின் காரியமெனவும் பிரசங்கித்தமெ்த முழுமோசமென்றறிக. பிரமவிஷ்ணுருத்ரர்களை ஈசுவரமூர்த்தங்களாக நூலகள் கூறியது அத்திரிமூர்த்திகளை யதிஷ்டித்து ஸ்ரீபரமேசுவரன கிருத்யங்களை நடத்தலாலென்க. "குடங்கைநீ ரும்பச்சிலையு மிடுவார்க்கிமையாக் குஞ்சரமும், படங்கொள்பாயும் பூவணையுந்தருவாய்மதுரைப் பரமேட்டீ" என்னும் ஆன்றோர்திருவாக்கால் மேலுண்மை விளங்கும். ஸ்ரீவாசகப்பெருமான் "கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு" என்று திருவாய்மலர்ந்தருளினார். "விதித்வம் விஷ்ணுத்வம்" என்னுஞ் சுலோகத்தால் (ஹம்ஸமாகவும வராஹமாகவும் பிறந்துழன்று உன்னை மறக்கத்தக்க பிரமவிஷ்ணுக்களது பிறவிகளை யான் விழைந்திலேன் என்று ஸ்ரீசிவபெருமானை நோக்கிச்) சங்கராசாரியரும் முறையிட்டிருக்கின்றனர். இவைகளை நோக்குவார் விஷ்ணுவாதிகளை உபசாரமாக ஈசுவரஸ்வரூபமென்பார்களேயன்றி உண்மையாகக்கருதி அவலப்படார்கள். இனி ஈசுவரன் என்று வேதங்கள்கொண்டாடும் பரம்பொருள் பிரமம்-சிவம் என்னு நாமங்களையுடைய காலாவது வஸ்துவென்பதே மேலோர் துணிவென்றறிக. இதுநிற்க.

இவர் "சீவபாவம் ஈசுவரபாவம் இரண்டும் அஞ்ஞானத்தினதீனமாம்" என்று கூறியிருக்கின்றார். முன்னே இவர்செய்த சீவபாவப்பிரசங்கம் முரணி யழிந்ததுபோல ஈண்டுப் பெறப்பட்ட ஈசுவரபாவப் பிரசங்கமும் அவலமேயாம். எங்ஙனமெனின், அஞ்ஞானத்தி னதீனமாகிய சீவனுக்குப் பந்தமோக்ஷமுண்டென்று இவர் பிரசங்கித்தவாறு அவ் வஞ்ஞானத்தினதீனமாகிய ஈசுவரனுக்கும் பந்தமோக்ஷ முண்டென்று பிர

சங்கியா தொதுங்கிறூர். "அவித்தையாவரணம் பண்ணுகின்ற தால் சீவனிடத்துப் பந்தமுண்டு ஈசுவரனிடத்து அஃதில்லை" என்றிவர் பிரசங்கித்தமையே அதற்குச் சாட்சியாம். பந்த முத்தி யெய்தாத ஈசுவரனை அஞ்ஞானத்தி னதீனனென்று கூறிய வாபாசத்தை நோக்கியே இவனை யாமதிகமாக அலட்ட விசைந்தாம். இம்மட்டே யமையாம லிவர் "சுத்தசத்வ குணப்பிரதானத்துவத்தால் மாயையென்றும், மலினசத்துவகுணப் பிரதானத்துவத்தால் அஞ்ஞானமென்றும் அவித்தை யென்றுஞ் சொல்லப்படும்" என்று பிரசங்கித்திருக்கிறூர். அஞ்ஞானமென்பதும் அவித்தையென்பதும் பரியாயபதங்களெனவும்,இவ்வஞ்ஞானம அல்லது அவித்தையி னுபாதியால் சீவனுக்குப் பந்த முண்டாகிறதெனவும, மாயோபாதியால் ஈசுவரனுக்குப் பந்தமுண்டாவதில்லை யெனவும் பிரசங்கிக்கு மிவரது மதத்தோடு "சீவபாவம் ஈசுவரபாவம் இரண்டும் அஞ்ஞானத்தி னதீனமாம்" என்று பிரசங்கித்த இவரது மதம் விரோதிப்பது எமக்கு அதிக துக்கமாகவே யிருக்கின்றது. மீண்டு மிவர் "அவித்தை-அஞ்ஞானம்—மாயை என்பன ஒன்றற்கே பரியாயம்" எனவும் பிரசங்கித்திருக்கிறூர். ஒன்றற்கே என்றது எதற்கு? அதனை விரித்தோதிலர். அஞ்ஞானம் அல்லது அவித்தை ஜீவனதறிவை மறைப்பதும், மாயை அவ்வஞ்ஞானத்தைச் சிறி தகற்றுவதுமாகையால,அஞ்ஞானத்துக்கு மாயையைப் பரியாயமென்றதும் மாட்சி பெற்றிலது. அன்றியும், பந்த மெய்தாத ஈசுவரனுக்கு உபாதியாய் நின்ற மாயையோடு சீவனுக்குப் பந்தத்தைப் பிராப்தப்படுத்தும் அஞ்ஞானத்தைப் பரியாயமென்றதும் யாவரும் அருவருக்கத் தக்கதாயிற்று.

இனி இவர்செய்த வேதாந்த தத்வபரிசோதனையில் சுத்த சத்வகுணப்பிரதானத்துவத்தால் மாயையும்,மலின சத்வகுணப்பிரதானத்துவத்தால்அஞ்ஞானமுங்கேட்கப்படுமென்று பிரஸ்தாபித்ததும் பிழையாம். சுத்தசத்வகுணமும், மலின சத்வகுணமுங் கேட்கப்பட்டவாறு சுத்தராஜஸ மலினராஜஸ குணங்களும், சுத்த தாமஸ மலினதாமஸ குணங்களுங் கேட்

மப்படுங்கால், அவைகளை முறையே எவ்வெப்பெயர்களா லி வராதரிப்பாரென்பது எமக்கு விளங்கவில்லை சத்வம சுத்த மாகவும் மலினமாகவும்பிரிந்தமையும், அவற்றிற்குக் காரணமு மிவர்கண்டுரையாமையா லிவரது குழப்பு ஞானம் அதிகமாக ஆடம்பட நேர்ந்தது இவர் மற்றோரிடத்தில “இரஜோகுண த மோகுணங்களைத்தாழ்த்தித் தான் மேலிட்டிருப்பதுயாது அதுசத்வ குணமெனப்படும். சுத்த சத்துவ குணத்தினுல் ஞானேற்பத்தியாவ தால் பிரகாச சுபாவமுடையது சத்துவகுணமாம்” என்று வரை ந்திருக்கின்றனர். இவர் அதிசயமாகப் பூஷித்த சத்துவகுணத் தையும், ஹேயமாகத் தூஷித்த இராஜஸ தாமஸ குணங்களை யும் “த்ரைகுண்யவிஷயாவேதா:” என்று கீதையில் கிருஷ்ணா நிஷேதித்துவிட்டனர். இதனுல், பூர்வபக்ஷியினது சத்வகுண ம் தாழ்ந்துவிட்டது. இத்தகைய சத்வகுணத்தைத் தாம்தே டிக்கொண்ட ஈசுவரனுக்கு இவர் மானியமாகவிட்டது அவ் விசுவரனது அதிர்ஷ்டமேயாம். இவ ரெத்தனை விதமாகப் புர ண்டு பேசினும் பேசட்டும். இவர் “ஈசுவரபாவம் அஞ்ஞானத்தி னதீனமாம்” என்றமே உள்ளத்தைக்குழப்புகின்றது. இவரது பிரசங்கத்தால் இனி ஈசுவரனை அஞ்ஞானி - பெத்தன் - அக ங்காரி என்று கொள்ள இடமுண்டாகிறதன்றி, சர்வஞ்ஞன் - அந்தரியாமி - சதாமுத்தன் என்று கொள்ள இடமுண்டாக வில்லை. இப்படி வீண் விபரீதத்திற் கிடங்கொடுத் தழியு மிவ ரது பிரசங்கத்தைச் சாதுக்கள் வெறுப்பது எமக்குப் பரிதா பமாயிருக்கின்றது. இனிமேலுஞ் சைவா சொலிக்கு வராம லடங்கி வாழ்வாராக.

இவர் கூறிய பிரஹ்மலட்சண ஈசுவரலட்சணங்கள்சைவர் கூறுஞ் சிவலட்சணத்தி லடங்கி யொதுங்கலால், இவரது மா யாவாதத்தைப்பசுஞானமென்று சைவநூல்கள்கூறியது ஸா மஞ்சஸமேயாகியது. தேகேந்திரியப் பிராணுந்தக்கரணங்கள வரையிலுள்ளபொருள்கள் ஜடமாகிய பாசகாரியங்களும், இ வற்றைகடந்தசீவன் பாசபத்தனுகியபசுவு மாயினமையால், முறையே தேகமுதல் அந்தக்கரணம்வரையிலுள்ள ஜடங்

களை மெய்ப்பொருளென்று வாதிடும் உலகாயதன் முதலினோரைப் பாசஞானிகளெனவும், ஆன்மாவாகிய பசுவைப் பரமபொருளென்று வாதிடும் ஏகான்மவாதிகளைப் பசுஞானிகளெனவும் அழைப்பது விவேகிகள் சம்மதமாகத் தட்டில்லை.

உத்தமவாததூலவாதூலம்.

"நீயோ மலமறைப்பி னின்றழியு மான்மாவை
வாயோவா தென்றும் வதறியே—பேய்போலக்
கத்துவையே லொன்றில்லாக் காரணமென் றென்னேநீர்
பித்துரையிங் கார்கொள்வார் பேசு."

"பாசத்தைக் கண்டும் பசுவையே தான்கண்டும்
பேசுவதை யாம்கொள்ளோம் பேதையே—ஈசன்
உடையா னெனக்கண் டுருகிப் பணியோம்
கடையரைப்போற் கண்கலங் காமல்."

தன்னைச் சிவமென்னத் தானறிந் தோராமல்
தன்னைச் சிவனுடைமை தானென்றே—தன்னை
அறியா தறிவ தறியாதாய் வேண்டாம்
பிறிதொரு காட்டா தடக்குன் பேசு."

என்னும் வெண்பாக்களையும் பரியாலோசித்திடுக. இவைகளைத் தேரு நுட்பமுடையார் பூர்வபட்சியினது பிரசங்கத்தை யப்பொருளெனமதிப்பது கஷ்டமேயாம். இவரது பிரசங்கமொவ்வொன்றும் இப்படியே அஸந்தர்ப்ப ஸ்திதியிலிருப்பதை விவேகிகளறிவார்கள். இதுவரையில யாமெடுத்துக்காட்டிய பகுதிகளே அவரது விவேகஞானத்தின் வெளிச்சத்தைப் புலப்படுத்தி விட்டனவாயினும், இன்னு மிரண்டொரு விஷயத்தைமாத்திர மெழுதிக்காட்டி முடிவுசெய்து உபரதி யடைவாம்.

## பூர்வபட்சம்.

"யாதொருஆன்மா சர்வத்தையும் பிரகாசிப்பிக்கின்றதோ அது பிரகாசரூபமாம்; ஆன்மா பிரகாசரூபமன்று: பின்னையோசடமாம்; அதன்கண் ஞானகுணமுண்டு; அந்தஞானத்தால் ஆன்மாவும், அநான்மாக்களும் பிரகாசிக்கின்றனவெனின்;-இங்ஙனங் கூறா நிற்பவரா

ஆன்மாவின் ஞானகுணம் நித்தியமா? அல்லது அநித்தியமா? என்று வினவுவாம்: நித்தியமெனின்;—ஞானம், ஆன்மாவின் சொரூபமென்றேசித்தித்தது. என்னை? இதுநியமம்: யாதொன்று ஆன்மாவின் வேறோ அஃதநித்தியமாம். ஞானத்தை ஆன்மாவின் வேறாகவங்கீகரிக்கில், அநித்தியமேயாம்; ஆதலால், நித்தியமாகவொப்பி ஆன்மாவின்வேறாக ஞானகுணமுண்டென்னல் பொருந்தாது. அநித்தியமாகவங்கீகரிக்கில் கடாதிகள்போலுஞ் சடமாம்; யாதொன்றநித்தியவஸ்துவாமோ அதுசடமாம்; ஆதலால், ஞானம் அநித்தியமென்னல் பொருந்தாது. பின்னையோவெனின்;—ஞானம் நித்தியமேயாம். அந்நித்தியமானஞானம் ஆன்மாவின்சொரூபமே; அநித்தியமென்றங்கீகரிக்கில், ஆன்மாவின்கண் ஞானம் ஓர்போதிருப்பதும், ஓர்போதிராததுமாம்: ஆதலால், ஞானம்வேறுமாம்; ஞானம் நித்தியமென்றங்கீகரிக்கில், வேறாகாது. யாதொன்று குணமாமோ அது குணமுடையதன்கண் ஓர் பொழுதிருப்பதும், ஓர் பொழுதிராததுமாம்; அஃதெங்ஙனமெனின்;—வஸ்திரத்தின்கண் நீல'திகுணங்கள் ஒருகாலிருப்பதும், ஒருகா லில்லாமற்போவதும் போலாம்; அப்படிப் போகாமல் ஞானம் நித்தியமாயிருத்தலால், ஆன்மாவின் சொரூபமென்றே கொள்ளற்பாலதாம். எப்படி உஷ்ணத்தன்மையை விடுத்து அக்கினி ஒருபொழுது மிராமையால் உஷ்ணத்தன்மை அக்கினியின்சொரூபமோ அப்படிஞானமும் ஆன்மாவின் சொரூபமாம்:"

## சித்தாந்தம்.

இவர் "யாதொருஆன்மா சர்வத்தையும் பிரகாசிப்பிக்கின்றதோ அது பிரகாசரூபமாம்" என்றது பரமான்மாவை. பிரமம ஆன்மா என்பன இவருக்கொருபொருள். யாம் ஆன்மா என்றது பாசபந்தமுடைய பசுவை. பரமான்மா கடவுள். இவரது மதத்தில்ஆன்மா-பரமான்மாஎன்னும்பேதங்கிடையாது. எமதுசித்தாந்தசைவத்திற்கூறப்படும் பசுவாகிய ஆன்மாவையே இவர் பரம்பொருளாகத் துணிந்திருப்பதை யெடுத்தநுவதித்து,மேல் கОக-வது பக்கத்தில விசதப்படுத்தியிருக்கின்றோம். இனி இவர் பிரஸ்தாபித்த ஆன்மா சர்வத்தையும் பிரகாசிப்பியாது. அது பிரகாசரூபமாயினும், அகண்டப்பிரகாச மதற்கின்று. ஆன்மாவுக்குப் பிரகாசமென்பது அறிவுதான். அவ்வறிவு மலத்தான் மறைக்கப்பட்டு மலினமடைந் திருத்தலால்,

தான் பிரகாசிப்பதே கஷ்டம். இது பிறவற்றையும் பிரகாசிப்
பிக்குமென்பது சர்வாபத்தமாம். பிறவற்றைப் பிரகாசிப்பிக்
கு மதனை யிருளாவரிக்கமாட்டாது. அங்ஙனமின்றி யிருட்
கேவலசகலமெய்தலா லதற்கு நிர்மலப்பிரகாசங்கூறுதல் நி
ரஸ்தம். இனி இவரது ஆன்மாவுக்குப் பிரகாசமின்றெனவும்,
அது ஜடமெனவும, அதற்கு ஞானம குணமெனவும் யாரோ
சொல்வதாகப் பிரஸ்தாபித்துத் ஆக்கித்தார். ஆன்மாவை ஜ
டமென்று கூறினவர் யாவா ? ஜடமென்பது ஒருகுணம. ஞா
னமுங் குணம் ஒருபொருளுக்கு ஜடகுணத்வதையொப்பின
ஸா அதனேடு ஞானகுணத்தைப் பொருப்ப ஆவசியகமின்று.
ஞானம குணமாகுகையில, அதனையுடையது குணியாகும்.
குணியெனறு வெளிவருமொன்றை ஜடமென்று ஒருவருங்
கூறுர். இங்ஙனமாக, இவா ஒருவர்மேலேற்றித் தமது விசார
ணையை வெளிபடுத்திக்கொணடது பரிகாசமென்க. இது
நிற்க.

ஞானமாகியகுணம நித்தியமா அநித்தியமா என்று அ
வா விசாரித்த முடிவையும் பரிபாலிப்பாம். ஞானம் நித்
தியமாயின், அது ஆன்மாவின் சொரூபமாம என்றனர். அது
கூடாது. சொரூபம என்பது குணத்தையுடைய குணிக்கே
பொருந்தும். குணியுங்குணமும் வொருபொருளாகா. இனி யி
வர் யாதொன்று ஆன்மாவின் வேறு அது அநித்தியமாமெ
ன்றனர். யாம் ஞானமாகிய குணத்தை ஆன்மாவின் வேறு
கக் கூறுகிலேம். ஆகையால, எமதான்ம ஞான குணத்துக்கு
அநித்தியப்பிரசங்கமவர இடமில்லை. யாம ஞானம் ஆன்மா
வின வேறனதென்றும், அது நித்தியத்தைக் கடந்ததென்
றுங் கூறேமாயினும், ஆன்மாவின் வேறுயுள்ளதற்கு நமதன்
பர்கூறிய அநித்தியப்பிரசங்கத்தை அங்கீகரித்திலம். ஆன்மா
பசுவாகையால்,இதற்கு வேருயுள்ளவை பதியும்,பாசமுமாம்.
இப்பதிபாசங்கள் பசுவைப்போல் நித்தியப் பொருள்களேயா
ம். ஆன்மாவுக்கு வேறுகாதஞானமாகிய குணமிருப்பதுபோ
லப் பரமான்மாவாகிய சிவனுக்கு வேறுகாத ஞானகுணமும்,

பாசமாகிய மலமாயாதிகளுக்கு வேறுகாத ஜடகுணமும் உளவென்பது மேலோர் துணிவு. ஒவ்வொருபொருளினிடத்துங் கேட்கப்படுங்குணங்கள் அப்பொருள்களின் வேறுகாமையால், அவற்றினிடத்தி லநித்தியப்பிரசங்கஞ் செய்தலஸப்யமென்க. இவர் யாதொன்றநித்தியவஸ்துவாமோ அது ஜடமாம என்று பிரசங்கித்தனர். இவர் அநித்தியசப்தத்திற்கு இன்மையென்று பொருள்கொண்டது தவறு. திரிவு என்பதே நிலைபொருளென்றறிக. பொன்னானது கடகமாயும், பதக்கமாயும், சரப்பளியாயுந் திரியுங்கால அதனிடத்து அநித்தியபிரசங்கங் கேட்கப்படும். இவ்வநித்தியப்பிரசங்கம் பொன்னினிடத்துண்டாகிய விகாரங்களுக்கேயன்றி அப்பொன்னுக்கலல. பொன்னினிடத்து நித்தியபிரசங்கமே நிலையுதலெபறும். இவ்வுபமானவாயிலாகப் பசுபாசங்களினிடத்துண்டாகும் அநித்தியப்பிரசங்கங்களையுமறிந்தடங்குக. பாசத்தினிடத்துண்டாகும் அநித்தியப்பிரசங்கம் பிருதிவிமுதல் நாதமீறான தத்துவகாரியங்களாலாம். பசுவினிடத்துண்டாகும் அநித்தியப்பிரசங்கம "புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகி" என்று பெறப்பட்ட பிறவித்தொடர்ச்சிகளாலாம். உண்மையில் பதிபசுபாசப் பதார்த்தத்திரயங்களும், அவற்றுள், பதியினிடங் கூறப்படும் (அறிவிக்கு) ஞானகுணமும், பசுவினிடங் கூறப்படும் (அறிவித்தாலறிய) ஞானகுணமும், பாசத்தினிடங்கூறப்படும் ஜடகுணமும் நித்தியமென்பதே சித்தாந்தம். இதனால், இவர் குணிகுணங்களை யொன்றென்றதும, ஜடகுணத்துக்கு அநித்தியபிரசங்க முண்டென்றதும அவலமேயாமென்க.

இனி இவர் யாதொன்று குணமாமோ அது குணமுடையதன்கண் ஓர்பொழுதிருப்பதும், ஓர்பொழு திராததுமாம என்று கூறியதையும் விசாரித்தொழிபபாம். இவரது பக்ஷத்தைச் சாதித்தற்கு இவர் வஸ்திரத்தின்கண் ணுண்டாகும நீலாதி குணங்களுக்கு அநித்தியப்பிரசங்கமும், அக்கினியினிடத்துண்டாகும் உஷ்ணத்துக்கு நித்தியப்பிரசங்கமுமுண்டாயிடுதலைச் சான்றுகூறினர். நீலாதிகளை வஸ்திரத்தினது

குணமெனவும், அது அவ்வஸ்திரத்தினிடத்தில் ஓர்பொழுதிருப்பதும் ஓர்பொழு திராமற்போவதுமாகின்றதெனவும், உஷ்ணம அக்கினியினது குணமாகாமல் அதன் சொரூபமாயினதெனவும, அதனால் அது ஓர்பொழுதிருப்பதும், ஓர்பொழு திராமற்போவதுமாகிய பிரசங்கம் கேட்கப்படுவதில்லையெனவும விளக்கிக்காட்டினார். இவர் "பதார்த்தகுணசிந்தாமணியை" பார்த்திராதவர்போலும.

"சீத முறுங்குளிர்ச்சி சேருமே சித்தத்து -
போதத் தெளிவாய்ப் பொருந்துங்கா—ணோதமொடு
விர்த்தும் வளர்ந்துவரு மேனியி லெய்யுமிக்குஞ்
சித்துமழை நீராற் றெளி."

இது மழைநீரின் குணம். இதுபோன்ற பாடல்கள் பலவுள. இம்மழைநீரின் குணத்தை யிந்நின்று மிவர் ஓர்பொழுது பிரிந்தும, ஓர்பொழுது சேர்ந்துங் காணபாரபோலும். இதனல், குணமென்பது ஒருபொருளினிடத்து ஓர்பொழுதிருப்பதும, ஓர்பொழு திராமற்போவதுமாமென இவர்செய்த வ்யாக்ஷேபம பொய்யாய்பொழிந்தது. இவரது பட்சத்தைச் சாதிததற்கு "வஸ்திரத்தின்கண் றுண்டாகு நீலாதி குணங்கள்" என விவரொன்று காட்டினரன்றே? வஸ்திரத்துக்கு நீலாதிகள் குணமாகா. நீலம - பச்சை - கறுப்பு முதலிய சாயங்கள் வஸ்திரங்களில் வந்தேறுவனவாம. செம்மரத்துக்குச் செந்நிறமும், கறுப்பு மரத்துக்குக் கருநிறமும் ஓர்பொழு திருப்பனவும், ஓர்பொழு திராதனவுமாகமாட்டா. செம்மரத்தின் செம்மையும, கறுப்புமரத்தின் கருமையும அம்மரங்களின் சொரூபமென்றே இனி யிவர் கூறுவார்போலும். இமமட்டோ, இவர் அக்கினியிலுள்ள உஷ்ணம பிரிபடாமையால், அது அவ்வக்கினியின் சொரூபம் என வொன்று கூறியுள்ளாராகையால், அதனையும் விசாரிப்பாம். ஒருபொருளினிடத்திற் பிரிபடாதிருக்குஞ் சுபாவத்தை (தன்மையை) பதார்த்தகுண சிந்தாமணியாலும், செம்மரம் - கருமரம்என்பவைகளாலுங் குணமென்றுகொள்வதேயுசிதம் என்று மேலே தெரிவித்தோம். இப்போ

தெடுத்துக்கொண்டஅக்கினி-உஷ்ணம்”என்பவை ஒருபதார்த்தமும்,அதன்றன்மையுமாகக் காண்டலால்,அவற்றினிடத்திற் குணிகுணசம்பந்தமே கொள்வர்மேலோர். அக்கினியின் சொரூபம்உஷ்ணம் என்றது அஸங்காத்மவாதமேயாம். வேதத்தில், “பராஸ்யசக்திர் விவிதைவச்ரூயதே - ஸ்பாவகீஜ்ஞானபலக்ரியாச” என்று கூறப்பட்டிருக்கின்றது. இதில், பரனுடைய சக்தி அநந்தவிதமாகக் கேட்கப்படுகின்றதெனவும், அவை பராசக்தி - ஞானசக்தி - பலசக்தி - கிரியாசக்தியெனவாமெனவும் வெளியாகின்றது. “ஸ்வாபாவகீ” என்றது பராசக்தியை. இதுமஸஷ்டி. இதில், ஞானம் - பலம் - கிரியை என்பன வியஷ்டி.வியஷ்டித்தன்மைகள் ஸமஷ்டியில் அந்தர்க்கதம். ஸமஷ்டிவியஷ்டிகளாகிய சக்திகளைக் குணங்களென்னுது சொரூபம் என்றது யாங்ஙனம் அடுக்கும்? வேதம் சக்தியென்றறுதியிட்டுரைத்த வொன்றை நமதன்பர் சக்தியாகாதெனமறுத்தல் சாலுமோ? “சத்திதன்வடிவேதென்னிற் றடையிலாஞானமாகும்” என்றனர் சைவப்பெரியாரும். ஓர்போதிருப்பதும, ஓர்போதிராதுமாகிய வேறுபாடுடையதன்று ஞானகுணம என்பதை நிறுத்தவேயன்றோ மீண்டுமச் சைவப்பெரியார் “காயமோமாயையன்று காண்பதுசத்திதன்னால்” என்று கூறிமுடித்தனர்? மாயையிலுருவுண்டாயின்,அது ஓர்போதிருப்பதும், ஓர்போதிராததுமாகிய வேறுபாடெய்தும.இதனைப் பிரதிஷேதித்துவிட்டமையால,இது பரனுக்குவேறாய், அப்பரனது அபின்னசக்தியாகா தொதுங்கியது. இதனைப் பரனதுருவமெனவாவது,குணமெனவாவது யாம்குறுகிலேம். ஞானமாகியசக்திஅல்லது குணமுடையவர் இவனென்பதே விவேகிகள்யாவருக்கு மொப்பமுடிந்தகருத்தாம். பரனதுகுணம் ஜடமன்றெனவும், அது அப்பரனிடத்தி லோர்பொழுதிருப்பதும், ஓர்பொழுதிராததுமாகிய வேறுபாட்டற்றதெனவுந் தெளியவேண்டின், “கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்-றாளை வணங்காத்தலை”என்னுங் குறள்வெண்பாவை மனத்திற்கொண்டு குணப்படுவாராக. “என்குணங்களாவன தன்வயத்தனுதல்,

னொருவனும,சமலனுகிய அஞ்ஞானவடிவின னொருவனுமாக இருவர் (பரனுஞ்சீவனும்) உற்பத்திரகிதர்களாய் விளங்குகிறார்கள் எனவும், "அஜாமேகாம்லோஹிதச்சுக்ல க்ருஷ்ணாம் பஹ்வீம்ப்ரஜாம் ஜநயந்தீம்ஸ்ரூபாம் - அஜோஹ்யேகோ ஜுஷமாணோऽநுசேதே ஜஹாத்யேநாம் புக்தபோகாமஜோऽந்ய:" என்னுஞ் சுருதியால பதிபசுபாசம் மூன்றும் உற்பத்திரகிதமான அநாதிநித்தப் பொருள்களெனவும், அவற்றுள்,பதி சாட்சியாயுள்ளதும்,பசு போகத்தை புசிப்பதும்,பாசம் அந்தப்போகரூபமாயிருப்பதுமாக அறியத்தக்கதெனவும்பெறப்படுகின்றது. இந்தச் சுருதிஸாட்சிகளால மாயை உற்பத்திரகிதமானது என்று சித்தித்தமையால், இதனையறியாமலோ,அறிந்தும் பொருடெரியாமலோ, தெரிந்தும் மனமிசையாமலோ,இசைந்தும வினைவழிவிடாமலோ கமதன்பர் தப்பியவழியையேயொப்பி நடக்கப்பார்க்கிறார். மாயை உற்பத்திரகிதமான அநாதிநித்தியமாகையால் அதற்கு உற்பத்திவிசாரியாது அஸங்கதமென்றறிக.

இனி இவரது விசாரத்தில், புத்திரனிடத்தில் பிதாவுக்கு உற்பத்திகூற முடியாதாற்போல மாயாகாரியமான பிரபஞ்சத்தில் மாயைக்கு உற்பத்திகூடாதென்றாரன்றோ? மாயையையே இலயபொருளாகக்கொண்டிருக்குமிவர் மாயாகாரியமான பிரபஞ்சமென்று கூறியது என்னை? மாயாகாரியமான பிரபஞ்சம் என இவர்கூறியது மலடிமைந்தனை சாத்தன் என்பது போலாம் இவர் புத்திரனிடத்தில் பிதாவுக்கு உற்பத்திகூற முடியாது என்றவுபமானமும் விருத்தமெனக. எங்ஙனமெனின், இவர் மாயைக்கு உற்பத்திகண்டறியாது தியங்கியதுபோலப் பிதாவுக்கு உற்பத்திகண்டறியாத பட்சத்தில், மூடத்தனத்தினுலோர்கா லப்பிதாவுக்கு அவன்புத்திரனிடத்திலே யுற்பத்தியைச்சங்கிக்கலாம். அப்பிதாவுக்கு அவனுடையபிதாவை யுற்பத்திஸ்தானமென்றெவருமெளிதிற் கண்ணுரு மநுபவஸித்தமான விப்பிரபஞ்சத்திலதற்குமாறாக விவர்கொண்டசங்கைவிபரீதமேயாம்.அன்றியும்,மாயாகாரி

யமான பிரபஞ்சத்தில் மாயைபிறந்தது என்றுகூறு மோர்மத முமின்று. இவைகளை யோசித்தபேர்கள் இவரது மாயாவிசா ரத்தைக் கடைக்காலிலலாத கட்டடம்போல்வ தொன்றாக வொதுக்கப் பின்னிடாரென்க.

இனிச் சேதனத்தில் மாயைபிறந்ததோவென்று சங்கி த்துச் சீவபாவமும், ஈசுரபாவமும் மாயையின்காரியமாகலி ன், மாயையின்காரியம் எப்படி மாயைக்கு உற்பத்திஸ்தான மாகுமென்று சமாதானந் தேடிக்கொண்டாரன்றோ? இது வும் அசங்கதமேயாம். சேதனத்தில் மாயைபிறந்தது என் பது யாவரதுமதம்? இவரது மதாபாஸகரேயன்றோ அவ் வாறு கூறித்திரிபவா? சகசீவபரங்கள் பிரமமாகிய தன்னி டத்திற் கற்பிதம் என்று கூறுபவர்யாவர்? ஈண்டுச் சகம் என் றதே மாயையாம். இவரும் இவரது பிரசங்கமுடிவில்" மா யை அவிவேகத்தாற் றோனறுவதால்" என்று கூறினாராகலினி வரதுமதமே சேதனத்தின்கண் மாயைபிறந்தது என்பத ற்காதாரமாய் நின்றதெனலசித்தம். அவிவேகம் தனியேபிரி ந்து நிற்பதொரு பொருளன்று. இது ஜடம். இதற்குச்சீவனம் அவிவேகி என்பவனிடத்தில். இவ்வவிவேகத்தை அவிவேகியி னிடத்தில் விலட்சணமாகப் பார்த்தால, அவன் அவிவேகி யாகாது சேதனமாகவேநிற்பன். அந்தச்சேதனனிடத்தில அ விவேகம் பிரிபடாது வர்த்தித்தலால, அவனிடத்தின் மாயை பிறந்ததாகப் பொருள்கூறி அவர் சாதிக்கவேண்டியது. இவ் வாறு சாதிப்பதனமுன்னர் அவிவேகம எதினின்றும் பிறந்த து என்பதையுஞ் சாதித்துக்கொள்ள வேண்டியது. மாயை எ தினின்றும்பிறந்தது என்று முடிவுசெய்யத்தலைப்பட்ட விவர் க்குஅத்தோடுதொலையாமலஅவிவேகம்எதினின்றும்பிறந்தது என்பதற்கும் முடிவுகூற நேர்ந்தகஷ்டத்துக்கு யாம்அதிகவிய சனப் படுகிறோம். அன்றியும, சீவபாவமும், ஈசுரபாவமும் மா யையின்காரியம் என்று இவரடிக்கடிப் பிரஸ்தாபிப்பதால், எ மக்குத்தலைநோயுண்டாகின்றது. இவரது கர்ணகடூரமானஇந்த ப்போதத்தை முன்னரோரிடத்தி லநுவதித்து அலசியிருக்கி

ன்றோம். சீவபாவம்,ஈசரபாவம் என்றதும் பிசகு. சீவன் ஈசன் என்றே கூறவேண்டியது. இச்சீவேசுரர்கள் நித்தியாகளாகையால், இவர்களை மாயையின்காரியமெனவாவது,இவர்களின்காரியம் மாயையெனவாவது தெரிந்தவர்கள் கூறமுந்தார்கள். இவர் மாயையுண்டானவிதத்தைக் காணுமுன்ன ரம்மாயையாற் சீவேசுரர்களுண்டான விதத்தை ட கணடுபிடித்த அருமையைநோக்கி இவருக்கு என்னசமமானஞ்செய்து உலகம திருப்தியுண்டுபண்ணுமோ தெரியாது? இதுநிற்க.

இவர் சுத்தசேதனத்திலாவது மாயைக்கு உற்பத்தியுண்டோ என்று சங்கித்துச் சுத்தசேதனம் அசங்கமாயும், அக்கிரியமாயும், நிர்விகாரமாயும் இருப்பது எனவும், அதனிடத்தில் மாயைபிறந்திடின், அச்சுத்தசேதனம விகாரியாமெனவும, அன்றியும, மோட்சதசைக்கண் பின்னரும் மாயையுண்டாகாநிற்குமெனவும், அஃதுண்டாகவே மோக்ஷநிமித்தமான சாதனங்கள் நிஷ்பலமாம எனவுஞ் சமாதானந்தேடி ஸந்தோஷித்தாரன்றோ? இதனையும் விசாரிப்பாம. ஈண்டிவர் சுத்தசேதனபபிரசங்க மாரம்பித்தமையால், இதற்கு முன்பிரசங்கித்த சீவேசுரர்கள் அசுத்தசேதனங்களென்ப திவர் மதமாகின்றது. "அஞ்ஞானம் சுத்தப்பிரமத்தி னுசிரிதமாய் அச்சுத்தப்பிரமத்தைத்தானே ஆச்சாதனம் பண்ணுகின்றது" என்று இவர்முன்பு கூறியிருக்கின்றமையால, இவரது சுத்தப்பிரமந்தானே அசுத்தபபிரமம், அலலது அசுத்தசேதனமாகக் கெட்டுச் சீவேசுரர்களாகிய சித்தாந்தம் ஏற்படுகின்றது. மாயை இல்லையென்று சாதிக்கத்தொடங்கி, அம்மாயையின் குடும்பவிர்த்தியை நமதன்பரெடுத்து விரித்தது ஆச்சரியமாயிருக்கின்றது. இவருன்னியதொன்று, எடுத்துப பன்னியது மற்றொன்று. "அதிமதிநுட்பமோ டகிலேகற்பினும்,விதியது வசத்தால் விதிவிலக்கயர்ப்பார்" என்பதை யார்தான் கடக்கலாம்? இவரது பிரசங்கமுழுதும் மயக்கநிலையிலேதானே மன்றுடுகின்றது. அதனை விரிப்பாம். சுத்தசேதனம் அசங்காதி லட்சணங்களையுடையதாகையால் அதில் மாயைபிறந்திடின், அதுவிகாரியாமென்

வோர்பொருளைப் பந்தமில்லாததென்றும், சுத்தசைதன்ய மென்றும் எழும்வாதம் எந்தஸதஸில் கனம்பெறும்? இவா சுத்தசைதன்யமென்று கொண்ட பொருளினிடத் தேறியிரு க்கும் பந்தமேயன்றோ மாயையாவது? சைதன்யமுள்ளவன் றே அதனைப்பற்றியிருக்குஞ் சகசமலத்தை எப்படி யுண்டா யிற்றென்று இவர்விசாரிக்கப்புகுந்தது புதுமையினும் புதுமை யேயாமென்க. இம்மட்டோ, இவர் "சுத்தசேதனத்தின் மாயை பிறந்ததுண்டாயின, மோக்ஷதசையின்கண் பின்னரு முண்டாம்" என்றதி லின்னுமொரு விசேடமுண்டு. என்னெனின், மாயை முன்னு முண்டாகவேண்டாம், பின்னுமுண்டாகவேண்டாம். அம்மாயைக்கு வேறான எதனை நிவிர்த்தியிலுண்டாகத்தக்க து மோக்ஷஸாமிராஜ்யம்? எதனை நிவிர்த்திப்பது மோக்ஷஸா தனம்? அதனை இன்னது என்று விளக்கவறியாமல் மாயை யை இல்பொருளென்று தாபிக்க வெழுந்தது இழுக்கு ஞான மென்பதே சித்தம். இன்னும் விரிக்கிற்பெருகும். இதுநிற்க.

நாதன்பா "சைவாநுக்கிரக்குமாறு" என்று எழுதி ஸ தோஷித்தாலன்றா உடனே அவருக்குக் கைகூடும்படி இதுவ ரையில் யாம் செய்ததேதொதும். ஆயினும் ஒன்றுசொலலு கின்றோம். அவாதுநூலின் முதலிடைகடையில், முதலிடை களைத்தொட்டு விசாரமுகத்திற் கொண்டுவந்து தோர்ந்தமுடி வுகளை யொருவாறு பரிஷ்கரித்தோமாகையால், இனிக்கடை யையுஞ் சற்றுச் சீர்தூக்கிப பார்த்து, அதனெறுதுக்கு நிலை யை யாவருக்குங்காட்டி யுபரதியடைவாம்.

## பூர்வபட்சம்.

"உலகில் தீர்த்தங்களோ அநந்தம்; அவவாந்த தீர்த்தத்தி லும் ஆடி அவைகளால்வரும் பேறடைதல் யாவர்க்கும் அரிது: குரு பாதோதகந் தலைமேற்கொள்ளப் பெறில், அவ்வளவிறந்த தீர்த்தப் பேறும் பெறுதலெளிதாவதுபோல, அளவிறந்த ஞானநூல்களையு மாராய்ந்து அவற்றின் பொருள்களையறிதல் யாவர்க்குமரிது. இக்கை வல்யஞான நூலினைக்கற்கப்பெறில், அளவிறந்த ஞானநூற்களனைத் தையும் இதனுற்பெறுதல் யாவர்க்குமெளிதாகும்,"

## சித்தாந்தம்.

அளவிறந்த தீர்த்தங்களாவன கங்கை - யமுனை- துங்கபத்திரி - கிருஷ்ணை-காவிரி முதலியன. இப்புண்ணியதீர்த்தங்க ளெல்லாவற்றினு மாடியபயனை யொருவன் றனது குருபாதோதகத்தைச் சிரமேற்கொள்ளலாற் பெறுமென்பது உபசாரம். குருபாதோதகம் பரமபவித்திரமாயினாகுக. அக்குருவால் விரும்பிச் சிரமேற்கொள்ளப் பெறுவதனால் அக்குருவினது சர்வபாபங்களையும் க்ஷயிப்பித்துப் புனிதவடிவமாய் விளங்குங் கங்கையாதிய தீர்த்தங்களுக்குக் கூறுமகிமை யுபசாரமன்று. “பவாங்கபதிரும்தோயம் பவித்ரமிதிபஸ்ப்ருச :” என்று கங்கையினது மகிமை இராமாயணத்திற் கூறப்பட்டிருப்பதனை அறிந்தடங்குக. இவ்வுபமானவாயிலாகச்சாதிக்க இவரெடுத்துக்கொண்ட உபமேயத்தைநோக்குழி அளவிளறந்த பூர்வஞானநூல்களினிடத்துக் கூறும்மகிமை உண்மையும், இவரது கைவலய ஞானநூலினிடத்துக் கூறும்மகிமை உபசாரமுமாயிடுதலே சிறந்திடும். இவர் கைவல்யத்துக்குக் கௌரவங்கற்பிக்க ஆசைப்பட்டு உள்ளதையும் போக்கிக்கொண்டவராயினரிதென்கொலோ? அன்றியும் இவர் தனது கைவலயநூலினைக் கௌரவித்தற்குப்புண்ணியதீர்த்தங்களையெடுத்துவமித்துத் துதித்ததை மறந்து, மற்றோரிடத்தில் “தேவார்ச்சனை முதலியனவும், ஜபமுதலியனவும், மூர்த்தித்தியானாதிகளும் மித்தைதான்” என்று பிரசங்கித்திருக்கிறார். சிவார்ச்சனை - ஜபம - மூர்த்தி- தீர்த்தம - குருபாதோதக முதலியன மித்தையானால், இவற்றை யுபமானமாகக் கொண்டதொரு உபமேயப்பொருள் மித்தையாகாதொழிதல் யாங்ஙனம்? முடிவாக விவர்சாதித்த கைவலயஞானம் மித்தையாயின பண்பின்வித்தகம் சாலச்சிரிப்புடைத்தே. இவையாவும் மித்தையாகும்பொழுது இவரது வேடமும், துறவும், தவமும், ஞானமும், போதமும் மித்தையாகாமல் சத்தியமாயிடுதல் யாங்ஙனம்? எமது சைவசித்தாந்த வரம்பினின்றோர்க்கு “செம்மலர்நோன்றாள் சேரலொட்டா- வம்மலங்கழீஇ யன்பரொடுமரீஇ

மாலறநேயமலிந்தவர்வேடமு - மாலயந்தானு மரனெனத்தொழு மே" என்பது வேதசிவாகமங்கள் விதித்த விதியாமென்க. இஃது எத்துணைப்பெரியார்மாட்டுஞ் செறிந்த வநுபவநிலை யினதென்பதை யாவரோ மறுதலையாகக்கொண்டு பிணங்கா நிற்பர்? இச்சூத்திரத்துள், "அம்மலங்கழீஇ யென்றதனால் அறிவு வியாபிக்குமிடமும், அன்பரொடுமரீஇ யென்றதனால் இச்சைவியாபி க்குமிடமும், தொழும் என்றதனாற் செயல்வியாபிக்குமிடமும் பெற ப்பட்டன. செல்வப் பெருக்கமுடையார்க்கு உணவாகிய ஆன்பால் அவ்வுடம்பு நோயின்றிவளரச்செய்யு மருந்துமாதல்போல, இவ்வழி பாடு மலவாசனை சிறிதுந்தாக்குதலின்றிச் சிவாநந்தம் மேன்மேல்வ ளரச் செய்யுஞ் சாதகமாதலு முடைமையின், கண்ணழித்துரைபற்றி விதியாகவைத் துரைத்தலுமொன்று" எனவும், "காமக்கிழத்தியர் வடிவிற் காணப்படு மாடைசாந்தணிகலன் முதலாயின காமுகனை வசிகரித் தின்பஞ்செய்யுமாறுபோல, மெய்யுணர்வுடையானைக் காட் சிமாத்திரையின் வசிகரித்தின்பஞ்செய்தல்பற்றித் திருவேடத்தை யுஞ் சிவாலயத்தையும் என்றுபசரித்தார்" எனவுஞ் சிவஞான யோகிகள் அருளிச்செய்த வாய்மையறிந்து சிவஞானபோத த்தையும், அதன்வழிநூல் சார்புநூல்களையு மாராய்ந்துணரப் பெறுவாரோ பாக்கியசாலிகளாயிடுவர். இதனைக் கடைப்பிடித் து, "புறச்சமயநெறிநின்று மகச்சமயம்புக்கும் புகன்மிருதி வழியுழ ன்றும் புகலுமாச்சிரம - வறத்துறைக ளவையடைந்து மருந்தவங்க ள்புரிந்து மருங்கலைகள்பலதெரிந்து மாரணநூல்படித்துஞ் - சிறப்பு டைய புராணங்க ளுணர்ந்தும்வேதச் சிரப்பொருளை மிகத்தெளிந் துஞ் சென்றாற்சைவத் - திறத்தடைவ ரிதிற்சரியை கிரியாயோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச்சேர்வர்" என்னும் போ தத்தைச் சிந்தித்து நமதன்பருய்யும் வழிதேடி இன்புறுவா ராக. வேதாந்த மகாவாக்கியோபதேசம்பெற்று வேதாந்திக ளென்று எண்ணப்படுவானைச் சைவசித்தாந்தவரம்பினின்று சிவாலயத்தி லுழவாரப் படைகொண்டு புற்செதுக்கி வாழும் பெருந்தவர்க் கேவல்செய்தொழுகும் புண்ணியமுமெய்தப் பெறாதவரெனவன்றோ (பொய்வழிநடந்து மெய்வழிநடந்து பொ துவழிசெறிந்துநின்ற பெரியோர்) புகலாநின்றிடுவர்? இக்கருத்

தினை யுணர்த்தவேயன்றோ "எனக்கினிச் சரியையாதிகள்போதும்" என்றார் ஸ்ரீதாயுமானாரும். இவைகளையெல்லாம் சமதன்பர் இனிது பரியாலோசித்துச் "சைவர் துக்கிக்குமாறு" என்று இனியுமெழுதித் துக்கந்துக்காளாகாமல் மங்கலவடிவமாகிய சைவத்தைத்தழுவித் தாமிப்போது விவகாரமாகப் பூண்டிருக்குஞ் சைவவேடத்தையும், சிவபணியையும் பரமார்த்தமாகவே கொண்டு சிவாநந்தவாழ்வெய்திச் சுகிக்குமாறு திருவருளைச் சிந்திக்கின்றோம்.

"பன்முகச்சமயநெறிபடைத்தவரும்யாங்களேகடவுளென்றிடும்
பாதகத்தவரும்வாததர்க்கமிடும்படிநாருந்தலைவணங்கிடத்
தன்முகத்திலுயிர் வவைழக்கும் பருஞ்றும்பகடுமேய்க்கியாய்த்
தனியிருப்பவடநீழலூடுவளர்சநகனாதிமுனிவோர்கடஞ்
சொன்மயக்கமறுதீரவகைகொடுமோனஞானமதுணர்த்தியே
சுத்தநித்தவருளிப்பதாகவுளசோமசேகரநிருபாறுவாய்த் [ன்
தென்முகத்தின்முகமாயிருந்தகோனு மெம்முகத்தினும்வணங்குவே
தெரிவதற்கரியபிரமமேயமலசிற்சுகோதயவிலாசமே."

"வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே."

இந்த ஸத்கிரந்தம் ஸாதுக்கள் க்ஷேமார்த்தம் உலகில் நீடுவாழ்க. சுபம்! சுபம்!!



ஸ்ரீ ஜ்ஞாநஸம்பந்த
ஸத்குருசரணாரவிந்தார்ப்பணமஸ்து.



திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

# திருச்சிற்றம்பலம்.

*அருணந்திசிவன் திருவடிவாழ்க.*

---

## சிவஞானசித்தியார் - மாயாவாதிமதம்.

## பூர்வபட்சம்.

*" நானேபிரமமெனறுரைத்துஞாலமபேய்த்தேரெனவெண்ணி*
*ஊனேபுகுந்துநின்றுயிர்கட்குபதேசங்களுரைத்துவரு*
*மானுமதிகேடனுமாயமாயாவாதிபேயாகித்*
*தானேயுரைக்குமந்நூலினுண்மைதன்னைச்சாற்றுவாம்.* (௧)

*அறிவாயகிலகாரணமாயநந்தாநந்தமாயருவாய்ச்*
*செறிவாயெங்குநித்தமாய்த்திகழ்ந்தசத்தாய்ச்சுத்தமாய்க்*
*குறிதான்குணங்களொன்றின்றிக்கூறும்வேதந்தனக்களவாய்ப்*
*பிறியாவநுபூதிகந்தனக்காய்நின்றதந்தப்பிரமந்தான்.* (௨)

*ஒன்றுமிரவிபலபாண்டத்துண்டாமுதகத்தங்கங்கே*
*நின்றாற்போலவுடறோறுநிகழ்ந்துநிற்கும்பொருண்மேற்கண்*
*சென்றாற்போலப்புலன்களுக்குஞ்சிந்தைதனக்குந்தெரிவரிதா*
*மென்றாற்காட்டிமுதலாயவிருமூன்றளவைக்கெட்டாதால்.* (௩)

*இருளிற்பழுதையரவெனவேயிசைந்துநிற்குமிருங்கதிர்க*
*ளருளப்பழுதைமெய்யாகியரவும்பொய்யாமதுவேபோன்*
*மருளிற்சகமுஞ்சத்தாகிமருவித்தோன்றுமாசில்லாத்*
*தெருளிற்சித்தேசத்தாகும்பித்தாஞ்சகத்தின்செயலெல்லாம்.* (௪)

*உலகந்தானுநிருவசநத்துண்டாமின்றேலுதியாது*
*நிலவியுண்டேலழியாதுநிற்பதாகுமித்தையா*
*யிலகுசுத்திகனல்சேரவின்றும்வெள்ளிநின்றதாங்*
*குலவுசகமுமவிகாரம்பரமார்த்தத்திற்கொள்ளாதால்.* (௫)

*தாங்குமுலகுக்குபாதானஞ்சத்தாஞ்சிலம்பிநூறன்பால்*
*வாங்கிவைத்துக்காப்பதுபோல்வையமெல்லாந்தன்பக்க*
*லோங்கவுதிப்பித்துளதாக்கிநிறுத்தியொடுக்கத்திலதாக்கு*
*மாங்குவந்தவாறதனாற்சத்தாஞ்சகத்தினமைவெல்லாம்.* (௬)

மன்னும்பிரமத்தினின்வீறெய்வானின்வளியாயந்தவளி
தன்னினழலாயழலின்னீரதசலமாய்ச்சலத்திற்றரணியாய்ச்
சொன்னவிதனின்மருவுபூதோற்றமருர்திலன்னமா
யன்னமதனிற்றுவக்காதியாறுதாதுவாயினதால். (௭)

ஆறுதாதுக்களுங்கூடியவந்நகோசமன்னமய
மாறில்பிராணகோசமயமனோமயமதனின்மேனமயந்தான்
வேறுவருமவிஞ்ஞானமயமிவைமதனினதுதன்னிற்
கூறிவருமானந்தமயங்கோசமயம்பினகூடியதால். (௮)

கோசவுருவிற்பிரமந்தான்கூடித்தோன்றுநீமெமொரு
காசமருவுங்கடந்தோறுநின்றும்போலக்கதிரவனறனை
வீசுகிரணமுருவின்கண்மெய்யளிபட்டிடுவெப்பதிப்பற்றும்
பாசமதனுக்கிருக்குமமருமப்பாதநிபற்றுவதேடோ. (௯)

அலகின்மணிகளவைமேகவையமவடந்தபொழுதிலங்கங்கே
நிலவுமொருநாற்பலநிறமயந்தோன்றும்போலநீடுருவம்
டலவுமருவும்பதத்தாற்பனமையாகப்பிரமந்தான்
குலவுபோகபோக்கியங்கள்கொள்ளும்போன்றுகொள்ளாதால். (௧௰)

போற்றுஞ்செபலாற்பலகாமம்புணர்ந்துபோகபோக்கியத்திற்
றோற்றுநனவுகனவினுடன்சுழுத்திதுரியமெய்துமிதற்
கேற்றகாரணங்காணநோயேய்ந்தோழ்நாலொன்றெல்லாமு
மாற்றிநிற்குங்கேடின்றிவந்தபோகமாய்த்திடவே. (௧௧)

கருவியெல்லாநானெனவேகருதல்பந்தமக்கருத்தை
யொருவமுத்தியுண்டாகுமுள்ளம்வித்தாஞ்செய்தியினுன்
மருவுமாயாகாரியங்களவித்தைமாயவேமாயை
பிரியும்பிரியாஞானமதுபிறக்கும்பிறவாபேதமே. (௧௨)

ஆனகன்மவதுட்டயங்களந்தக்கரணசுத்திதரு
மோனமின்றியச்சுத்திஞானமதனையுண்டாக்கு
ஞானமதுதான்பிரமத்தைநானென்றுணர்த்துநான்பிறந்தால்
வானமதினீர்துளக்கமெனக்காணுந்தன்னைமாயையிலே. (௧௩)

தானேதானுயநுபோகந்தன்னிற்றன்னையநுபவித்திட்
டேனையுயிரோயுணர்வேயென்றொன்றுமின்றியுமாயிறந்து

வானேமுதலாம்பூதங்கள்மாயமாயாதேகின்று
நானேபிரமமெனதெளியுஞானமபிரமஞானமே. (கச)

சாற்றுமறைதத்துவமசிமாவாக்கியங்கடனையுணர்ந்தாற
போற்றியதுரியாஞெயென்றறைவதலவாறபொருளினறே
தேற்றுமதனைதெளியாதாமதெளியபபஞ்சசாதநமே
லேற்றவியமநியமாதியோகமிருநானகியற்றுவரால்." (சரு)

---

## சிவஞானசித்தியார் - மாயாவாதிமதமறுதலே.

### சித்தாந்தம்.

ஏகனேனவியமபிரிபபமயாரிக, முதலியவைமின்னெனு
மோகமானவுலாசோகமினபாம்முடிநதிடாதுமலடாகிய
காகமானதுகருங்கலினறசைபறிபதபூ காயகுஞ்சியின
ருகமாபசிதவிாக்கவாயிடைதெ ரித்தமெனறுரைசெய்தனமையே.

நீடுவேதமனவாகவேகமெனுநீதிதானிகழ்வதாகுமே
ஞுடிஞாதுருவுஞானஞேயமொமுாஞுநானமறையுமோதலா
லோடுமொகுமுனதேகமோதுமிவையூனமாகிபுனமாறுகோள்
கூடுமொகுமநுபூதிதானுமதுகூடிடாதறிவிலாமையே. (உ)

நீதியாலொளிகொள்பானுவானதுகனீரிலேவிகழுமாறுபோ
லாதிதானுருவமாயகாயமதினமேவியாவதிலையாகுமாரு
தீதிலாவருவமாகலானிழலகளசேரவேதிடமில மையால
ஓதிலோரகலினீரிலேயொருவாகாணலாமில துனேகமே. (௩)

வேறுவாயில்புலனேடுமேன்மனமுமேவிடாது பிரமாணமுங
கூறிடாதறிவுதானெனுவுணாதலகோடீமுயலினுடிரு
பீறிலாதபரமேகமேயெனவியமபுநீயிசையுஞானமும்
பேறதாவதிலபேதமானவிதுபேணவேயுளதும்பசலே. (ச)

இலகுசோதிமணியெனவுமேகமெனினிதனிலேகமாதுவிலகினுய்
குலவுகாசமொளியதுவுநீடிவளர்குணமுநாடுமெதாகுணியுமாம்
பலவுமாகுணமொருவுமேகமதுவெனவுநீபகரினிகரிலா
புலகமானதனையுதவுமாறதிலையுணர்வுதானுமிலையுணரிலே. (ரு)

